# அடிப்படைக் கிறிஸ்தவப் பயிற்சி

## ( BASIC CHRISTIAN TRAINING )

Autor : O.J. Gibson

Translator : E. Ravi Kumar

Address to Contact : E. Ravi Kumar
½ Vasanth
Christu Nager
Nagercoil - 629 003
Kanyakumari District
Tamil Nadu
South India

**Tamil Christian Assembly**
Gollierplatz 12
80339 München



THANKS TO OUR ALMIGHTY GOD. MAY GOD BLESS YOU AND MAY HOLY SPIRIT LEAD YOU

## To the Readers

Dear Beloved Brother/Sister, Thank you for downloading this Ebook. Please note that this Ebook is copyrighted by the author of the book or the publisher of the book or as mentioned in the book. Word of God Ministries is just providing you this ebook as free of cost and it is for your personal use not for commercial purposes.

## To the Copyright Owners

Dear Copyright owners, Word of God Ministries is doing this Free Ebook service to help the people who are not able to find the printed copy of your book from various countries arround the world and to the people who are restricted to have the printed materials in their house. And this will help the readers to improve their spiritual life.

If you want your new books to be published here as Free Ebook, kindly EMAIL US at wordofgod@wordofgod.in or CALL US at +91 7676505599, +91 9964747708, +91 9964422489

If you feel that your book should not be published, we are KINDLY REQUESTING YOU TO EMAIL US at wordofgod@wordofgod.in or CALL US at +91 7676505599, +91 9964747708, +91 9964422489. We will remove it from our Free Service as early as possible.




## About Word of God Ministries

**Word of God Ministries** was founded in the year 2007, July 29th with the grace and leading of Almighty God by Bro. Yesudas Solomon as an interdenominational ministry. The popular ministry "**Word of God Team**" is one among our various ministries. Now this ministry has 10 branches such as **1)** Word of God Team, **2)** Mobile Ministry, **3)** Internet Ministry, **4)** Deaf Ministry, **5)** Blind Ministry, **6)** Tribal Ministry, **7)** Computer Ministry, **8)** Audio Ministry, **9)** Video Ministry and **10)** Printing Ministry. We all thank our God with full of our heart for using us in His Great Ministry. We need your continuous prayer support. Our vision is to "Reach the Unreached through Technology". Our websites are: www.WordOfGod.in, www.ChristiansMobile.com, www.FreeChristianEbooks.in, www.IndianBibles.net, www.ChristianAudioBooks.in, www.WordOfGodTeam.com, www.WordOfGodMinistry.in, www.KannadaBible.net, www.KannadaChristian.net, www.PrayForKarnataka.com

*அடிப்படைக் கிறிஸ்தவப் பயிற்சியை நல்முறையில் பயன்படுத்துவது எப்படி என்பதற்கு பின்வரும் ஆலோசனைகளைப் பின்பற்றுவது பயனுள்ளதாயிருக்கும்.*

1) தேவனிடம் வேண்டிக்கொள்ளுங்கள், தேவனுடைய வசனத்தைப் புரிந்துகொள்தற்கு நீங்கள் அவரிடமே உதவிகோருங்கள். சங்கீதம் 119:130ல் காணப்படும் வாக்குத்தத்தத்தை உரிமைகொண்டாடுங்கள்: ***உம்முடைய வசனத்தின் பிரசித்தம் வெளிச்சம் தந்து, பேதைகளை உணர்வுள்ளவர்களாக்கும்***. தேவனுடைய உதவியின்றி அவருடைய வார்த்தையை உண்மையாகத் தெரிந்துகொள்வது இயலாத காரியமாகும் (2.கொரி.2:14).

2) வகுப்புக்கள் ஆரம்பிக்குமுன் பாடங்களைத் தயார்செய்துகொள்ளவும்.

அ) வீட்டுப் பாட வினாக்களுக்கு விடை எழுதுங்கள். வழிகாட்டியில் கூறப்பட்டுள்ள அனைத்துக் கருத்துக்களையும் பின்பற்றவும். ஏதாவது வினாவை பற்றிக் குழப்பம் இருக்குமானால் அவ்வினாவை விட்டுவிட்டு அடுத்த வினாவிற்குச் செல்லவும்.

ஆ) புத்தகக் குறிப்பை வாசிக்கவும். பாடத்தை ஒன்றுக்கு மேற்பட்ட தடவை படிக்கவும். முக்கிய கருத்துக்களுக்கு அடிக்குறியீடிடவும். புரிந்துகொள்ளாதவைகளை குறித்துக்கொள்ளுங்கள். கேள்வி இருக்குமானாலும் குறித்துக்கொள்ளுங்கள்.

இ) கொடுக்கப்பட்டுள்ள எல்லா வேதவசனங்களையும் பார்க்கவும். புத்தகத்தின் பெயர், அதிகார எண், வசன எண் ஆகியவை முக்காற்புள்ளியால் பிரிக்கப்பட்டிருக்கும். (உதாரணம்: கொலோ.3:23).

3) வகுப்புக்களில் தவறாமல் பங்குபெறவும். சிறுகுழுக்களாக பகிர்ந்துகொள்வதற்கும் அதேபோல் விரிவுரையாற்றுவதற்கும் நேரம் உள்ளது. உங்கள் வினாக்களும், விளக்கங்களும், பிறர் தங்கள் கருத்தை பகிர்ந்துகொள்ள உற்சாகப்படுத்தும்.

4) உங்கள் புத்தகக்குறிப்புகளையும், உபகரணங்களையும் பத்திரப்படுத்துங்கள். மேலும் படிப்பதற்கும், பிறரோடு பகிர்ந்துகொள்வதற்கும் இவைகள் உதவியாக இருக்கும்.

# உள்ளே.....

## பாடம் 1: சுவிசேஷத்தின் பரந்த காட்சி

கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் வாழ்க்கையையும், ஊழியத்தையும் குறித்துப் பரிசுத்த ஆவியானவர் அருளுகிறபொழுது இவ்வாறு தொடங்குகிறார். தேவனுடைய குமாரனாகிய இயேசு கிறிஸ்துவினுடைய சுவிசேஷத்தின் ஆரம்பம் (மாற்.1:1). கிறிஸ்துவானவர் வேத வாக்கியங்களின்படி நமது பாவங்களுக்காக மரித்து, அடக்கம்பண்ணப்பட்டு, மூன்றாம் நாளில் உயிர்த்தெழுந்தார் (1.கொரி.15:3-4), என்பது கிறிஸ்தவ விசுவாசத்தின் அசைக்கமுடியாத அடிப்படைக் கருத்தும், இம் மனித சமுதாயத்தினரால் கேட்கப்பட்டுள்ள மிகப்பெரிய நற்செய்தியும் ஆகும். நற்செய்தி யோவான் 3:16ல் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளது. தேவன் தம்முடைய ஒரேபேறான குமாரனை விசுவாசிக்கிறவனெவனோ, அவன் கெட்டுப்போகாமல் நித்திய ஜீவனை அடையும்படிக்கு, அவரைத் தந்தருளி, இவ்வளவாய் உலகத்தில் அன்புகூர்ந்தார். உண்மையிலேயே இது ஒரு நற்செய்திதான் (சுவிசேஷம்தான்). மனிதன் உண்மையிலேயே தேவனிடத்தில் வருவதற்கு ஒரு வழி திறக்கப்பட்டிருக்கிறது. இதைப் பற்றி பூமியிலுள்ள சகல சிருஷ்டிகளிற்கும் கூறுவதற்கு தேவன் கட்டளையிட்டுள்ளார் (மாற்.16:15).

நமக்கு சுவிசேஷத்தைப் பற்றி என்ன தெரியும்? சுவிசேஷத்தின் ஆதாரம் தேவன். மனிதன் அல்ல. இது தேவனுடைய சுவிசேஷம் (ரோ.1:1 ; கலா.1:11 ; 1.தெச.2:2,9). இதன் மைய நோக்கம் ஜீவனுள்ள ஒரு நபரைப் பற்றியது. தேவனுடைய குமாரனும், நம்முடைய தேவனுமாகிய இயேசு கிறிஸ்துவின் சுவிசேஷம் (ரோ.1:4; 5:19). இது நம்முடைய இரட்சிப்பின் சுவிசேஷம் (எபேசி.1:13). தேவனுடைய கிருபையின் சுவிசேஷம் (அப்.20:24). நித்திய சுவிசேஷம் (வெளி 14:6) என நமக்கு அறிமுகப்படுத்தப்படுகிறது.

வாழ்வா, சாவா என்கிற இச் செய்தியை ஒரு மனிதனும் அலட்சியம் செய்யமுடியாது. தேவன் மனிதனை சுவிசேஷத்திற்கு கீழ்ப்படிய அழைக்கிறார். கீழ்ப்படிய மறுப்பவர்கள் நியாயத்தீர்ப்பிற்கு உள்ளாவார் என எச்சரிக்கிறார். (2.தெச.1:7; 1.பேது.4:17 ; ரோ.10:16). விசுவாசம் மிகத் தேவையானது ஒன்றாக இருந்தாலும், சுவிசேஷத்தைத் தெரியப்படுத்துதல் உடனடித் தேவையாகும். (1.கொரி.9:16 ; அப்.1:8). மாறுபாடான வேறு சுவிசேஷத்தை ஒருவன் சொல்வானாகில் அவன் சபிக்கப்பட்டவன் (கலா.1:7-9). இரட்சிக்கப்படுவதற்கு விசுவாசத்தோடு, கிரியைகளும் அல்லது சடங்குகளும் வேண்டும் என்று கூறுகிறவர்களுக்கு இவ் வசனம் பொருந்துவதாய் இருக்கிறது.

சுவிசேஷம் எந்த முன்னறிவிப்புமின்றி தேவனிடத்திலிருந்து பூமிக்குள் தீடிரென்று வந்ததல்ல. பரிசுத்த வேதாகமத்தில் தொடக்க அதிகாரங்களில் கூறப்பட்டுள்ளதுபோல மனிதன் பாவத்திலிருந்தும் சாவிலிருந்தும் மீட்கப்படவேண்டும் என்று வெளிப்படையாகவே வரலாறு தொடங்கிய காலத்திலேயே கூறப்பட்டுள்ளது. தேவனால் வாக்குத்தத்தம் பண்ணப்பட்ட இரட்சகர் (விடுவிப்பவர்) மூலம் தேவன் இதற்கு ஒரு பரிகாரத்தை முற்காலத்திலேயே ஏற்படுத்தியுள்ளார் (ஆதி.3:15). பழைய ஏற்பாட்டின் காலத்தில் பலிகள் மூலம் சிந்தப்பட்ட இரத்தம் கிறிஸ்துதன்னை சிலுவையில் பலியாக்கினதை சுட்டிக்காட்டுவதாகும். அப்பலி என்றென்றைக்கும் நிலைத்து நிற்கிற இறுதியான பலி. (எபி.10:1-4,10-12). பழைய உடன்படிக்கை ஒரு புதிய உடன்படிக்கையைக் குறித்து வாக்குத்தத்தம் பண்ணியிருக்கிறது. அப் புது உடன்படிக்கை பழைய உடன்படிக்கையைவிட தலை சிறந்தது (எரே.31:31-33). தேவனுடைய இரட்சகர் எல்லா மனிதருக்கும் உரியவர் (ஏசா.42:1,6). தீர்க்கதரிசனமும் அதன் நிறைவேறுதலும் ஒரே தேவனோடும், ஒரே விசுவாசத்தோடும், ஒரே இரட்சிப்போடும் பின்னிப்பிணைந்துள்ளது (எபேசி.4:4,6). தேவனிடத்தில் சேர ஒரேயொரு வழிதான் உண்டு (யோ.14:6 ; அப்.4:12).

# தேவனிடமிருந்து பிரிதல்

தேவன் மனிதனை அவருடைய மகிழ்ச்சியாகவும், மகிமையாகவும் படைத்தார் (வெளி 4:11 ; ஏசா.43:7). தேவனுடைய நித்திய நோக்கம் மனிதன் அவருடைய (தேவனுடைய) சாயலையும், ரூபத்தையும் கொண்டவனாக இருந்து அவரின் மகிமையை வெளிப்படுத்தவேண்டும் என்பதாகும் (ஆதி.1:26-27 ; ரோ.8:29). தேவன் மனிதனைச் சுயாதீனமாகப் படைத்தார். உலகில் யாரும் அவனைக் கட்டுப்படுத்துகிற நிலையில் வைக்கவில்லை. மனிதன் தேவனை நேசிக்கவும், நேசிக்காமல் இருப்பதற்கும் அவனுக்குச் சுதந்திரம் இருக்கிறது.

### 1) மனிதனுடைய சோதனை

ஏதேன் தோட்டத்தில் மனிதன் தேவனோடுள்ள ஐக்கியத்தை அனுபவித்து வந்தான். அந்த ஐக்கியம் தொடர்ந்து நிலைத்திட ஒரேயொரு கட்டுப்பாட்டைத் தேவன் மனிதன்மீது விதித்தார். அவன் நன்மை தீமை அறியத்தக்க மரத்தின் கனியைப் புசிப்பதற்குத் தடைவிதித்தார். தேவனுடைய இக் கட்டளைக்கு கீழ்ப்படிவதோ அல்லது கீழ்ப்படியாமல் இருப்பதோ, நம்புவதோ அல்லது நம்பாமல் இருப்பதோ மனிதனைச் சார்ந்ததாக இருந்தது (ஆதி.2:15-17).

### 2) மனிதனுடைய கீழ்ப்படியாமை

சர்ப்பத்தின் வடிவிலான சாத்தான் தேவனுடைய வார்த்தைக்கு மாறாக விலக்கப்பட்ட கனியைப் புசித்தால் சாகமாட்டீர்கள் என்றது. தேவனால் நேசிக்கப்பட்ட மனிதன் சாத்தான் கூறிய பொய்யை நம்பி தேவனுடைய வார்த்தையை நம்பாமற்போனான். இக் கீழ்ப்படியாமை மனிதனின் வீழ்ச்சிக்கு அடிகோலியது (ஆதி.3:1-7). இதன் விளைவு ஆவிக்குரிய மரணம் ஆயிற்று. அதாவது தேவனோடுள்ள ஐக்கியத்திலிருந்து மனிதன் விடப்பட்டு, அவரைவிட்டுப் பிரிந்து சென்றான் (ஆதி.3:8). இப் பிரிவு சரீரமரணத்தைக் கொண்டுவந்தது. சரீர மரணம் என்பது சரீரத்தைவிட்டு ஆத்துமா பிரிவதாகும் (ஆதி.5:3-5).

### 3) மனிதனுடைய பிரச்சனை

தேவனுடைய வார்த்தைக்கு கீழ்ப்படியாததால் ஏற்பட்ட விளைவு முதல் மனிதனோடுமட்டும் நின்றுவிடவில்லை. பாவமும் மரணமும் ஆதாம் மூலமாக இந்த மனிதஇனத்தை முழுவதுமே ஆளத்தொடங்கியது (ரோ.5:12). மனிதனுடைய சுபாவம் மாறியது. அவன் தேவனுக்கு விரோதியானான். சுபாவத்திலும், செயலிலும் மனிதன் பாவியாக மாறினான் (எபேசி.2:3 ; ரோ.3:23). பாவத்தின் சம்பளம் மரணம் (ரோ.6:23). மரணமே பாவத்தின் தண்டனை (எசேக்.18:4). இப்பொழுது மனிதனே அக்கிரமங்களினாலும் பாவத்தினாலும் மரித்தவன் ஆனான் (எபேசி. 2:1-5). இந்த மரணம் ஆவிக்குரிய மரணம் ஆகும். அதாவது தேவனிடத்திலிருந்து பிரிதல் என்பதாகும். மரணம் பாவத்தின் பயங்கரத்திற்கு சாட்சியாக இருக்கிறது (எபி.9:27 ; யாக்.1:15). சரீரத்திலிருந்து ஆத்துமாபிரிவது சரீரமரணம். தேவனிடத்திலிருந்து ஆத்துமா நித்தியமாகப் பிரிதல் இரண்டாம் மரணம் (வெளி 20:11-15). இந் நிகழ்கால வாழ்க்கையில்கூட பாவந்தான் நோய்களுக்கும் வேதனைகளுக்கும் தேவனைவிட்டுத் தூரமாய் இருப்பதற்கும் காரணமாகும்.

# பாவிக்குப் பரிகாரம்

வேதம் கூறுகிறது தேவன் வீழ்ந்துபோன தம்முடைய சிருஷ்டியை நேசிக்கிறார் (எபேசி.2:4-5 ; 1.யோ.4:10). ஆனாலும் மனிதனுடைய ஆவிக்குரிய மரணத்திலிருந்து அவனை இரட்சிப்பதற்கு தேவன் சில கஷ்டமான பணிகளைச் செய்யவேண்டி இருந்தது. தேவன் நீதிபரர். அவர் நீதிசெய்பவர். அவர் நீதிபரராய் இருக்கிறபடியால் பாவத்தின் தண்டனையாகிய மரணத்தைக் கண்டிப்பாகக் கொடுக்கவேண்டும் (யாத்.34:7). தேவன் நீதிபரராக இருந்தாலும் இரக்கமுள்ள வராகவும், அன்புள்ளவராகவும் இருக்கிறார். வீழ்ந்துபோன தன்னுடைய சிருஷ்டி வீழ்ச்சியிலிருந்து

மீட்கப்படவேண்டும் என்று மனப்பூர்வமாக ஏக்கமுள்ளவராக இருக்கிறார் (2.பேது.3:9). பரிபூரண நீதியும் இரக்கமும் ஒன்றை ஒன்று எவ்வாறு ஒப்புரவாக்க முடியும்?

## 1) தேவனுடைய தீர்வு

இயேசு கிறிஸ்துவின் மூலமாக தேவனுடைய நீதிக்கு வழி கண்டுபிடிக்கப்பட்டது. எப்படியென்றால் பாவத்தின் சம்பளம் அவர்மூலமாய் நிறைவேற்றப்பட்டதால் அவருடைய நீதி உறுதிசெய்யப்பட்டது. நித்திய மரணத்திலிருந்து மனிதனை மீட்டுக்கொண்டதால் தேவன் அன்புள்ளவர் என்பது நிறைவேறியது. மனிதனுக்காக அவனுடைய தண்டனையை கிறிஸ்துவே ஏற்றுக்கொண்டார். இதுவே பரிகாரமாகும் (ஏசா.53:4-6). கிறிஸ்துவே பாவத்தைச் சுமக்கிறவர் (1.பேது.2:24 ; 3:18). பாவத்தின் சம்பளம் மனிதனுடைய ஜீவனாக இருக்கிறபடியால் குமாரனே மனிதனாக வந்தார் (அப்.2:22). மனித இனத்தின்மீது காணப்படும் மரணஆக்கினையிலிருந்து மனிதனை விடுவிப்பதற்காக பாவமறியாத கிறிஸ்துவை தேவன் நமக்காகப் பாவமாக்கினார் (2.கொரி.5:21). அவருடைய ஜீவன் அளவிடமுடியாத மதிப்புடையது. ஆகையால்த்தான். எல்லோரையும் மீட்கும்பொருளாகத் தம்மை ஒப்புக்கொடுத்தார் (1.தீமோ.2:6). தேவனுடைய இருதயம் எல்லோரைக்குறித்தும் அக்கறை கொண்டுள்ளதாக இருக்கிறது (1.தீமோ.2:4). தேவன் ஒருவரே மனிதனுக்கு இரட்சகராக இருக்கமுடியும் என்பது குறிப்பிடத்தக்கதாகும் (ஏசா.43:11 ; 45:21). இயேசு கிறிஸ்து பாவத்தின் சம்பளம் மரணம் என்பதை நிறைவேற்றிமுடித்தார். ஜனங்களின் இரட்சகர் ஆனார் (மத்.1:21-23).

## 2) தேவனுடைய வெளிப்படுத்தல்

ஆதியாகமத்தின் தொடக்க அதிகாரங்களில் தேவனுடைய திட்டமானது விதை (வித்து) உருவில் வெளிப்பட்டது. நம்முடைய முதல் பெற்றோர்கள் தங்கள் பாவத்தை மறைப்பற்கு தங்கள் கைகளினாலே உண்டுபண்ணிய அத்திஇலை ஆடை அவர்கள் சுயமுயற்சிக்கு அடையாளமாக இருக்கிறது (ஆதி.3:7). ஆனால் அம் முயற்சி அவர்களின் நிர்வாணத்தையும், பாவத்தையும் பரிசுத்த தேவனுக்குமுன் மறைக்கவில்லை. தேவன் அவர்களுக்கு தோல் உடைகளை உடுத்துவித்தார் (ஆதி.3:21). அத்தியிலை உடைக்குப் பதிலாக தோலுடை வருவதற்கு இரத்தம் சிந்தப்பட்டது. மிருகங்களைப் பலியிடுவது இவ்வாறு ஆரம்பமானது. முதல்ப் பெற்றறோருக்குப் பின்வந்த சந்ததியினர் பலியைக் குறித்து மேலும் விளக்கம்கொடுத்தனர். காயீன் நிலத்தின் கனிகளைத் தேவனுக்குக் காணிக்கையாகப் படைத்தான். ஆபேல் இரத்தபலியைத் தேவனுக்குக் கொடுத்தான். தேவன் ஆபேலின் பலியை அங்கீகரித்தார். காயீனீன் காணிக்கை மனிதனின் சுயமுயற்சியால் தேவனை நெருங்குவதற்கு அடையாளமாக இருக்கிறது (ஆதி.4:3-5). கிரியைகளினாலே தேவனை அண்டிக்கொள்ளமுடியும் என்றும், அவ்வழியைப் பின்பற்றுகிறவர்களை காயீன் வழியைப் பின்பற்றுகிறவர்கள் என்றும் அழைக்கலாம் (யூதா 11). மனிதன் தேவனிடத்திற்குச் செல்லுவதற்கு அவனுடைய சுயகிரியைகள் உதவாது. ஆனால் இரத்தத்தின்மூலம் அவரண்டை செல்லலாம். இவற்றைப் பற்றிய விளக்கங்களை யூதருடைய முக்கிய பண்டிகையாகிய பஸ்கா தெளிவாக எடுத்துக் கூறுகிறது. இஸ்ரவேலர் எகிப்திலிருந்து புறப்படுவதற்கு முன்னால் ஒவ்வொரு வீட்டாரும் பழுதற்ற ஆட்டுக்குட்டியைப் பலியிட்டார்கள். அதன் இரத்தம் தேவனுடைய நியாயத்தீர்ப்பிலிருந்து முதற்பேறானவர்களைக் காக்கும்பொருட்டு ஒவ்வொரு வீட்டுவாசலிலும் தடவப்பட்டது. இந்த இரத்தபலினால் தேவன் இஸ்ரவேல் ஜனங்களை மரணத்திலிருந்து தப்புவித்தார். இதுவே பஸ்கா ஆகும் (யாத்.12:3-14,21-17). பழை ஏற்பாட்டில் காணப்படுகின்ற பலிகள் இதை நமக்குத் தொடர்ந்து போதிக்கிறது. இவ்விதமான பலிகள் வரப்போகிற கிறிஸ்துவின் சிலுவை மரணத்திற்கு நிழலாய் இருக்கிறது (கொலோ.2:17). பழைய ஏற்பாட்டில் கூறப்பட்டுள்ள

பலிகள் பாவத்தை நிவர்த்திசெய்யாது. இருந்தாலும் அவைகள் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிற வரப்போகிற பலியாகிய கிறிஸ்துவைப் பற்றியது (எபி.10:1-4). பாவத்திற்காக என்றென்றைக்கு மாகச் செய்யப்பட்ட பலி இயேசு கிறிஸ்து சிலுவையில் தன்னை ஒப்புக்கொடுத்ததாகும். இந்தக் கிறிஸ்துவே ஒவ்வொரு

விசுவாசியின் பாவத்தைப் போக்குகிற பலியாக இருக்கிறார் (எபி.9:12-14 ; 10:10,12). இவ்வாறாக ஆதியிலிருந்தே விசுவாசமே இரட்சிப்பின் அடிப்படை என்பதைத் தேவன் உண்டுபண்ணியிருக்கிறார் என்பதைக் காண்கிறோம். தேவனுடைய குமாரனாகிய இயேசு கிறிஸ்து மனிதனாக இவ்வுலகத்தில் வந்தபோது தேவனுடைய இத்திட்டம் நிறைவேறியது (எபி.1:1-2). இதுவே காலா காலமாக தேவனால் மறைத்துவைக்கப்பட்ட இரகசியமாகவும் இருந்தது (1.கொரி.2:7-8).

### 3) தேவனுடைய வழி

இயேசு கிறிஸ்து சிலுவையில் செய்துமுடித்த தியாகமே தேவனிடத்தில் நாம் செல்லுவதற்கு வழியாக இருக்கும்போது பழைய ஏற்பாட்டு விசுவாசிகள் எப்படி இரட்சிக்கப்பட்டார்கள். நாம் எப்படி விசுவாசத்தால் இரட்சிக்கப்பட்டிருக்கிறோமோ அவ் விசுவாசமே அவர்கள் இரட்சிப்பிற்கும் அடிப்படையாக இருந்தது. எவ்வாறெனில் கிருபையினாலே விசுவாசத்தைக்கொண்டு இரட்சிக்கப்பட்டீர்கள். கிரியைகளினால் இரட்சிப்பு இல்லை (எபேசி.2:8-9). பழைய ஏற்பாட்டில் வாக்குத்தத்தங்களாகக் குறிப்பிடப்பட்டுள்ள இரட்சகராகிய மேசியாவை காணமலே விசுவாசத்தோடே இப் பழைய ஏற்பாட்டு விசுவாசிகள் மரித்தார்கள். இவர்கள் மரிப்பதற்கு முன்னாலே கிறிஸ்துவைப் பற்றிய பழைய ஏற்பாட்டு வாக்குத்தத்தங்கள் உண்மை என்பதை அறிந்து விசுவாசித்து அவைகளை அணைத்துக்கொண்டார்கள் (எபி.11:13). தேவன் இப்படிப்பட்ட அவர்கள் விசுவாசத்தை நீதியாக எண்ணினார் (ரோ.4:3 ; யாக்.2:23). தேவன் எவ்வாறு நம்மைக் கிறிஸ்துவின் மூலம் இரட்சித்தாரோ அதுபோல் சிலுவையில் நிறைவேற்றப்பட்ட செயலே அவர்கள் இரட்சிப்பிற்கும் அடிப்படையாகும் (2.கொரி.5:21): பழைய ஏற்பாட்டு விசுவாசிகளுக்கும் சுவிசேஷம் பிரசங்கிக்கப்பட்டது (எபி.3:16-4:2 ; 1.பேது.4:6). அவர்கள் தேவனை விசுவாசித்தார்கள் அதற்கு அடையாளமாக தேவன் அவர்களுக்குக் கூறிய கட்டளைக்குக் கீழ்ப்படிந்தார்கள். யோவான்ஸ்நானகனும், கிறிஸ்து வெளிப்படையாக தன் ஊழியத்தைத் தொடங்குவதற்கு முன்பாக இதையே பிரசங்கிக்கிறார். மனம்திரும்பி சுவிசேஷத்தை விசுவாசியுங்கள் என மக்களைப் பார்த்துக் கூறினார் (மாற்.1:15). கர்த்தராகிய இயேசு கிறிஸ்து இராஜ்ஜியத்தின் சுவிசேஷத்தைப் பிரசங்கித்தார் (மத்.4:23 ; 9:35). இயேசு கிறிஸ்துவை இராஜாவாக ஏற்றுக்கொள்ளல் அவருடைய இராஜ்ஜியத்திற்குள் பிரவேசிப்பதாகும். ஆகவேதான் அவர் கூறுகிறார். தேவனுடைய இராஜ்ஜியம் இதோ உங்களுக்குள் (உங்கள் மத்தியில்) இருக்கிறது என்றார். அப்பொழுது இயேசு கிறிஸ்து அவர்கள் மத்தியில் இருந்தார் (லூக்.17:21).

### 4) தேவனுடைய திருப்தி

பிதாவாகிய தேவன் அவருடைய குமாரன்மீது பிரியமாக இருக்கிறார் (மத்.3:17). கிறிஸ்து சிலுவையில் செய்துமுடித்த வேலையில் தேவன் திருப்தி அடைந்ததால் அவரின் மரணம் பாவத்தின் சம்பளத்தைக் கொடுத்தது. நாம் தேவனுடைய சமூகத்தில் சேருவதற்கு வழிவகுத்தது. முடிந்தது என்பது (யோ.19:30) பாவத்திற்காக மேலும் பலிசெலுத்த வேண்டியதில்லை. நம்முடைய அக்கிரமங்கள் இனி நினைக்கப்படுவதில்லை (எபி.10:17-18). இயேசு கிறிஸ்துவினால் தேவன் நமக்கு அனுகூலமானவைகளைச் செய்தார் (எபி.2:17 ; 1.யோ.2:1). தேவஆட்டுக்குட்டியானவர் உலகத்தின் பாவத்திற்கான தண்டனைகளை முழுவதுமாக ஏற்றுக்கொண்டார் என்பதைக் குறிக்கிறது (யோ.1:29 ; 1.யோ.2:2). கிறிஸ்து செய்துமுடித்த எல்லா வேலைகளையும் தேவன் முழுவதுமாக ஏற்றுக்கொண்டுள்ளார் என்பதற்கு அவரின் உயிர்த்தெழல் சாட்சியாக உலகிற்குக் காட்சி அளிக்கிறது (அப்.22:24).

## விசுவாசியின் இரட்சிப்பு

ஒவ்வொருவரும் இரட்சிப்பைப் பெறுவதற்கு தேவனிடத்தில் வரவேண்டும். கிறிஸ்துவைக் கர்த்தர் என்றும் இரட்சகர் என்றும் ஏற்றுக்கொள்ளவேண்டும் (யோ.1:12-

13). தேவனுக்குச் செவிசாய்த்து அவருக்குக் கீழ்ப்படிவதை அடிப்படையாக வைத்து இன்றைய நாட்களில் மக்களை இரண்டு கட்டமாகப் பிரிக்கலாம். பக்தியுள்ளவர்கள் அல்லது பக்தியற்றவர்கள். இவர்கள் வெவ்வேறான ஆவிகுரிய குடும்பத்தைச் சார்ந்தவர்களானபடியால் வெவ்வேறான பிதாக்களையும், கனிகளையும் நோக்கங் களையும் கொண்டவர்களாக இருக்கின்றனர்.

### 1) கீழ்ப்படியாமையின் பிள்ளைகள் – (எபேசி.2:2 5:6)

தேவனோடு இவர்கள் கொண்டுள்ள செயற்பாடு இப்படிப்பட்ட பெயரைக் கொடுக்கிறது. இவர்களைக் கோபாக்கினியின் பிள்ளைகள் (எபேசி.2:3) என வேதம் கூறுகிறது. இவர்களின் உண்மையான பிதா பிசாசு. ஆகவே இவர்கள் பிசாசின் பிள்ளைகள் (1.யோ.3:8,10) என்றும் அழைக்கப்படுகின்றனர்.

### 2) தேவனுடைய பிள்ளைகள் – (ரோ.8:16 – 17 ; கலா.3:26)

இவர்களை கீழ்ப்படிதலின் பிள்ளைகள் என்றும் அழைக்கலாம். ஏனென்றால் இவர்கள் விசுவாசத்திற்கு கீழ்படிந்தவர்களாக இருக்கிறார்கள் (ரோ.16:26). விசுவாசத்திற்குக் கீழ்ப்படிதல் என்பது இயேசு கிறிஸ்துவிற்குக் கீழ்ப்படிதல் என்பதாகும் (1.பேது.1:2). இயேசு கிறிஸ்துவிற்குக் கீழ்ப்படிதல் சுவிசேஷத்திற்குக் கீழ்ப்படிதல் ஆகும். இவர்கள் விசுவாசமார்க்கத்தார்களாக இருப்பதனால் ஆபிரகாமின் பிள்ளைகளாக இருக்கிறார்கள். அவ்வாறு அழைக்கவும்படுகிறார்கள் (கலா.3:7). கர்த்தராகிய இயேசு கூறினார் ஆபிரகாமின் பிள்ளைகள் ஆபிரகாம் செய்ததைச் செய்வார்கள் (யோ.8:39). வாழ்க்கையில் ஏற்பட்ட மாறுதல்களினால் இவர்கள் ஒளியின் பிள்ளைகள் என்று அழைக்கப்படுகின்றனர் (யோ.12:36 ; 1.தெச.5:5). இவர்கள் நற்கிரியைகளினால் இரட்சிக்கப்படவில்லை. ஆனால் நற்கிரியைகள் செய்வதற்கு இரட்சிக்கப்பட்டிருக் கிறார்கள் (எபேசி.2:10 ; தீத்து 3:8). இரட்சிப்பின் திட்டம் என்னவென்றால் பாவங்களுக்குச் செத்து நீதிக்கும் பிழைத்தல் ஆகும் (1.பேது.2:24).

இங்கு கூறப்பட்டுள்ள இரண்டு விதமான குடும்பங்களின் வித்தியாசம் அவர்களிடம் உள்ள விசுவாசத்தின் அடிப்படையில் உள்ளது. கீழ்ப்படியாமையின் பிள்ளைகள் காயீனைப் பின்பற்றி தங்களுடைய சுயமுயற்சியில் நம்பிக்கை உள்ளவர்களாக தேவனுக்கு முன் வாழ்கிறார்கள். அவர்கள் சுவிசேஷத்திற்குக் கீழ்ப்படியமாட்டார்கள். மேலும் கிறிஸ்துவால் முடிக்கப்பட்ட செயலின் அடிப்படையில் தேவனிடத்தில் வரமாட்டார்கள். அவர்கள் தங்களுக்கு நன்மையானவற்றிலும் தங்களால் தெரிந்துகொள்ளப்பட்ட எண்ணங்களிலும் வாழ்விலும் நம்பிக்கை வைத்திருப்பார்கள். இதற்குமாறாக தேவனுடைய பிள்ளைகள் அவர்களுக்கு ஒரு இரட்சகர் தேவை என்பதை அறிந்திருப்பார்கள். பாவத்தைவிட்டு மனந்திரும்பி யிருப்பார்கள் (லூக்.13:3 ; 15:7 ; 24:47 ; அப்.2:38 ; 3:20-21 ; 26:20). அவர்கள் இரட்சிக்கப்படுவதற்கு கிறிஸ்துவின் இரத்தத்தின்மீது மட்டுமே விசுவாசமுள்ள வர்களாக இருப்பார்கள் (ரோ.3:26). அவருடைய இரத்தம் ஒன்றே நம்மை பாவமற சுத்திகரிக்கின்றது (1.யோ.1:7 ; வெளி 1:6).

## முடிவுரை

உலகத்தைப் படைப்பதற்கு முன்னமே மனிதனுடைய இரட்சிப்பைக் குறித்து தேவன் மனதில் திட்டமிட்டிருந்தார். தம்மை நேசிப்போரும் தம் வார்த்தைக்குக் கீழ்படிபவரோடும் தேவன் ஐக்கியம் கொள்ளவேண்டும் என்று ஆவல் உள்ளவராக இருந்தார். மனிதனுடைய கீழ்ப்படியாமை தேவனை அதிர்ச்சிக்குள்ளாக்கவில்லை. மாறாக தேவனுடைய மனதிலே தேவஆட்டுக்குட்டி உலகத்தோற்றத்திற்கு முன்பே அடிக்கப்பட்டவராக குறிப்பிடப்பட்டிருந்தார் (1.பேது.1:19-20 ; வெளி 13:8). காலம்நிறை வேறினபோது தேவன் தம்முடைய குமாரனை அனுப்பினார் (கலா.4:5). பூர்வகாலத்தில் பங்கு பங்காகவும் வகைவகையாகவும் தீர்க்கதரிசிகள் மூலமாய்ப் பேசப்பட்டவர் இப்பொழுது குமாரன் மூலமாய்ப் பேசப்படுகிறார் (எபி.1:1-2). சுவிசேஷம் மனிதனுக்கு இதைக் கூறுகிறது. கிறிஸ்து மனிதனுடைய பாவத்திற்காய் மரித்தார். பாவத்தின்

சம்பளத்தைக் கொடுத்தார். தேவனுடைய நீதியைச் சரிக்கட்டினார். மனிதனுடைய நீதிக்காக குமாரன் உயிர்த்தெழுந்தார். தேவன் தம்முடைய குமாரனாகிய இயேசு கிறிஸ்துவின்மீது விசுவாசம் உள்ளவர்களாய் அவரிடம் வருவோருக்கு நித்திய ஜீவனை அளிக்கிறார். குமாரனை ஏற்றுக்கொண்டு அவரை உடையவனுக்கு நித்தியஜீவன் உண்டு (யோ.1:12 ; 1.யோ.5:12). விசுவாசியாதவன்மீது தேவகோபம் நிலைநிற்கும் (யோ.3:36). சுவிசேஷத்திற்கு நீங்கள் கீழ்ப்படிகிறீர்களா? கீழ்ப்படிதலின் பிள்ளையாக ஒளியின் பிள்ளையாக தேவனுடைய பிள்ளையாக நீங்கள் நடக்கிறீர்களா?

## பாடம் 1 ற்கான கேள்விகள்

1) பின்வருகின்ற வசனங்களின் அடிப்படையில் தேவன் மனிதன்மீது கொண்டுள்ள நோக்கம் என்ன? (ஆதியாகமம் 1:26-27 ; ஏசாயா 43:7 ; ரோமர் 8:29 ; வெளி 4:11)

2) தேவனைப் பிரியப்படுத்துவதற்கு ஆதாமுக்கு இருந்த சந்தர்ப்பம் என்ன (ஆதி.2:15-17)? இந்தச் சோதனையில் ஆதாமின் பிரதியுத்தரம் என்ன? அவன் தேவனுடைய வார்த்தையின்மீது கொண்டுள்ள நம்பிக்கையைக் குறித்துக் கூறுக. (ஆதி.3:1-7)?

3) பாவம் என்கின்ற வார்த்தையை விளக்கப் பின்வரும் வசனங்களைப் பயன்படுத்துக. (ஏசாயா 53:6 ; மத்.5:28 ; ரோமர் 3:23 ; 1.யோவான் 3:4 ; யாக்கோபு 3:17)

வேதாகமம் பாவத்திற்குத் தரும் விளக்கம் எவ்வாறு ஆதாமின் நிலையைப் பிரதிபலிக்கிறது (ஆதி.3:1-7) வசனங்களோடு ஒப்பிடவும்?

ஆதாமின் காலத்திலிருந்து எல்லா மனிதருடைய நிலையும் என்ன (ரோ.5:12)? ஏன்?

4) பாவத்திற்குச் சம்பளம் செலுத்தப்படவேண்டுமென்று தேவநீதி விளம்புகிறது. தேவன் தன் படைப்பில் ஆவிக்குரிய தண்டனையாக எதைப் பயன்படுத்தினார் (ஆதி.2:17 ; எசேக்.18:4)?

பாவத்திலேயே இருக்கும்போது ஒருவன் சரீரப்பிரகாரமாக மரித்தால் என்ன நிகழும் (வெளி 20:11–15; எபி.9:27)?

5) பின்வரும் பகுதி தேவனுடைய இரக்கத்தைப் பற்றியும் அவருடைய நீதியைப் பற்றியும் எதை வெளிப்படுத்துகிறது (யாத்.34:6b–7)?

தேவனுடைய இரக்கமும் அவருடைய நீதியும் ஒன்றோடொன்று ஒப்புரவாகும்படி தேவன் செய்தது என்ன (1.பேது.3:18 ; அப்.4:10–12)?

ஏசாயா 43:11ல் இரட்சகரைப் பற்றிக் கூறப்பட்டுள்ள சிறப்பு அம்சம் என்ன? எப்படி இயேசு கிறிஸ்து இந்தத் தேவைகளைச் சந்தித்தார் (மத்.1:21–23 ; எபி.1:8)?

6) நீங்களே சொந்தமாக எழுதுங்கள். 1.கொரிந்தியர் 15:3–4 எப்படிச் சுவிசேஷத்தைச் சுருக்கமாகக் கூறியுள்ளது என்பதை விளக்கவும்.

7) காலம் நிறைவேறுமளவும் ஏன் தேவன் தம்முடைய இரட்சிப்பின் திட்டத்தை மறைத்து வைத்தார் (1.கொரி.2:7–8)?

அப்படியானால் பழைய ஏற்பாட்டுவிசுவாசிகள் எப்படி இரட்சிக்கப்பட்டார்கள் (எபி.11:13)?

8) இரட்சிப்புக்கும் நற்கிரியை செய்வதற்கும் இடையேயுள்ள தொடர்பு என்ன (எபேசி.2:8–10)?

எப்படி ஆபிரகாமின் வாழ்க்கை இதை வெளிப்படையாகக் காட்டுகிறது (ரோ.4:1–5 ; யாக்.2:18–23)?

கிரியையின் அடிப்படையிலே இரட்சிப்பு உண்டாக சாத்தியக் கூறுகள் உள்ளனவா? (தீத்து 3:5–8; எபி.9:22)?

9) ஒருவன் சுவிசேஷத்திற்குச் செவிசாய்த்து அதை ஏற்றுக்கொள்கிறான் அல்லது ஏற்றுக்கொள்ளாமல் விட்டுவிடுகிறான் என்பதின் அடிப்படையில் அவன் ஆவிக்குரிய குடும்பத்தில் அங்கத்தினராகின்றானா என்பது தீர்மானிக்கப்படுகின்றது. பின்வருகின்ற வசனங்களைக் கொண்டு கீழ்க் கொடுக்கப்பட்டுள்ள இரண்டு தலைப்புகளின் அடிப்படையில் உள்ள குடும்பங்களின் வித்தியாசத்தைச் சுட்டிக்காட்டுக.
(யோவான் 8:44 ; கலா.3:7 ; எபேசியர் 2:2–3 ; 5:6 ; 1.தெச.5:5 ; 1.யோ.3:10)

| கீழ்ப்படியாமையின் பிள்ளைகள் | தேவனுடைய பிள்ளைகள் |
|---|---|
| | |
| | |
| | |

எப்படி ஒருவன் குடும்ப அங்கத்துவத்தை மாற்றுகிறான்?
(லூக்.13:3 ; அப்.3:19–20 ; யோ.1:12 ; 5:24)

10) சுருக்கமாக விபரிக்கவும். எப்படி எப்பொழுது நீங்கள் கிறிஸ்தவர்களானீர்கள்? நீங்கள் இன்னும் இயேசு கிறிஸ்துவை ஏற்றுக்கொள்ளவில்லையென்றால் எது உங்களை அவ்வாறான நிலைமைக்குத் தள்ளியுள்ளது?

# பாடம் 2: கிறிஸ்துவைப் பற்றிய ஒரு கண்ணோட்டம்

அவர் மனிதர்களோடு சஞ்சரித்தார். ஆனால் அவருடைய வாழ்க்கை உலகில் வாழ்ந்த மனிதர்களுடைய வாழ்க்கையைவிட உயர்ந்ததாக இருந்தது. எக் கோணத்திலிருந்து பார்த்தாலும் பழுதற்றதும், குறையற்றதுமான அவருடைய வாழ்வு அவருடைய எதிரிகளும் புகழ்ந்த கூறுவதாக இருக்கிறது. அவருடைய வாழ்வு சிறப்பம்சங்களை உள்ளடக்கிய தனிச் சிறப்பு மிக்கது. குறைபாடுள்ள மனிதன் அவரைக் கண்டுபிடிக்க முடியாது. நாத்தீகன் எவனும் அவரைக் குறித்து விளக்கம் தரமுடியாது. அவர் இந்த உலகில் வாழ்ந்தபொழுது எந்த நூலையும் எழுதவில்லை. அனால் வரலாற்றிலேயோ எந்த மனிதனைவிடவும் அதிகமாக இவரைப் பற்றி எழுதப்பட்டுள்ளது. எந்த மனிதனையும்விடவும் உலகவரலாற்றிலேயே இவருடைய தாக்கம் மிகப் பெரியதாக இருக்கிறது. உலக அரசியலில் இவர் எந்தப் பங்கும் வகிக்கவில்லை. பெரிய இராணுவத்தின் தளபதியாகவும் இருந்ததில்லை. ஆனால் எலக வரலாற்றை கி.மு. என்றும் கி.பி. என்றும் (கிறிஸ்துவுக்குப் முன், கிறிஸ்துவுக்குப் பின்) என்றும் இரண்டாகப் பிரிப்பதற்குக் காரணமானார். உலக வரலாற்றிலே ஒரு மிகப் பெரிய பிரச்சனைக்குரியவராகவும் கடுமையாக எதிர்க்கப்பட்டவராகவும் இரக்கமற்ற முறையில் துன்புறுத்தப்பட்டவராகவும், கொடூரமான முறையில் கொலைசெய்யப்பட்டவராகவும் இருக்கிறார். இவ்வாறு கஷ்டங்கள் அனுபவித்தபோதிலும் அகிம்சையைக் குறித்தும் பழிக்குப் பழி செய்வதற்கு எதிராகவும் ஆயுதம் எடுத்தலுக்கு எதிராகவும் போதித்து, அவர் கூறினார். என்னுடைய இராஜ்ஜியம் இவ்வுலகத்திற்குரியதல்ல. அவரின் நற்சாட்சி அவருடைய ஒழுக்கத்திலான உயர்ந்த வாழ்வாகும். அவருடைய வாழ்நாட்கள் நித்தியமாக இருக்கிறது. அவர் இருந்தவரும், இருக்கிறவரும், வருகிறவருமாய் இருக்கிறார். அவருடைய வாழ்வுக்கு முடிவே இல்லை.

## 1) அவருடைய நாமங்கள்

அவர் இயேசு என்ற பெயரில் அழைக்கப்பட்டார். ஏனென்றால் அவர் தமது ஜனங்களின் பாவங்களை நீக்கி அவர்களை இரட்சிப்பார் (மத்.1:21). இயேசு என்றதன் பொருள் கர்த்தர் (யேகோவா) இரட்சிக்கிறார், அவர் இரட்சிக்கிறார், அவர் இரட்சகர் (தீத்து 2:13 ; ஏசா.43:11). இந்த இரட்சகர் கர்த்தராகிய கிறிஸ்து (லூக்.2:11). கிறிஸ்துவாக அல்லது மேசியாவாக அபிஷேகம்பண்ணப்பட்டவராக இருக்கிற வாக்குத்தத்தம்பண்ணப்பட்ட மீட்பர் (யோ.4:25-26). அவர் தன்னை மனுஷகுமாரன் என்று அழைக்கிறார் (லூக்.19:10). இது அவர் மனிதத்தன்மையைக் குறிக்கிறது. அவர் தேவனுடைய குமாரன். இது அவருடைய தெய்வீகத்திற்குப் பிரகடனம். இதை அவருடைய பகைவர்கள் புரிந்திருந்தார்கள் (யோ.10:33,36). அவர் தேவனுடைய வார்த்தை (யோ.1:1,14). தேவஆட்டுக்குட்டி (யோ.1:29). அல்பாவும் ஒமேகாவும் ஆதியும் அந்தமும் முந்தினவரும் பிந்தினவருமாயிருக்கிறார் (வெளி22:13). இராஜாதி இராஜாவும் கர்த்தாதி கர்த்தாவும் என மேன்மையாக அழைக்கப்படுகிறார் (வெளி19:16).

## 2) அவரின் கடந்தகால நித்தியம்

அவர் படைக்கப்படவில்லை. ஆனால் அவரால் எல்லாம் படைக்கப்பட்டது (யோ.1:3,10; கொலோ.1:16-17 ; 1.கொரி.8:6 ; எபி.1:2,10). நித்தியமாகவே அவர் தேவனோடு இருந்தார், தேவனாக இருந்தார் (யோ.1:1-2). பேறானவர் என்ற சொல் பிறந்தவர் என்பதைக் குறிப்பதில்லை. ஒரேபேறானவர் (யோ.1:14,18 ; 3:16,18) என்பது அவரின் இணையற்ற ஒப்பற்ற நிலையைக் குறிக்கிறது. ஈசாக்கைப் பற்றிக் கூறுவதுபோல கூறப்பட்டுள்ளது (எபி.11:17). ஈசாக்கு மட்டுமே ஆபிரகாமின் பிள்ளையல்ல. முதற்பேறுமானவர் என்கின்ற சொல் முன்னுரிமையைக் காட்டுகிறது. கொலோசேயர் 1:18 லும் வெளிப்படுத்தின விசேஷம் 1:5 லும் இது சொல்லப்பட்டுள்ளது. கர்த்தர் பூர்வகாலத்திலேயே அநாதியாய் இருக்கிறார் (மீகா.5:2 ; ஏசா.9:6 ; நீதி.8:22-23). நான்

இருக்கிறேன் என்ற சொல் இவர் எல்லாவற்றிற்கும் முந்தினவராக இருக்கிறார் என்பதைக் குறிக்கிறது (யோ.8:58 ; யாத்.3:14). இவர் உலகம் உண்டாவதற்கு முன்னே பிதாவினுடைய மகிமையில் பங்குள்ளவராயிருந்தார் (யோ.17:5).

## 3) பழைய ஏற்பாட்டில் கிறிஸ்துவின் தோற்றங்கள்

முதன் முறையாகப் புதிய ஏற்பாட்டில்தான் இயேசு கிறிஸ்துவைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது சரியல்ல. அவரைப் பற்றி மோசேயின் ஆகமங்களிலும், தீர்க்கதரிசனப் புத்தகங்களிலும் கூறப்பட்டுள்ளதை தன்னுடைய சீஷர்களுக்கு அவரே விளக்கிக் கூறினார் (லூக்.24:27,44). கிறிஸ்துவே வேதவாக்கியத்தின் நோக்கமும் நிறைவேறுதலுமாய் இருக்கிறார். அவரைக் குறித்து நூற்றுக்கணக்கான தீர்க்கதரிசனங்கள் நிறைவேறியுள்ளது. அவைகளில் அவர் பிறந்த இடம் (மீகா 5:2). பிறப்பின் தன்மை (ஏசா.7:14). இறப்பின் தன்மை (ஏசா.53ல்) கூறப்பட்டுள்ளது. எப்பொழுதும் ஊழியம் செய்கின்ற ஆசாரியன் (1.சாமு.2:35). தாவீதைவிட மிகப் பெரிய இராஜா. அவரின் சிங்காசனம் என்றென்றும் நிலைத்துநிற்கும் (2.சாமு.7:12-13). பலிகளிகளிலும் பண்டிகைகளிலும் சொல்லப்பட்ட வாக்குத்தத்தங்களை அவர் நிறைவேற்றுவார். பஸ்கா ஆட்டுக்குட்டி அவரைக் குறிக்கிறது (1.கொரி.5:7). பழைய ஏற்பாட்டிலே நாம் காணும்படியாக தேவனுடைய தோற்றம் காணப்படுகிறது. பொதுவாக கர்த்தருடைய தூதராகக் காட்சியளிக்கிறார். இப்படிப் பழைய ஏற்பாட்டில் காணப்படும் கிறிஸ்துவின் தோற்றத்தை தீயோபோனிஸ் என்று அழைக்கப்படுகிறது. கர்த்தருடைய தூதனுடைய செயல்களும், கிரியைகளும் தேவனுடைய செயலாகவும் கிரியையாகவும் தெளிவாகத் தெரிகிறது. ஏதோ படைக்கப்பட்ட உயிரின் செயலாகத் தெரியவில்லை. எடுத்துக்காட்டாக (ஆதி.22:11-18 ; 32:24-30 ; ஓசி.12:4-5 ; யாத்.3:2-6; மாற்.12:26 ; யோசு.5:13-16 ; நியா.6:11-14 ; 13:18-22) இவற்றில் நாம் கிறிஸ்துவை மாதிரியாகக் காணமுடியும். பழைய ஏற்பாட்டில் காணப்படும் மாதிரிகளின் விளக்கம் புதிய ஏற்பாட்டில் ஆவிக்குரிய சத்தியங்களையும் மேசியாவைப் பற்றியும் விளக்குகிறது. எண்ணாகமம் 21:6-9 ல் கூறப்பட்டுள்ள வெண்கலசர்ப்பம் புதிய ஏற்பாட்டில் சிலுவையில் தொங்கிய கிறிஸ்துவைப் படமாகக் காட்டுகிறது (யோ.3:14-16 ; யாத்.17:6 ; எண்.20:8-12 ) அடிக்கப்பட்ட கன்மலை, சிலுவையில் அறையப்பட்ட இரட்சகரைக் காட்டுகிறது (1.கொரி.10:4). மெல்கிசேதேக் இயேசு கிறிஸ்து மகா பிரதான ஆசாரியர் என்பதற்கு மாதிரியாக இருக்கிறார் (ஆதி.14:18-20 ; எபி.5-7ம் அதிகாரங்கள்).

## 4) கிறிஸ்து மனிதனாக வருதல்

வார்த்தை மாமிசமாகி நமக்குள்ளே வாசம்பண்ணினார் (யோ.1:14). கிறிஸ்து மாமிசத்திலே வெளிப்பட்டார் (1.தீமோ.3:16). இதுவே இங்கு அவதாரம் என்று கூறப்படுகிறது. ஒரே தேவன் மனிதனாக வந்தபொழுது தெய்வீகத்தன்மையும், மானிடத்தன்மையும் வியக்கத்தக்க வண்ணம் ஒரே நபரில் சேர்ந்து காணப்பட்டது. அவரில் மானிடத்தன்மை பரிபூரணமாக இருந்தது. என்றாலும் பாவமில்லாதவராக இருந்தார் (எபி.4:15 ;பிலி.2:6-11 ; ரோ.1:4-5 ; 9:5 ; எபி.2:14) ஆகியவை கிறிஸ்துவின் தெய்வீகத்தன்மை மற்றும் மானிடத்தன்மையின் ஐக்கியத்தைக் கூறுகிறது.

சுவிசேஷங்களில் இவற்றைப்பற்றி உறுதிப்படவும் வரிசைக்கிரமமாகவும் சொல்லப்படவில்லை. ஏனென்றால் ஒவ்வொரு சுவிசேஷமும் வேறுபட்ட கோணங்களில் கிறிஸ்துவைப் பார்க்கிறது. மத்தேயு சுவிசேஷத்தில் இயேசு கிறிஸ்துவை இஸ்ரவேலின் இராஜா என்கின்ற கண்ணோட்டத்தில் பார்க்கப்படுகின்றது. மாற்கு சுவிசேஷத்தில் பரிபூரணமான ஊழியக்காரராகவும், லூக்காவில் மனுஷகுமாரனாகவும், யோவானில் தேவனுடைய குமாரனாகவும் கிறிஸ்து அளவிடப்படுகிறார். தேவனுடைய ஆவியினால் கிறிஸ்து அற்புதமாக கன்னி மரியாளின் வயிற்றில் உற்பத்தியானார் (ஏசா.7:14 ; மத்.1:21 ; லூக்.1:34-35) குழந்தை நல்ல முறையில் வளர்ந்தது (லூக்.2:52). நமக்கு அவருடைய குழந்தைப் பருவத்தைப் பற்றி ஒரேயொரு

எழுதப்பட்ட ஆதாரமே உள்ளது (லூக்.2:42-51). இஸ்ரவேலில் உள்ள பெத்லகேமில் அவர் பிறந்து, சிறிது காலம் குழந்தையாக இருந்தபொழுது எகிப்திலே தங்கியது

தவிர அவருடைய முப்பது வயது வரையிலும் இஸ்ரவேல் தேசத்திலுள்ள நாசரேத் என்னும் ஊரில் தங்கியிருந்தார்.

## 5) கிறிஸ்து தன்னை வெளிப்படுத்துதல்

மேசியா இவ்வுலகத்திற்கு வருவதற்கு முன்னே அவர் வருகையை முன்னறிவிக்கவேண்டும். வழியைச் செவ்வைபண்ணப்படவேண்டும் (ஏசா.40:1-5). யோவான்ஸ்நானகன் அந்த தீர்க்கதரிசனத்தை நிறைவேற்றினார் (மத்.3:10-12 ; மாற்1:1-11 ; லூக்.3:2-18 ; யோ.1:19-36). யோவான்ஸ்நானகனின் ஊழியம் இரட்சிக்கப்படும்படியாக மனந்திரும்புதலுக்கு அழைப்புவிடுகின்ற ஊழியமாயிருந்தது. மனந்திரும்புதல் இல்லாமல் இரட்சிப்பு இல்லை (லூக்.13:3). யோவான்ஸ்நானகன் கிறிஸ்துவே பிறருக்கு ஞானஸ்நானம் கொடுக்கவேண்டுமென்று கூறுகின்றார் (மத்.3:14-16) ஆனாலும் இயேசு கிறிஸ்து யோவான்ஸ்நானகன் மூலம் ஞானஸ்நானம் பெற்று தன்னுடைய வெளிப்படையான ஊழியத்தை ஆரம்பித்தார். கிறிஸ்து ஏன் இவ்வாறு செய்தார் என்றால் எல்லா நீதியையும் நிறைவேற்றுவதற்காக. அவர் ஒருவருக்கு மட்டுமே மனந்திரும்புதல் தேவையில்லை. அவருடைய ஞானஸ்நானத்தின்போது தேவஆவியானவர் ஊழியத்திற்கு அவரை அபிஷேகம்பண்ணினார். பிதா அவரை மகிமைப்படுத்தினார். இத்துடன் மறைவாக கிறிஸ்து ஜீவித்தகாலம் முடிந்தது. அவர் பன்னிரண்டு சீஷர்களைத் தேர்வுசெய்து தன்னுடைய ஊழியத்தைத் தொடக்கினார். ஏறக்குறைய மூன்றாண்டு காலம் ஊழியம்செய்தார்.

## 6) கிறிஸ்து சோதிக்கப்படுதலும், மறுரூபமடைதலும்

கர்த்தராகிய இயேசு இஸ்ரவேல் தேசத்தைவிட்டு வெளியே செல்லாமல், கலிலேயா யூதேயா, யோர்தானின் மறுபக்கம் போன்ற இடங்களில் ஊழியம் செய்தார். இக் கால கட்டத்தில் ஏராளமான நிகழ்ச்சிகள் கிறிஸ்துவின் வாழ்க்கையில் நடந்தாலும் அவருடைய மகிமைக்கு ஆதாரமாக இரண்டு நிகழ்ச்சிகளைக் குறிப்பிடவேண்டும். முதலாவதாக வனாந்தரத்திலே நாற்பதுநாள் உபவாசம் இருந்தபோது பிசாசானவனின் சோதனைக்கு உட்படவேண்டியிருந்தது (மத்.4:1-11 ; லூக்.4:1-13). இந்தச் சோதனை யில் பசியைப் போக்குவதற்காக வேண்டுகோளும், ஆவிக்குரிய மேன்மையை உண்டுபண்ணுவதற்கும் அகந்தையான செயல்களைச் செய்வதற்கும் பிசாசானவன் கிறிஸ்துவைத் தூண்டினான். வெற்றிகரமாக பிசாசை அவர் எதிர்த்ததே அவருடைய பாவமற்ற தன்மையைக் காட்டுகிறது. இரண்டாவது கிறிஸ்துவின் கண்கவரும் தெய்வீக மகிமையை அவருடைய மூன்று சீஷர்கள் மறுரூபமலையில் காண்பதாகும் (மத்.17:1-8; மாற்.9:2-9 ; லூக்.9:28-36). அங்கு தேவனுடைய மகிமை மிகப் பிரகாசமான ஒளியாகப் பிரகாசித்தது. பிதா தம்முடைய நேசகுமாரனாகிய கிறிஸ்துவில் பிரயமாயிருக்கிறேன் என்று சத்தமாகக் கூறினார். சோதனையும் மறுரூபமடைந்ததும் கிறிஸ்துவின் முழுமையான தனித்தன்மையைக் காட்டுகிறது.

## 7) கிறிஸ்துவின் அற்புதங்களும், அவரின் போதனையும்

மோசே, எலியா, எலிசா போன்று கர்த்தராகிய இயேசு வல்லமையான கிரியைகளைத் தன் ஊழியக்காலத்தில் முந்தைய காலத்தில் செய்தார். இச் செயல்கள் அவரை நம்புவதற்கு ஆதாரமாக இருக்கிறது என்று கூறினார் (யோ.14:11). கிறிஸ்துவின் அற்புதங்கள் மனிதனுக்குத் தெரிந்த இயற்கையான விதிகளுக்கெல்லாம் அப்பாற்பட்டதாகக் காணப்பட்டது. நிக்கொதேமு இயேசு கிறிஸ்துவின் அற்புதங்களை விசுவாசித்து அவரைத் தேவனிடத்திலிருந்து வந்தவர் என்பதை அறிந்துகொண்டான் (யோ.3:2). வேறுவிதமான அற்புதங்களைச் செய்தார். குருடர்களையும், முடவர்களையும், குஷ்டரோகிகளையும் குணமாக்கினார். அவர் செய்த அற்புதங்கள் உடனடியாக நிகழ்வதாகவும் நோய்கள் உடனே சொஸ்தமானதாகவும் காணப்பட்டது. இயற்கையின்மீது தன்னுடைய வல்லமையை விளங்கப்பண்ணினார். (தண்ணிர்மேல் நடந்தார். புயலை அமரச்செய்தார்) அவர் உணவுப் பொருட்களை உண்டுபண்ணினார்.

(ஐயாயிரம் பேரைப் போஷித்தார், தண்ணீரை திராட்சை இரசமாக மாற்றினார்), அசுத்த ஆவிகள் வெளியேறக் கட்டளையிட்டார், மரித்தவர்களை உயிரோடு எழும்பினார்

(லூாசரு, நாயீனூர் விதவை மகன், யாவீருவின் மகள்) அவருடைய அற்புதங்கள் தெய்வீகத்தன்மையை வெளிப்படுத்தியது. தேவாவக்கியங்களை நிறைவேற்றியது. மேலும் இவைகள் துன்பத்தைக் கண்டு இரங்குகின்ற அவரின் மனதைக் காட்டியது. ஒருபோதும் மக்களைக் கூட்டி வருவதற்காகவோ அல்லது அவர்களுடைய ஆவலைத் தூண்டுவதற்காகவோ அற்புதங்களை அவர் செய்யவில்லை. பெரும்பாலும் சுகம் பெற்றவர்களைப் பார்த்து இதைக் குறித்து யாரிடமும் கூறவேண்டாம் என்று கேட்டுக்கொண்டார். கிறிஸ்து உவமைகள் மூலம் ஜனங்களுக்குப் போதித்தார். உவமைகள் ஆவிக்குரிய சத்தியங்களை விளக்குகின்ற மனிதனைப் பற்றிய சிறுகதைகளையோ அல்லது இயற்கையான நிகழ்ச்சிகளையோ கொண்டு காணப்பட்டது. அவரின் மலைப்பிரசங்கத்திற்கு ஈடுஇணை கிடையாது (மத்.5-7). இது கேட்டவர்களை ஆச்சரியப்படுத்தியது (மத்.7:28-29). யோவான் சுவிசேஷத்தில் காணப்படும் அவரின் வல்லமையான பிரசங்கங்களான நானே என்பது எந்த மனிதனிடமிருந்தும் இதுவரை வந்ததில்லை. தன்னுடைய சீஷர்களிடம் தான் போதித்தவற்றை உண்மையாய்க்கடைப்பிடிக்கச்சொன்னார். மேலும் இவற்றின்மூலம் வீடுகளிலும் குடுபங்களிலும் பிரிவினை உண்டாகும் என்று எச்சரித்தார் (லூக்.12:51-53).

## 8) கிறிஸ்து சந்தித்த எதிர்ப்புக்கள்

கர்த்தராகிய இயேசு நன்மையையும் நீதியையும் செய்பவராக இருந்தார். ஆனால் நன்மைகள் தீமையால் எதிர்க்கப்பட்டது. வேதம்சொல்கிறது எதிர்ப்புக்களைத் தலைமைதாங்கி நடத்துவது வீழ்ந்துபோன சாத்தான் அல்லது பிசாசு என்று (வெளி 12:9). சாத்தான் குழந்தை இயேசுவைக் கொலைசெய்ய வகைதேடினான். அவரின் ஊழியக்காலமெல்லாம் எதிர்த்தான். இறுதியாக அவரை இல்லாமற்செய்வதற்குச் சதிசெய்தான் (லூக்.22:2-4). சாத்தான் கிறிஸ்துவை எதிர்ப்பதற்கு பல வகைகளில் பிறரைப் பயன்படுத்தினான்.

## 9) கிறிஸ்துவின் மரணம், உயிர்த்தெழுதல், பரமேறுதல்

நான்கு சுவிசேஷங்களிலும் கிறிஸ்துவின் பாடுகளைக் குறித்தும் மரணத்தைக் குறித்தும் அதிகமாகக் கூறப்பட்டுள்ளது. தேவத்தில் வேறு எந்தப் பகுதிக்கும் இவ்வளவு அதிகமான அளவு இடம்கொடுக்கப்படவில்லை. இயேசு கிறிஸ்து மரிக்கவில்லையென்றால் பாவமன்னிப்பில்லை. இரட்சிப்பு இல்லை. வரப்போகின்ற ஜீவியத்தைக் குறித்தும் நம்பிக்கை இருக்காது. இதுவே சுவிசேஷத்தின் நோக்கமும் சுவிசேஷப் பிரகடனத்தின் மைய செய்தியுமாகும். கிறிஸ்து பலியாகியது ஏசாயா 53, சங்கீதம் 22 மற்றும் பிற வேதவாக்கியங்களின் தீர்க்கதரிசன நிறைவேறுதல் ஆகும். கர்த்தராகிய இயேசு கிறிஸ்து தன்னுடைய மரணத்தைக் குறித்து சீஷர்களுக்கு முன்னதாகவே கூறியிருந்தார். ஆனால் அதை அவர்களால் புரிந்து கொள்ளமுடியவில்லை (மத்.16:21 ; 17:9-12,22-23 ; 20:18-19). அவர் மூன்றாம் நாளில் உயிர்த்தெழுவார் என்று உறுதியாகக் கூறியதை அவருடைய எதிரிகள் அறிந்துகொண்டார்கள். ஆகையால் ரோமப்போர்ச்சேவகர்கள் கிறிஸ்துவின் கல்லறையில் காவல் நிற்க வேண்டுமென்று வேண்டினர் (மத்.27:63-66). கிறிஸ்து உயிர்த்தெழுந்த பிறகு சீஷர்கள் தன்னுடைய வார்த்தையை நம்பவில்லை என்று அவர்களைக் கடிந்துகொண்டார் (லூக்.24:25-27). வரப்போகிற மரணத்தையும் அதனால் உண்டாகிற இரட்சிப்பையும் கிறிஸ்துதான் சிலுவையில் அடிக்கப்படுகிறதற்கு முன்னால் நினைவுகூரும்படியாக ஒரு இராவிருந்தை ஏற்படுத்தினார் (மத்.26:26-28; மாற்.14:22-24 ; லூக்.22:19-20). யூதாசால் காட்டிக்கொடுத்ததுமுதல் காட்டிக்கொடுப்பதற்கு அவன் வாங்கிய தொகை ஆகியவை தீர்க்கதரிசிகளால் முன்னுரைக்கப்பட்டு நிறைவேறியது (சகரி.11:12-13). கிறிஸ்து இயேசுவின் ஜீவியத்தின் இறுதிக்கட்டம் ஜெபமும் வியாகுலமுமாக கெத்சமனேயில் ஆரம்பித்து, எதிரிகளின் சதி பரிகாசத்துக்குரிய விசாரணை ஆகியவற்றால் முடிந்தது. ரோம ஆளுனரால் ஒரு

தவறைக்கூட அவர்மீது கண்டுபிடிக்கமுடியவில்லை. ஆனால் பொதுமக்களின் வற்புறுத்துதலுக்கு இணங்கி கொல்கொதாமலைக்கு அவர் தன் சிலுவையைத் தூக்கிச் செல்லும் தண்டனையை நிறைவேற்றினார். அங்கு அவர்பட்ட பாடுகள் இறுதியாகக்

கூறிய ஏழு வார்த்தைகள் ஆகியவற்றின் விளக்கங்கள் பின்பகுதியிலேயே கூறப்படுகிறது. இறுதியாக சத்தமாய்ச் சொன்ன வார்த்தை முடிந்தது (யோ.19:30). இது அவரின் இரட்சிப்பின் வேலை நிறைவேறினது என்பதைக் குறிக்கிறது. துன்மார்க்கத்தால் நிறைந்த மனிதனின் இச் சம்பவம் தேவனுடைய நித்திய நோக்கமாகிய இரட்சிப்புக்கு வழி வகுத்தது. மனிதனால் கிறிஸ்து கொலைசெய்யப்பட்டாலும் அம் மனிதன் அவரை விசுவாசித்தால் இரட்சிக்கப்படுவான். தேவனால் அடிக்கப்பட்டு வாதிக்கப்பட்டார் என்ற வாக்கியம் இதனால் நிறைவேறியது (ஏசா.53:4). அவரின் மரணம் இரண்டு கள்ளரின் மத்தியில் இருந்தும் அவருடைய சரீரம் ஐஸ்வரியவானின் கல்லறையில் அடக்கம்பண்ணப்பட்டதும். தீர்க்கதரிசனத்தின் நிறைவேறுதல் (ஏசா.53:9). இயேசு கிறிஸ்து உயிர்த்தெழுவேன் என்று கூறியதாலேயே ரோமப்போர்ச் சேவகர்கள் கல்லறையின்மீது பெரிய கல்லைவைத்து முத்திரை போட்டார்கள் (மத்.28 ; மாற்.16 ; லூக்.24 ; யோ.20). எனினும் அவைகளால் இயேசு கிறிஸ்துவின் உயிர்த்தெழுதலை தடைசெய்யமுடியவில்லை. சீஷர்களின் கண்களுக்குமுன்னால் பரத்துக்கு எடுத்துக்கொள்ளப்படுவதற்கு முன் வரையிலும் நாற்பது நாட்கள் நூற்றுக்கணக்கான தன்னுடைய சீஷர்களுக்குக் காட்சியளித்தார் (1.கொரி.15:6 ; அப்.1:3-9). ஆணிகடாவப்பட்ட கரங்கள் தோமாவிற்குக் காட்டப்பட்டது. சந்தேகங்களை நீக்கிற்று. கிறிஸ்து உண்மையிலேயே உயிர்த்தெழுந்தார் (யோ.20:25-28).

## 10) கிறிஸ்துவின் இரண்டாம் வருகையும் அவரின் எதிர்கால இராஜ்ஜியமும்

கிறிஸ்து உயிர்தெழுந்து பரலோகத்திற்குச் சென்றார். இவ்விரு நிகழ்சிகளோடு இணைந்துள்ள ஒரு பெரிய வாக்குத்தத்தம் நான் போனால் திரும்பவும் வருவேன் (யோ.14:3). இதைக் கர்த்தர் பலமுறை கூறியுள்ளார். சீஷர்கள் அவரிடத்தில் உம்முடைய வருகையின் அடையாளங்கள் என்ன என்று கேட்டனர் (மத்.24:3). பழைய ஏற்பாட்டில் மேசியாவின் வருகை இரண்டுகட்டங்களாகப் பிரிகப்பட்டிருக்கிறது.

(1) பாடுபடவும், புறக்கணிக்கப்படவும் வருதல்

(2) ஆட்சி செய்யவருதல்

சில இடங்களில் இவ்விரண்டு நிகழ்சிகளும் ஒன்றோடொன்று இணைந்துள்ளதுபோல் காணப்படுகிறது (ஏசா.61:1-2 ; லூக்.4:18-21). தீர்க்கதரிசிகளுக்குக் கூட இந்நிகழ்ச்சி திகைப்பை ஏற்படுத்தியது (1:பேது.1:10-12). இப்பொழுது மிகத்தெளிவாக உள்ளது. பாடுபடுவதற்கு வருகின்ற மேசியாவின் முதல் வருகை எழுத்துபூர்வமாக தேவவாக்கியங்கள் அனைத்தையும் நிறைவேற்றியது. அதேபோல் பூலோகத்திலே சமாதானத்தையும் நீதியையும் நிலைநாட்டவருகின்ற அவரது இரண்டாவது வருகை எழுத்துபூர்வமாக அனைத்து வேதவாக்கியங்களையும் நிறைவேற்றும் (ஏசா.11:6-9 ; 65:18-25). இரண்டாம் வருகையில் நடைபெறுகின்ற நிகழ்ச்சிகள்:

(1) உயிரோடிருக்கிற மற்றும் மரித்த விசுவாசிகள் வானத்திலே எடுத்துக் கொள்ளப்படுதல். கிறிஸ்துவை அவர்கள் மேகத்திலே சந்திப்பார்கள். இதுவே ஆங்கிலத்தில் ரேப்சர் என்று அழைக்கப்படுகிறது (1.தெச.4:16-17).

(2) பூமியிலே மகா உபத்திரவகாலம் தொடங்கும் (வெளி7:14).

(3) உபத்திரவகாலத்தைத் தொடர்ந்து மகிமையோடும் நியாயத்தீர்ப்போடும் விசுவாசிகளோடு கிறிஸ்து வருவார். இதை வெளிப்பாடு என்கிறோம் (வெளி 19:11-16).

4) வெளிப்பாட்டைத் தொடர்ந்து பூலோகத்தில் கிறிஸ்துவின் ஆயிரம் ஆண்டுகால ஆட்சி நடைபெறும் (வெளி 20:4-6).

தேவனுடைய இராஜ்ஜியம் கிறிஸ்துவின் இராஜ்ஜியம் இவ்விரு வார்த்தைகளும் வேதத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளதால் விசுவாசிகள் அடிக்கடி குழப்பத்திற்கு உள்ளாகிறார்கள். அவருடைய இராஜ்ஜியம் எதைக் காட்டுகிறது என்றால் அவருடைய ஜனங்களின் மீதான அவருடைய ஆட்சியைக் குறிக்கிறது. இப்பொழுதுள்ள நிலையில் விசுவாசிகள் அவருடைய இராஜ்ஜியத்தில் இருக்கின்றனர் (கொலோ.1:13). கிறிஸ்து இந்த உலகத்தில் இருந்தபொழுது இராஜ்ஜியம் கிறிஸ்துவில் நிலைபெற்றிருந்தது (லூக்.17:20-21 ; 11:20 ; மத்.12:28) இந்த வார்த்தை வருங்கால நிகழ்ச்சியைக் குறிப்பதாகவும் உள்ளது. அதில் கிறிஸ்து எல்லாரும் காணும்படியாக ஆட்சிசெய்வதாகும் (அப்.1:6 ; வெளி11:15) புதிய வானமும் புதிய பூமியும் உண்டாகும் (வெளி21:1 ; ஏசா.65:17) சமுத்திரம் ஜலத்தினால் நிறைந்திருக்கிறதுபோல் பூமி கர்த்தருடைய மகிமையை அறிகிற அறிவினால் நிறைந்திருக்கும் (ஆபகூ.2:12). முழங்கால்கள் எல்லாம் அவருக்கு முன்பு முடங்கும் (பிலி.2:10-11). இப்பொழுது கிறிஸ்து பரலோகத்தில் தொழுதுகொள்ளப்படுகிறவராக இருக்கிறார் (வெளி 5:8-14). வரும்நாட்களில் இறுதியான நியாயத்தீர்ப்பு உண்டு. நியாயத்தீர்ப்புச் செய்யும் அதிகாரம் தேவனுடைய குமாரனுடைய கரத்தில் ஒப்படைக்கப்பட்டிருக்கிறது (யோ.5:22). வெள்ளை சிங்காசனத்தில் வீற்றிருந்து மரித்தோரை அவர்கள் பாவத்தினிமித்தம் நியாயம்தீர்ப்பார் (வெளி22:11-15). கிறிஸ்துவின் நியாயாசனத்திலிருந்து கிறிஸ்து விசுவாசிகளை நியாயம்தீர்ப்பார் (2.கொரி.5:10 ; 1.கொரி.3:11-15).

## முடிவுரை

இங்கு கூறப்பட்டுள்ள சத்தியங்களைப் பற்றி தேவனை நம்பாதவர்கள் கேள்வி எழுப்புகின்றனர். அவர்கள் கூறுகிறார்கள் கிறிஸ்து வரலாற்றின்மூலமாக நிரூபிக்கப்படாதவர் என்று. ஆனால் முதல் நூற்றாண்டுகளுக்குள் வாழ்ந்த வரலாற்று ஆசிரியர்களான யூத வரலாற்று ஆசிரியர் யோசிபஸ் ரோம எழுத்தாளர்கள் டார்சி டட், குட்டோனியஸ் மற்றும் பிளினி போன்றோர் கிறிஸ்துவைப் பற்றி எழுதியுள்ளனர். புதிய ஏற்பாட்டின் மூல நகல்களும் ஆவணங்களும் பலமுறைசோதிக்கப்பட்டு அதன் உண்மைத்தன்மை ஊர்ஜிதம் செய்யப்பட்டுள்ளது. யோவான் சுவிசேஷத்தின் மூலநகல் இங்கிலாந்தில் உள்ள மன்செஸ்டர் நூலகத்தில் உள்ளது. உலகில் உள்ள எந்த நூல்களை விடவும் புதிய ஏற்பாடே பலமுறை சோதிக்கப்பட்டதும் விமர்சனங்களை எல்லாம் முறியடித்ததுமாகும். மேலும் வரலாற்றாலும் புதைபொருள் ஆராட்சியாலும் இப்பொழுது வேதாகமத்தில் கூறப்பட்டுள்ள ஒவ்வொரு நிகழ்ச்சிகளும் ஊர்ஜீதம் செய்யப்பட்டு வருகின்றது. தேவனுடைய வார்த்தையாக இது இருப்பதால் அதுவே நம்முடைய பெரிய நம்பிக்கைக்கு அடிப்படையாகும். எழுதப்பட்ட தீர்க்கதரிசன வார்த்தைகள் நிறைவேறிவருதல் உண்மை நிலையைக் காட்டுகிறது. ஜீவிக்கிற வார்த்தையாகிய கிறிஸ்து நம்மை அவரில் விசுவாசிக்க வற்புறுத்துகிறார். அவருக்குமேல் நமக்கு ஒன்றும் தேவையில்லை (யோ.6:67-68). அவரே கிறிஸ்தவ நம்பிக்கையின் இருதயமாக இருக்கின்றார்.

## பாடம் 2 ந் கான கேள்விகள்

*1) பின்வரும் வசனங்களில் கூறப்பட்டுள்ள இயேசு கிறிஸ்துவின் பெயர்கள் எப்படி அவரின் நிலையையும், குணத்தையும், வேலையையும் காட்டுகிறது?*

*மத்.1:21*

*லூக்.2:11*

*லூக்.19:10*

*யோ.1:1,14*

*யோ.1:29*

*யோ.10:36*

வெளி19:16
வெளி22:13

உங்களுக்குப் பிடித்தமான பெயர் என்ன? நீங்கள் விரும்பக் காரணம் என்ன?

2) கொலோசேயர் 1:16–17யை உங்கள் சொந்த வார்த்தையில் எழுதுக.

எவ்வளவு காலமாக இயேசு கிறிஸ்து வாழ்ந்து வருகிறார் (யோ.1:3,10 ; ஏசா.9:6 ; மீகா 5:2)? உங்களிடத்தில் யாராவது இயேசு கிறிஸ்து பிதாவினால் முதலில் படைக்கப்பட்டவர் என்று கூறினால், நீங்கள் என்ன கூறுவீர்கள்?

3) எபிரெயர் 1ம் அதிகாரத்தைப் படிக்கவும். அதில் பின்வரும் வசனங்கள் எவ்வாறு இயேசுவைத் தேவன் என்று காட்டுகிறது?
வசனங்கள் 2, 3, 10
வசனம் 5ஐ லூக்கா 4:8 ஒப்பிடவும்.
வசனம் 8
வசனம் 11–12

4) பின்வரும் வசனங்கள் இயேசுவின் தெய்வீக நிலையை எப்படிக் காட்டுகிறது?
மத்.28:18,20
மாற்.2:5–7
யோ.1:1 ; 17:15
யோ.5:22,27
யோ.6:64
எபி.13:8

5) கிறிஸ்து எத்தகைய பணிகளைச் செய்யவேண்டுமென்று முன் கூட்டியே தீர்மானிக்கப்பட்டது (உபா.18:18–19 ; 1சாமு.2:35 ; 2.சாமு.7:12–13)?

6) இயேசு ஒரு பரிபூரண மனிதனாக இருந்தபடியால், என்னென்ன வழிகளில் உங்களைப்போல் இருப்பார் என்று எதிர்பார்க்கிறீர்கள்?
மத்.4:2

மாற்.4:38
லூக்.2:52
யோ.4:6

7) இயேசு கிறிஸ்து எவ்வாறு பிற மனிதரிலிருந்து வேறுபடுகிறார்?
மத்.1:23
லூக்.7:22
யோ.7:46
யோ.8:46

8) கிறிஸ்து உலகத்திற்கு வந்ததின் நோக்கம் என்ன? அவ்வாறு வந்தபடியால் வேதவாக்கியங்களை எப்படி நிறைவேற்றினார் (மாற்.10:45ன் பின்பகுதி ; ஏசா.53)?

எப்பொழுது கிறிஸ்துவின் மரணம் தீர்மானிக்கப்பட்டது (1.பேது.1:19–20)? கிறிஸ்துவின் மரணத்திற்கு இறுதியாக யார் பொறுப்பாளியாக இருந்தது (அப்.2:23)?

9) கிறிஸ்து உயிர்த்தெழாவிட்டால், அதன் விளைவு என்னவாக இருக்கும் (1.கொரி.15:14–19)? உங்கள் இரட்சிப்பிற்கு கிறிஸ்துவின் மரணமும், உயிர்த்தெழுதலும் ஆற்றிய பங்கினை எழுதுக.

10) யோவான் 14:3 ; 1.தெச.4:16–17 ; வெளி 19:6–9 ஆகிய வசனங்களில் கிறிஸ்தவர்களுக்குக் கூறப்பட்டுள்ள நம்பிக்கை என்ன?

கிறிஸ்துவை ஏற்றுக்கொள்ளாதவர்களை அவர் என்ன செய்வார் (யோ.5:22–23 ; வெளி 22:11–15)?

## பாடம் 3: கிறிஸ்துவின் கர்த்தத்துவம்

இயேசு கிறிஸ்து உமக்கு யார்?....... இயேசு கிறிஸ்து தன்னுடைய சீடர்களிடமும் பிறரிடமும் சில கேள்விகளைக் கேட்டார்.

- நான் யார் என்று ஜனங்கள் சொல்லுகிறார்கள் (மத்.16:13 ; 22:41-42 ; மாற்.12:35-37).
- நான் யாரென்று நீங்கள் சொல்லுகிறீர்கள்?

கிறிஸ்து கர்த்தராக இருக்கிறார். இதைத்தான் சீஷர்கள் வேதத்தில் பலமுறை சொல்லியிருக்கிறார்கள். அவர்கள் ஒருபோதும் இயேசு என்று அவரை அழைக்கவில்லை. அவர்களால் அதை நினைத்தும் பார்க்கக்கூடாத ஒன்றாக இருந்தது. அவர்கள் போதகர் என்று அழைத்தனர். இது போதிப்பவர் என்ற அர்த்தத்தில் மட்டுமல்லால், கட்டளையிடுபவர் என்ற அர்த்தம் உடையதாகவும் இருக்கிறது. கிறிஸ்து பலமுறை தன்னுடைய தெய்வீகத்தன்மையைக் கூறினபொழுதும், சீஷர்களால் சீக்கிரமாக அதைப் புரிந்துகொள்ளமுடியவில்லை. பழைய ஏற்பாட்டின் பகுதிகளாக சங்கீதம் 110:1 ஐ மேற்கோள்காட்டியபின்பும் அவர்கள் இதை உணர்ந்துகொள்ளவில்லை (யோ.14:8-11 ; யோ.8:24,58). அவரே எல்லா மனிதனின் நித்திய முடிவின் மீதும் கட்டுப்பாடு உள்ளவர் என்பதைச் சீஷர்களுக்குத் தெரிவித்தார் (மத்.7:21-22). அறிவில் அவர்கள் குறையுள்ளவர்களாக இருந்தபொழுதிலும் இயேசுவே கர்த்தர் என்று அறிக்கையிட்டனர். அவரை மற்றவர்கள் விட்டுச் சென்றபொழுதிலும், இவர்கள் பின்பற்றினர் (யோ.6:66-67).

கர்த்தர் என்ற வார்த்தை மூன்று விதங்களில் பயன்படுத்தப்படுகிறது. கிறிஸ்துவின் அந்தஸ்த்தையும், அவருக்கு உரியதையும், அவரின் ஆட்சியையும் குறிக்கிறது. தீர்க்கன், ஆண்டவர் உயரமும் உன்னதமுமான சிங்காசனத்தின்மேல் வீற்றிருப்பதைக் கண்டான் (ஏசா.6:1). இந்த வசனம் புதிய ஏற்பாட்டில் கிறிஸ்துவைக் குறிக்கிறது (யோ.12:41). அவரின் நிலை அல்லது அந்தஸ்து சிங்காசனத்தில் வீற்றிருக்கிறவர் ஆவார். பவுல் எழுதுகிறார் பூமியும் அதின் நிறைவும் கர்த்தருடையது (1.கொரி.10:26). இந்தக் கிரகத்தில் காணப்படும் அனைத்தும் அவருக்குரியதாக இருக்கிறதைக் காட்டுகிறது. பேதுருவினிடத்தில் திரும்பவும் வலையைப்போட கர்த்தர் கூறியபோது அவன் சொல்லுகிறான்: ஐயரே இராமுழுதும் நாங்கள் பிரயாசப்பட்டும் ஒன்றும் அகப்படவில்லை, ஆயினும் உம்முடைய வார்த்தையின்படியே வலையைப் போடுகிறேன் என்றான் (லூக்.5:5). இது அவரின் ஆட்சியைக் காட்டுகிறது.

## கர்த்தர் என்ற நிலையில் கிறிஸ்துவின் அந்தஸ்து

### 1) அறிவிக்கப்பட்டார்

தேவனுடைய வழியை அறியும்படி பேதுருவிடம் வந்த ரோம அதிகாரிக்கு அவர் இயேசு கிறிஸ்து எல்லோருக்கும் கர்த்தராய் இருக்கிறார் என்று கூறுகிறான் (அப்.10:36). சிலுவையில் அறையப்பட்ட இயேசு அபிஷேகம்செய்யப்பட்ட இரட்சகர், அவரே ஆண்டவரும் கிறிஸ்துவும் ஆவார் (அப்.2:36). எல்லாவற்றையும் படைத்தவர் (யோ.1:3 ; கொலோ.1:16) தூதர்களும், அதிகாரங்களும் அவருக்குக் கீழ்ப்பட்டிருக் கிறது (1.பேது.3:22). எல்லாத் துரைத்தனங்களையும், அதிகாரங்களையும், வல்லமையையும், கர்த்தத்துவத்தையும் எப்பொழுதும் ஆளுகிறார் (எபேசி.1:20). ஆசீர்வதிக்கப்பட்ட இராஜாதி இராஜவும், கர்த்தாதி கர்த்தாவுமாக இருக்கிறார் (வெளி 17:14 ; 19:16). அனைத்தும் அவருடைய சிங்காசனத்திற்கு முன்பாக விழுந்து ஆராதிக்கும் (வெளி 4:10-11 5:12-14).

### 2) தள்ளப்பட்டார்

உலகத்தைப் படைத்த சர்வ வல்லமையுள்ளவர் கலகத்தை அனுமதிக்கிறார் என்பது

குறிப்பிடத்தக்க ஒன்றாய் இருக்கிறது. இது எப்பொழுதுமே ஒரு இரகசியமாகவே உள்ளது. மனிதனால் இதைப் புரிந்துகொள்ளமுடியவில்லை. முதல்முதலாகச் சாத்தான் தேவனுக்கு சமமாக வரவேண்டும் என்று ஆவல் கொண்டு அதை நிறைவேற்ற கலகத்தில் இறங்கினான் (ஏசா.14:12-14 ; எசேக்.28:13-17). இக் கலகம் பிறதூதர்களையும் பற்றிக்கொண்டது (2.பேது.2:4). கலகம் செய்த தூதன் மனிதன் வாழ்கின்ற பூலோகத்திற்கு கொண்டுவரப்பட்டான் (ஆதி.3 ; ரோ.5:12). தேவன் மிகவும் கவலையாக கூறுகிறார்: நான் வளர்த்து ஆதரித்தேன். அவர்களோ எனக்கு விரோதமாய்க் கலகம்பண்ணினார்கள் (ஏசா.1:2). தேவனால் நியமனம் செய்யப்பட்ட தலைவர்களை மக்கள் ஏற்றுக்கொள்ளாமல் வெறுத்துத்தள்ளியபோது, அது தன்னையே தள்ளியதாக தேவன் கருதினார் (1.சாமு.8:7). தேவன் தன்னுடைய குமாரனை இந்த உலகத்திற்கு அனுப்பியபோது அவரையும் ஏற்றுக்கொள்ளாமல் தள்ளிவிட்டார்கள் (ஏசா.53:3). ஜீவாதிபதியைக் கொலைசெய்தார்கள் (அப்.3:15).

### 3) ஏற்றுக்கொள்ளப்பட்டார்

பரந்த உலகில் தேவனை ஏற்றுக்கொள்ளாமல் அவரைத் தள்ளியவர்கள் சில கூட்டமாகத்தான் இருந்தார்கள். பூமியிலே காற்றும், கடலும், அவருக்குக் கீழ்ப்படிந்தது (மத்.8:27). அசுத்த ஆவிகள் அவருக்குக் கீழ்ப்படிந்தது (மாற்.1:27). அவர் கட்டளையிட தூதர்கள் கீழ்ப்படிந்தார்கள் (மத்.26:53). எண்ணிலடங்கா ஏராளமான மக்கள் அவர் சிலுவையில் முடித்த அன்பின் தியாகத்தால் அவருக்குத் தங்களை ஒப்புக்கொடுக்கின்றனர். அவரின் விரோதிகள் அவரைத் துதிப்பார்கள் (சங்.76:10-12). பாதாளத்திலுள்ள சேனைகள் பரலோகத்தில் உள்ளவர்களோடு சேர்ந்து முழங்கால்களை முடக்கி இயேசு கிறிஸ்துவைக் கர்த்தர் என்று அறிக்கையிடுவார்கள் (பிலி.2:10-11). இயேசு சொன்னார்: நீங்கள் என்னை போதகர் என்றும், ஆண்டவர் என்றும் சொல்லுகிறீர்கள். நீங்கள் சொல்லுகிறது சரியே. நான் அவர்தான் (யோ.13:13).

## கர்த்தர் என்ற நிலையில் அவருக்கு உரியவைகள்

### 1) சொல்லப்பட்டார்

உலகைப் படைத்தார் என்கிற நிலையில் உலகிலுள்ள அனைத்தும் தேவனுக்குரியது (சங்.50:10-12). குயவனுடைய கையிலிருக்கிற களிமண்ணை அவன் தான் விரும்பியபடி செய்வதுபோல கர்த்தரும் தன் ஜனத்தை தனக்குப் பிரியமான முறையில் நடத்துகிறார் (எரேமி.18:6). விலையேறப்பெற்ற கிறிஸ்துவின் இரத்தத்தால் மனிதர்கள் மீட்கப்பட்டதால் மனிதன் அவருக்குரியவன் ஆகிறான் (1.பேது.1:19). உலகத்தின் பாவத்திற்காக மரித்தார் (1.யோ.2:2). அவரை நிராகரித்த கள்ளப்போதகர்களையும் அவர் கிரயத்திற்கு வாங்கினார் (1.பேது.2:1). இவ்வாறு மனிதன் தனக்குரியவனாக இருந்தபோதிலும் மாடு தன் எஜமானையும், கழுதை தன் ஆண்டவனின் முன்னணையையும் அறியும்....... என் ஜனமோ உணர்வில்லாமல் இருக்கிறார்கள் என்று கர்த்தர் கூறுகிறார் (ஏசா.1:3).

### 2) ஏற்றுக்கொள்ளப்பட்டார்

இயேசு கிறிஸ்துவைக் கர்த்தரும், இரட்சகருமாக ஏற்றுக்கொள்கிறவர்கள் தேவனுடைய பிள்ளைகளாய் இருக்கிறார்கள் (யோ:1:12). ஆகையால் கிறிஸ்துவை ஏற்றுக்கொண்ட விசுவாசி அவனுக்குச் சொந்தமாய் இராமல் அவனை வலைகொடுத்து வாங்கிய கிறிஸ்துவுக்கே சொந்தமாயிருக்கிறான் (1.கொரி.6:19-20). தோமாவைப் போல கிறிஸ்துவைத் தேவன் என்றும் ஆண்டவர் என்றும் அறிக்கையிடுகிறான் (யோ.20:28). நான் இயேசுவை இரட்சகராக ஏற்றுக்கொண்டேன், ஆனால் கர்த்தராக அல்ல என்கிற கொள்கைக்கு ஆதரவாக வேதத்தில் வசனங்கள் இல்லை. கர்த்தராகிய இயேசு கிறிஸ்து அல்லது இயேசு கிறிஸ்து நம்முடைய கர்த்தர் என்கிற வார்த்தை இயேசு நமது இரட்சகர் என்ற வார்த்தையைவிட அதிகமான நேரங்களில் பயன் படுத்தப்பட்டுள்ளது. இயேசு கிறிஸ்துவை ஏற்றுக்கொள்வது, தேவனை ஏற்றுக்கொள்வதற்குச் சமம். ஒருவன் இரட்சிக்கப்பட்டதும் கிறிஸ்துவின் கர்த்தத்துவத்திற்கு உரிய அனைத்தையும் அறியாமல் இருக்கலாம், அவன்

ஆண்டவனின் சித்தத்தைச் செயல்படுத்த முடியாதவனாக இருக்கலாம், தடுமாறலாம், விழலாம். ஆனால் உண்மையான விசுவாசி அவரின் கர்த்தத்துவத்தை ஒருபோதும் மறுதலிக்கமாட்டான், அல்லது அவரை இரட்சகர் மட்டும் என்று பிரித்துக்கூறமாட்டான்.

### 3) சாட்சிகொடுக்கப்பட்டார்

ஆண்டவரே! ஆண்டவரே! என்று நீங்கள் சொல்லியும் நான் சொல்கிறபடி நீங்கள் செய்யாமறபோகிறதென்ன? என்று ஆண்டவர் ஒரு கேள்வி கேட்டார் (லூக்.6:46). அவருடைய பார்வையில் அவரின் சித்தத்தைச் செய்யாமல் ஆண்டவரே! ஆண்டவரே! என்று அழைப்பது உண்மையான விசுவாசியின் அடையாளம் அல்ல. ஒருநாள் அவர் சொல்லுவார் நான் உங்களை ஒருபோதும் அறியேன் (மத்.7:21-23 ; லூக்.13:25-27). விசுவாசி என்று கூறி தேவனின் வார்த்தையை ஏற்றுக்கொள்ளாமல் மறுதலிக்கிறவன் பொய்யன் (1.யோ.2:3-4). உண்மையான தேவனுடைய பிள்ளைகள் தன்னுடைய வாழ்க்கையின் மூலமாக இயேசு கிறிஸ்துவை கர்த்தராக அறிக்கை செய்கிறார்கள்.

## கர்த்தர் என்ற நிலையில் அவரின் ஆட்சி

நாம் என்ன செய்யவேண்டும்? ஏராளமானோர் இயேசு கிறிஸ்துவைக் கர்த்தராக வார்த்தையால் மட்டுமே ஏற்றிருக்கிறார்கள். பிறர் தங்களைத் தாங்களே கிறிஸ்தவர்கள் என்று அழைத்துக்கொள்கிறார்கள். அவரின் ஆட்சிக்கு எப்பொழுதுமே எதிர்ப்பு இருக்கிறது (லூக்.19:14,27). இன்றைய சமுதாயம் மனிதனை மையமாக வைத்து ஏராளமான கொள்கைகளையும், கோட்பாடுகளையும் வகுத்திருக்கின்றன. மனிதன் மேன்மையானவன், அவன் அவனைப் பற்றி நல்லதையே நினைக்கவேண்டும். தன்னையே உணர்தல், தன்னையே அறிதல், தன்மீதே அன்பு செலுத்தல், தன்னையே வளர்த்தல், தானே மகிழ்ச்சியாயிருத்தல் போன்ற ஏராளமான கொள்கைகள் வளர்ந்துள்ளது. தேவனை நேசித்தல், நம்மை நாமே நேசித்தல் அல்ல, தேவனே மையப்பொருள். நாம் அல்ல. வேதாகமமுறைப்படி நான் முதலில் அல்ல, அனால் தேவன்தான் முதல் மற்றவையெல்லாம் அவருக்குப் பின்னால்த்தான். இன்று ஏராளமானோர் கிரேக்ககதையில் வருகின்ற நார்சீஸைப் போல் இருக்கிறார்கள். தண்ணீரிலே தான் கண்ட அவனுடைய நிழலின்மீதே காதல்கொண்டு நாட்களை வீணாக்கினதால் அவன் தன் காதலை நிறைவேற்றமுடியவில்லை. ஏனென்றால் அது அவனுடைய சுயநிழல். கடைசிகாலத்தில் ஒழுக்கச்சீர்கேட்டிற்கு காரணம் தன்மீது அன்புகூறுதல் ஆகும் (2.தீமோ.3:2). இன்றைய நாட்களில் படைத்தவரைவிட படைக்கப்பட்டவைகளைப் பெரிதாக தொழுதுகொள்கிறார்கள் (ரோ.1:25).

இயேசு கிறிஸ்துவைக் கர்த்தர் என்று ஏற்றுக்கொள்வது வாழ்க்கையிலும், செயலிலும் காட்டப்படவேண்டும். நாம் நம்மை ஆளுகை செய்வதை விட்டுவிட்டோம் என்பதைப் புரிந்துகொள்ளுதல் கிறிஸ்தவ வாழ்வின் வளர்ச்சிக்கு அடிப்படையாகும். மக்கதோனியர் தங்களைக் கர்த்தருக்குக் கொடுத்தார்கள் (2.கொரி.8:5). நாம் பாவத்திற்கு மரித்திருக்கிறோம் என்று எண்ணி (ரோ.6:11), நாம் நம்மை தேவனுக்கு ஒப்புக்கொடுக்கவேண்டும் (ரோ.6:13). நாம் நம் சரீரங்களை ஜீவபலியாக ஒப்புக்கொடுக்கவேண்டும் (ரோ.12:1-2), அதன்மூலம் நம் வாழ்க்கையில் தேவன் ஆட்சி செய்வதை அனுபவ ரீதியாக உணர்ந்துகொள்ளமுடியும். தேவனின் உன்னத தன்மையை அறிகின்றபொழுது அவரே நம் வாழ்க்கையின் எல்லாவற்றிலும் முதல்வராய் இருப்பார் (கொலோ.1:18). கர்த்தருடைய ஜெபத்திலே உம்முடைய சித்தம் செய்யப்படுவதாக (மத்.6:10) என்று சொல்லி இருப்பதுபோல நம் வாழ்விலும் அவரின் சித்தம்செய்யப்படவேண்டும் என்று தெரிந்துகொள்வோம்.

பின்வருகின்ற பகுதிகளில் தேவனுடைய ஆளுகை நமக்கு மிக அவசியம். அதுவே நற்சாட்சியாகவும் இருக்கும்.

## 1) முன்னுரிமை

முதலாவது தேவனுடைய இராஜ்ஜியத்தையும், அவருடைய நீதியையும் தேடுங்கள் (மத்.6:33). கிறிஸ்து ஒருபோதும் இரண்டாவது இடத்தில் இருக்கமாட்டார்.

## 2) சரீரம்

நாம் விலைக்கு வாங்கப்பட்டிருக்கிறோம். அந்த விலையில் நம்முடைய சரீரமும் சேர்ந்து விற்கப்பட்டது (1.கொரி.6:19-20). நம்முடைய சரீரம் தேவனுடைய ஆலயம்.

## 3) நமக்கு உரியவைகள்

எல்லாம் உம்மால் உண்டானது (1.நாளா.29:14). நாம் உக்கிராணக்காரர்கள் (1.கொரி.4:2). நமக்குரியவைகள் தாலந்துகள், நேரம் அனைத்தும் கர்த்தருக்கு உரியது. அவைகள் நமக்குக் கடனாகக் கொடுக்கப்பட்டுள்ளது.

## 4) உறவுகள்

நான் உங்களில் அன்பாய் இருக்கிறதுபோல நீங்களும் ஒருவரிலொருவர் அன்பாயிருங்கள் என்று கிறிஸ்து கட்டளையிட்டார். இதுவே இயேசு கிறிஸ்துவுக்குச் சீஷராய் இருப்பதற்கு அறிகுறியாக இருக்கிறது (யோ.13:35). அன்பு தியாகத்தைக் குறிக்கிறது. நாம் பிறரைக் குறித்து அக்கறை உள்ளவராய் இருக்கவேண்டும், ஏனென்றால் கிறிஸ்துவும் அப்படியே இருந்தார். அவர் பாவிகளுக்கு விலகியிருந்தார் (எபி.7:26), இருந்தாலும் பாவிகளோடு போஜனம்பண்ணினார் (லூக்.15:2). அன்பும், பரிசுத்தமுமே நாம் பிறரோடு கொண்டுள்ள உறவை ஆளவேண்டும். வேதம் உலகோடு உள்ள நட்பைத் தடை செய்கிறது (யாக்.4:4). ஏனென்றால் உலகில் உள்ளவர்கள் தேவனுக்குரியவர்கள் அல்ல (1.யோ.2:15-16). நமக்கு வீடுகளிலும் ஒழுங்கான உறவு முறை இருக்கவேண்டும் (எபேசி.5:22-25 ; 6:1-2).

## 5) வியாபாரம், வீடு, படிப்பு

வேலைசெய்பவராக இருந்தாலும், அல்லது வேலைகொடுப்பவராக இருந்தாலும், நாம் நீதியுள்ளவர்களாக இருக்கவேண்டும் என்று அழைக்கப்பட்டிருக்கிறோம் (எபேசி.6:5,9 ; யாக்.5:4). நாம் கர்த்தருக்கென்றெ எல்லாவற்றையும் செய்யவேண்டும் (கொலொ.3:24).

## 6) பேச்சும், சிந்தையும்

கர்த்தர் நாவுக்கும் மனதுக்கும் தேவனாயிருக்கவேண்டும். நாம் அவரை அனுமதித்தால், அவர் நம் மூலம் பேச விரும்புகிறார் (மத்.10:20). நாம் கேட்கிறதற்குத் தீவிரமாயும், பேசுகிறதற்குப் பொறுமையாயும் இருப்போம் (யாக்.1:19). நாம் பிறரைப்பற்றி மோசமாகப் பேசக்கூடாது (யாக்.4:11). நம்முடைய சிந்தனைகளைத் தேவன் பார்த்து, தீட்டானவைகளைக் கண்டுகொள்கிறார் (மத்.15:19-20).

## 7) நம்பிக்கையும், நோக்கமும்

நித்தியத்தில், கர்த்தர் ஒருவனின் செயல்களைச் சோதித்து மதிப்பிடும்போது எதன் அடிப்படையில் அவனை மதிப்பிடுகிறார் (1.கொரி.3:11-15)? கிறிஸ்து தேவனுடைய வலதுபாரிசத்தில் வீற்றிருக்கும் இடத்திலுள்ள மேலானவைகளை நாம் தேடவேண்டும் (கொலோ.3:1). அப்படியானால் பூமியிலுள்ளவைகளில் எவை நித்தியத்துக்கு முக்கியமானதாக இருக்கிறது?

நம் வாழ்வில் எப்பகுதியை நாம் வளர்த்துக்கொள்வது தேவை என்பதை அறிந்துகொள்ள பின்வருகிற ஆலோசனைகள் நமக்கு உதவியாக இருக்கலாம்.

- கர்த்தருக்கு வாழ்வில் முதலிடம் கொடுக்கிறோமா?
- நம்முடைய தீர்மானங்களில் கர்த்தரை நினைவில்கொள்கிறோமா?
- நம்முடைய ஒவ்வொரு உறவும் கர்த்தரால் அங்கீகரிக்கப்பட்டுள்ளதா?

- நம்முடைய ஒவ்வொரு செயலிலும் கர்த்தர் பிரசன்னமாகிறாரா?
- நம்முடைய வாழ்வின் ஒவ்வொரு பகுதியும் கர்த்தரின் கட்டுப்பாட்டில் உள்ளதா?
- ஒவ்வொருநாளும் நம்முடைய சரீரத்தில் கர்த்தருக்கென்று பொறுப்புக்களை ஏற்றுக்கொண்டு அந்நாளை ஆரம்பிக்கிறோமா?
- நம்முடைய ஒவ்வொரு பொறுப்புக்களும் கர்த்தருக்கு நாம் ஆற்றவேண்டிய பொறுப்புகளோடு ஒத்தள்ளதா?

## முடிவுரை

இயேசு கிறிஸ்து மூலம் நம்மில் இருக்கிற சுயத்தை வென்றால் ஒழிய விசுவாசியின் வாழ்வில் சீரான வளர்ச்சி இல்லை. குறைவான பரிசுத்தம், பரிபூரணம் இல்லாத பக்தி, இவையே இன்று பல விசுவாசிகளிடமும், சபைகளிடமும் காணப்படுகின்ற வியாதியாகும். கர்த்தர் சொல்கிறார்: என் மகனே, உன் இருதயத்தை எனக்குத் தா (நீதி.23:26). இருதயமே நம்மை ஆளுகின்ற பகுதி. இங்கு கிறிஸ்து நம்முடைய ஆண்டவராக ஆளவேண்டும்.

முற்காலத்தில் இப்படியொரு எண்ணம் இருந்தது, என்னவென்றால் மனிதனுடைய பெரிய எதிரி கூறினான். தேவன் தன்னுடைய சித்தத்தை முன்னாக வைத்து மனிதனின் முதன்மையான இடத்தைப் பறித்துப்போட்டார் என்று (ஆதி.3:5). இவ் வார்த்தைக்குச் செவிகொடுத்தபடியால் மிகப் பெரிய தண்டனை பெற்றாகிவிட்டது. நம்முடைய எதிர்காலம் கர்த்தருடைய சித்தத்திற்குக் கீழ்ப்படிவதாலும், இயேசு கிறிஸ்துவின் கர்த்தத்துவத்தை ஏற்றுக்கொள்வதாலும், நித்தியமானவர் நம்மை ஆட்சிசெய்வதற்கு ஒப்பக்கொடுத்தலையும் சார்ந்துள்ளது. இது நம்முடைய நித்திய நன்மைக்கு முக்கியமானதாகும்.

## பாடம் 3 ற்கான கேள்விகள்

*1) பின்வரும் வசனங்களில் இருந்து இயேசு கிறிஸ்துவின் அந்தஸ்து அல்லது நிலை என்ன என்பதைக் கற்றுக்கொள்கிறீர்கள் (எபேசி.1:20–21 ; கொலோ.1:18 ; 1.பேது.3:22 ; வெளி 4:10–11 ; 5:12–13)?*

*2) கிறிஸ்துவின் கர்த்தத்துவத்தை ஏற்றுக்கொண்டிருக்கிற, ஏற்றுக்கொள்ளப்போகிற நபர்களையோ அல்லது பொருட்களையே பட்டியலிடுக.*

*மத்.8:27*

*மத்.26:53*

*மாற்.1:27*

*ரோ.14:9*

*பிலி.2:10–11*

3) கர்த்தர் இந்த உலகிற்கு வந்தபோது எவ்வாறு ஏற்றுக்கொள்ளப்பட்டார் (யோ.1:10–12)? லூக்கா 19:14,27ல் ஜனங்களின் அடிப்படை ஆட்சேபணை என்ன? இது எப்படி இயேசு கிறிஸ்துவை புறக்கணித்தவர்களுக்குப் பொருந்தும் என்பதை விபரிக்க.

4) யோவான் 20:28ல் தோமாவினுடைய அறிக்கையின் முக்கியத்துவம் என்ன?

இரட்சிக்கப்படுவதற்கு ஒருவன் கண்டிப்பாய்ச் செய்யவேண்டியது ஒன்று எது (ரோ.10:9–10)?

இயேசு இரட்சகர் என்று ஏற்றுக்கொண்டு, கர்த்தர் என்று ஏற்றுக்கொள்ளாமல் இருப்பது இரட்சிப்படையப் போதுமானதா? விளக்கவும்.

5) இயேசுவை கர்த்தர் என்று சொல்லிய பின்பும், இரட்சிக்கப்படாமல் இருப்பதற்கு சாத்தியக்கூறு உள்ளதா (மத்.7:21–23 ; லூக்.6:46 ; 13:25–27 ; 1.யோ.2:3–4)?

6) ரோமர் 12:1–2 ஐ உங்கள் சொந்த நடையில் எழுதுக. இப் பகுதியில் நடைமுறையில் கர்த்தத்துவத்தை ஏற்றுக்கொள்வதற்கு என்ன செயல்பாடுகள் தேவையாக இருக்கிறது?

7) கீழ்ப் பகுதியிலே இடது பக்கம் இயேசு கிறிஸ்துவை வாழ்க்கையில் கர்த்தராக ஏற்றுக்கொண்டவர்கள் பற்றி விளக்கமும், வலது பக்கம் அப்படிச் செய்யாதவர் பற்றியும் கூறப்பட்டுள்ளது?

**பொதுவான நடக்கை**

*கொலோ.2:6* — *எபேசியர்*

**பால் உறவு**

*1.கொரி.6:18–20* — *1.கொரி.6:9–10*

**பேச்சு**

*கொலோ.4:6* — *கொலோ.3:8–9*

**வேலை**

*கொலோ.3:23–24* — *கொலோ.3:22*

**குடும்ப உறவு**

*கொலோ.3:18–21* — *கொலோ.3:22*

8) கிறிஸ்தவன் என்று கூறிக்கொண்டும், கிறிஸ்துவை தன் வாழ்வில் அதிகாரம் செலுத்த விடாதவரை நீங்கள் பார்த்தால் உங்களுடைய பதில் என்னவாக இருக்கும்?

9) வெளிப்படுத்தின விசேஷம் 3:20ல் நம்முடைய இருதயமாகிய வாசல் அண்டையில் நின்று தட்டுகிறார். கிறிஸ்துவை என் வாழ்க்கையில் கர்த்தராக ஏற்றுக்கொள்ள எடுத்துவைக்கவேண்டிய முதல்படி என்ன? உங்கள் வீட்டில் இன்னும் கிறிஸ்துவை அனுமதிக்க வேண்டிய அறை யாது? இதற்கு நீங்கள் என்ன செய்ய நோக்கமாக இருக்கிறீர்கள்? விளக்கவும்!

10) தனிப்பட்டமுறையில் கிறிஸ்துவின் கர்த்தத்துவத்தை (ஆளுகையை) பற்றி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்? விளக்குக!

## பாடம் 4: ஞானஸ்நானத்தில் அடக்கம்பண்ணப்படுதல்

சபை பாரம்பரியத்திலும், செயற்பாடுகளிலும் ஞானஸ்நானத்தைக் குறித்துப் பல வித்தியாசங்களும், முரண்பாடுகளும் உள்ளன. தேவபக்தியுள்ள மனிதர்களும் பல்வேறு கருத்துக்களைக் கொண்டுள்ளனர். ஆனாலும் ஞானஸ்நானம் கர்த்தராகிய இயேசு தன்னைப் பின்பற்றுபவர்களுக்குக் கொடுத்த அடிப்படைக் கட்டளைகளில் ஒன்றாகும். மத்.28:19ல் இயேசு சொன்னார்: நீங்கள் புறப்பட்டுப்போய், சகல ஜாதிகளையும் சீஷராக்கி, பிதா, குமாரன், பரிசுத்தஆவியின் நாமத்தினாலே அவர்களுக்கு ஞானஸ்நானம் கொடுங்கள். இரட்சிக்கப்பட்ட விசுவாசிகள் ஞானஸ்நானம் எடுக்கவேண்டும் (மாற்.16:16). ஆதிக்கிறிஸ்தவர்களுக்கு இதைப் பற்றி உண்மையாகவும், ஒழுங்காகவும் கற்றுக்கொடுக்கப்பட்டது. அவர்கள் கீழ்ப்படிந்தார்கள் (அப்.2:38,41 ; 8:12,36-39 ; 9:18 ; 10:47-48 ; 16:15,33 ; 18:8 ; 22:16). ஞானஸ்நானம் கீழ்ப்படிதலின் முதற்படி. புதிய விசுவாசிகள் இதன்மூலம் தங்களை சில வேளையில் பாடுகளுக்குப் பங்குள்ளவராக்கினார்கள். அவர்கள் கிறிஸ்துவைக் கர்த்தரென்றும் இரட்சகர் என்றும் அறிக்கையிட்டு, ஞானஸ்நானத்தின் மூலம் வெளிப்படையாகக் காட்டிக்கொள்கிறார்கள்.

## வேறு ஞானஸ்நானம் உள்ளனவா ?

மேற்கூறப்பட்டுள்ள வேதவாக்கியங்களைப் பார்த்தால், அவற்றை விசுவாசிகளின் ஞானஸ்நானம் என்று அழைக்கிறோம். இதுதான் இப் பாடத்தின் நோக்கமாகும். ஞானஸ்நானம் என்ற வார்த்தையைத் தெளிவுற அறியவேண்டும் என்பதற்காக கீழ் வருகின்றவைகளைப் பற்றித் தெரிந்துகொள்வது நலம்.

### 1) யூதர்களின் சடங்காச்சார சுத்திகரிப்பு (லூக்.11:38 – 39 ; எபி.6:2 ; 9:10 ; மாற்.7:4)

பழைய ஏற்பாட்டில் ஆசாரியர்கள் இப்படிப்பட்ட முறையில் தங்களைச் சுத்திகரித்துக் கொண்டார்கள். சாப்பிடுகின்ற, குடிக்கப் பயன்படுத்துகின்ற பொருட்களைக் கழுவுதல், சடங்காச்சாரமாக சாப்பிடுவதற்கு முன்பாக கைகழுவுதல் இதில் அடங்கும். யூதர்கள் அல்லாதோர், யூதராக மாறும்பொழுது தீட்டில் இருந்து தங்களைச் சுத்திகரித்துக்கொள்ள ஞானஸ்நானம் பெற்றார்கள்.

### 2) யோவானின் மனந்திரும்புதலுக்கான ஞானஸ்நானம் (மாற்.1:2 – 4 ; லூக்.3:5 – 6 ; யோ.1:31 ; அப்.13:24)

இது இஸ்ரவேலருடைய மனம் திரும்புதலுக்கான அழைப்பாக இருந்தது. மேசியாவின் முன்னோடி என்பதால், யோவான் கர்த்தருக்கு வழியை ஆயத்தம்பண்ணுகிறவராக இருந்தார். இந்த ஞானஸ்நானம் கிறிஸ்தவர்களின் ஞானஸ்நானம் போன்றது அல்ல (அப்.19:3-5). இந்த ஞானஸ்நானத்திற்கு தண்ணீரில் மூழ்கவேண்டியதாயிருந்தது (மத்.3:16 ; யோ.3:23). கர்த்தராகிய இயேசுவுக்கு மனந்திரும்புதல் தேவையில்லாது இருந்தபோதும் நீதியை நிறைவேற்றும்படி யோவானால் ஞானஸ்நானம் பெற்றார் (மத்.3:14-15). யோவானால் பெற்ற ஞானஸ்நானத்தோடு கிறிஸ்து வெளிப்படையான தன் ஊழியத்தைத் தொடங்கினார்.

### 3) கிறிஸ்துவின் பாடுகளுக்குரிய ஞானஸ்நானம் (லூக்.12:50 ; மாற்.10:38 – 39 ; மத்.20:22)

நம்முடைய பாவங்களுக்காய் அவர் பாடுபட்டார் (1.பேது.3:18 ; ஏசா.53:4). சிலுவையிலே நம்முடைய பாவங்களுக்காக மரித்தபோது தேவனுடைய கோப அலைக்குள்ளாக மூழ்கடிக்கப்பட்டார் (சங்.42:7).

### 4) ஆவியின் ஞானஸ்நானம் (மத்.3:11 – 12 ; லூக்.3:16 ; யோ.1:33 ; அப்.1:4 ; 11:16)

யோவானால் இது தீர்க்கதரிசனமாக உரைக்கப்பட்டு, பெந்தேகோஸ்தே நாளில் துவங்கப்பட்டது (அப்.2). இதன் முக்கிய நோக்கம் என்னவென்றால் விசுவாசிகளை கிறிஸ்துவின் சரீரத்தில் நிலைப்படுத்துவதாகும் (1.கொரி.12:13).

நாம் ஞானஸ்நானம் என்ற வார்த்தையோடு சம்பந்தப்பட்டுள்ள அக்கினி (மத்.3:11-12 ; லூக்.3:16-17), மோசே (1.கொரி.10:2), மரித்தவர் (1.கொரி.15:29) ஆகியவை குறித்து இங்கு ஆராயவில்லை. ஏனென்றால் இப் பாடத்திற்கும் அதற்கும் தொடர்பு இல்லை.

## யார் ஞானஸ்நானம் பெறவேண்டும் ?

கிறிஸ்துவின்மீதுள்ள விசுவாசத்தை அறிக்கையிட்ட பின்னரே ஞானஸ்நானம் பெற்றுக் கொள்ளவேண்டும். ஏராளமான சபைகளில் இரட்சிப்புக்கு முந்தியது ஞானஸ்நானமாக இருக்கிறது. இது வேதத்தின் மூலம் நிரூபிக்க முடியாததாக இருக்கிறது. வேதாகமத்தில் முதலில் விசுவாசம், பின்னரே ஞானஸ்நானம் என்கிற முறை உள்ளது. நாம் கிறிஸ்துவின் கட்டளையைப் பார்ப்போமாயின் சீஷராக்கி.... ஞானஸ்நானம் கொடுத்தல் (மத்.28:19). விசுவாசம், ஞானஸ்நானம் (மாற்.16:16). பெந்தேகொஸ்தே நாளில் இரட்சிப்பைப் பெறவேண்டும் என ஆவல் கொண்ட ஜனங்களைப் பார்த்து பேதுரு மனந்திரும்பி இயேசு கிறிஸ்துவின் நாமத்தினாலே ஞானஸ்நானம் பெற்றுக்கொள்ளுங்கள் என்கிறார் (அப்.2:37-38). பிலிப்பு, எதியோப்பிய மந்திரி இயேசு கிறிஸ்துவைத் தேவகுமாரன் என்று விசுவாசித்தபின்னர் ஞானஸ்நானம் கொடுத்தார் (அப்.8:36-37). கொரிந்தியர்கள் முதலில் விசுவாசித்தார்கள், பின்னர் ஞானஸ்நானம் பெற்றார்கள் (அப்.18:8). நாம் சுவிசேஷத்தை விசுவாசித்ததால் இரட்சிக்கப்பட்டிருக்கிறோம் (எபேசி.1:13 ; 1.கொரி.15:1-4). இதில் ஞானஸ்நானம் ஒரு பகுதியாக இல்லை (1.கொரி.1:17). மனந்திரும்பலும், கிறிஸ்துவின் மீது விசுவாசம் வைத்தலும் முதலாவதாக இருக்கவேண்டும் (அப்.20:21).

## குழந்தை ஞானஸ்நானம்

வேதத்திலேயே குழந்தைகளுக்கு ஞானஸ்நானம் கொடுத்தலைப் பற்றி எந்த விளக்கமும் இல்லாத பொழுதும், நூற்றாண்டுகளாக ஏராளமான சபைகள் இம் முறையைப் பின்பற்றுகின்றன. வரலாற்று ரீதியாக மூன்று காரணங்களால் குழந்தைகளுக்கு இச் சபைகள் ஞானஸ்நானம் கொடுக்கிறது.

- நரகத்தில் இருந்து குழந்தையை மீட்டுக் கொள்வதற்காக,
- பிற்காலத்தில் திடப்படுத்தல் மூலம் இரட்சிப்பைச் சுதந்தரித்துக்கொள்ள இது இரட்சிப்பின் துவக்கமாக இருக்கிறது, அல்லது
- குழந்தையைக் கிறிஸ்துவுக்குள் வளர்ப்பதன் முக்கியத்துவத்தைப் பெற்றோர்களின் மனதில் பதிய வைப்பதற்கு குழந்தை ஞானஸ்நானத்தைச் செய்கின்றார்கள்.

ஞானஸ்நானம் பெறாத குழந்தைகள் நரகத்திற்குப் பாத்திரவான்கள் என்பது தேவனைப் பற்றிய பயங்கர எண்ணத்தை உண்டுபண்ணுகிறது. மேலும் ஞானஸ்நானம் இரட்சிப்புக்கு வழிவகுக்கிற ஒன்று என்ற வேதத்தில் ஆதாரம் இல்லை. குழந்தைகள் அர்ப்பணிப்பு ஆராதனை என்பதும் புதிய ஏற்பாட்டில் இல்லாத ஒன்றாகும். இருந்தாலும் குழந்தை ஞானஸ்நானத்தைக் குறித்த விவாதங்கள் வேதத்தில் இருந்தே எழுப்பப்படுகிறது.

### 1) குழந்தை ஞானஸ்நானத்திற்கு ஆதாரமாக வேதத்தில் தோன்றுபவை

மாற்.10:13-16 ; மத்.19:13-15 ஆகிய இரு பகுதிகளும் குழந்தை ஞானஸ்நானத்தோடு தொடர்புபடுத்தப்படுகிறது. பெற்றோர்கள் தங்கள் பிள்ளையை இயேசுவிடம் கொண்டுவந்தார்கள். அப்பொழுது அவர் கூறினார்: சிறு பிள்ளைகளை என்னிடத்தில்

வருகிறதற்கு இடங்கொடுங்கள். அவர்களைத் தடைபண்ணாதிருங்கள். பரலோகராஜ்யம் அப்படிப்பட்டவர்களுடையது. இயேசு குழந்தைகளுக்கு ஞானஸ்நானம் கொடுக்கவில்லை, ஆனால் அவர்களை ஆசீர்வதித்தார். இயேசுவும் சீஷர்களும் குழந்தைகளுக்கு ஞானஸ்நானம் கொடுத்தால், சீஷர்கள் சிறுபிள்ளைகள் இயேசு அண்டை வருவதற்குத் தடைசெய்திருக்கமாட்டார்கள். ஒருவர் கூறுகிறார்: இயேசுவை நாம் இங்கு பார்க்கிறோம், ஆனால் தண்ணீரைக் காணவில்லை. மத்தேயு 18:2-6ல் இயேசு கூறுகிறார்: மனந்திரும்பி சிறுபிள்ளைகள்போல் நீங்கள் ஆகாவிட்டால் பரலோகராஜ்யத்தில் பிரவேசிக்கமாட்டீர்கள். இங்கு தன்னிடத்தில் நிற்கின்ற குழந்தையை மையமாக வைத்து இக் கருத்தைக் கூறுகிறார். இங்கு தாழ்மைக்கு அடையாளமாக குழந்தையை கூறப்படுகிறதே தவிர, ஞானஸ்நானத்தைக் குறிக்கவில்லை. 1.கொரிந்தியர் 7:14ல் மேற்கோள் காட்டப்படுகிறது. விசுவாசிகளின் குழந்தைகள் இங்கு பரிசுத்தம் உள்ளவர்கள் என அழைக்கப்படுகிறார்கள். பரிசுத்தம் என்பது பிரித்தெடுக்கப்பட்ட என்ற பொருளைக் குறிக்கிறது. இங்கு விசுவாசிகளின் குழந்தைகளின் சிறப்பு நிலை குறிப்பிடப்படுகிறது. இப்படிப்பட்ட நிலை ஞானஸ்நானத்தால் ஏற்பட்டதல்ல. கிறிஸ்தவப் பெற்றோருக்குப் பிறந்ததால் ஒருவன் சபையில் பிறந்தவன் என்று வேதம் சொல்லவில்லை. மறுபடி பிறத்தலே இரட்சிப்பு. மாமிசமான பிறப்பில் இருந்து அல்ல (யோ.1:13 ; 3:5,7).

### 2) விருத்தசேதனத்தை அடிப்படையாகக் கொண்ட விவாதம்

யூதர்கள் தங்கள் ஆண்பிள்ளைகளை எட்டாம் நாளில் விருத்தசேதனம் செய்வார்கள் (லூக்.1:59). விருத்தசேதனத்தின்மூலம் பிள்ளைகள் யூதஜாதிக்குள் அறிமுகப்படுத்தப் படுகிறார்கள். இதை அடிப்படையாகக்கொண்டு கிறிஸ்தவர்கள் குழந்தை ஞானஸ்நானத்திற்காக வாதிக்கின்றனர். கொலோசேயர் 2:11-12ல் கிறிஸ்துவைப் பற்றும் விருத்தசேதனம் சொல்லப்பட்டிருக்கிறது. இதில் கிறிஸ்து தன்னுடைய மரணத்தின் மூலம் பாவத்தை நீக்க வல்லவர் என்பதைக் குறிக்கிறது. இப் பகுதியில் குழந்தை ஞானஸ்நானத்தை ஆதரிக்கிற பகுதிகள் இல்லை.

### 3) வீட்டார் அனைவரும் ஞானஸ்நானம் பெற்றார்கள் என்ற அடிப்படையில் விவாதம்

லீதியாள் (அப்16:14-15), பிலிப்பி பட்டணத்துச் சிறைச்சாலைக்காரன் (அப்.16:30-33), கிறிஸ்பு, ஸ்தேவான் (1.கொரி.1:15-16 ; 16:15) ஆகியவர்களின் வீட்டார்கள் பற்றிக் கூறுகின்றபொழுது அவர்கள் விசுவாசித்து ஞானஸ்நானம் பெற்றார்கள். இவர்கள் வீடுகளில் குழந்தைகள் இருந்திருப்பார்கள் என பலர் யூகிக்கின்றனர். மேலும் வீட்டார் அனைவரும் ஞானஸ்நானம் பெற்றார்கள் என்று கூறுகின்றபொழுது குழந்தைகளும் இதில் அடங்கும் என யூகிக்கின்றனர். ஆனால் இதை வலியுறுத்திக்கூற இப்பகுதியில் ஆதாரம் இல்லை. புரிந்துகொள்கின்ற வயதில் உள்ளவர்களும், இயேசு கிறிஸ்துவைக் குறித்த நற்செய்தியை விசுவாசித்தவர்களும் ஞானஸ்நானம் பெற்றார்கள் (அப்.16:33-34).

## விசுவாசிகளுடைய ஞானஸ்நானத்தின் சிறப்பு என்ன ?

தண்ணீர் சுத்திகரிப்போடு தொடர்புடையது, ஆனால் விசுவாசிகள் கிறிஸ்துவின் இரத்தத்தினால் சுத்திகரிக்கப்படுகிறார்கள். ஞானஸ்நானம் மரித்தல், அடக்கம்பண்ணப்படுதல், உயிர்த்தெழுதல் ஆகியவற்றின் சாயலாக இருக்கிறது (ரோ.6:3-5). கிறிஸ்து நம்முடைய பாவத்திற்காக மரித்தார், நம்முடைய நீதிக்காக உயிர்த்தெழுந்தார். தேவன் நம்முடைய இரட்சிப்பில், மரித்தல், அடக்கம்பண்ணப்படல், உயிர்த்தெழல் ஆகியவற்றை நமக்குப் பதிலாக கிறிஸ்துவில் அவைகளை ஏற்றுள்ளார். தேவனுடைய கண்களுக்கு முன்பாக நாம் கிறிஸ்துவோடே மரித்து, அவரோடுகூட உயிர்த்தெழுந்திருக்கிறோம் (கொலோ.3:1-3 ; ரோ.6:6-11). விசுவாசி களைப் பொறுத்தவரையில், ஞானஸ்நானம் ஏற்கெனவே நடந்துமுடிந்த நிகழ்ச்சியின் ஒரு சித்திரம் அல்லது தெளிவான விளக்கம். தண்ணீரினாலே பெறுகின்ற ஞானஸ்நானத்தின்மூலம் விசுவாசி மரணத்தையும், அடக்கத்தையும், உயிர்த்தெழுத

லையும் அடையாளமாக கடந்து வருகிறான். இவ்வாறான ஞானஸ்நானத்தின்மூலம் ஒரு விசுவாசி கிறிஸ்துவின் மரணத்தோடும், அடக்கத்தோடும், உயிர்த்தெழுதலோடும் தன்னை இணைத்துக்கொள்கிறான். அதன்மூலம் அவன் கிறிஸ்துவோடு கூட இருப்பதாக அறிக்கைபண்ணுகிறான். ஞானஸ்நானம் தேவனைப் பற்றும் நல்மனச்சாட்சியின் உடன்படிக்கையாயிருக்கிறது (1.பேது.3:21). விசுவாசி வெளிப்படையாக இவ்வாறு கூறுகிறான்: என்றுடைய இரட்சிப்பிற்கு தேவையான அனைத்தையும் கிறிஸ்து எனக்காகச் சிலுவையில் செய்துமுடித்தார். நான் இதை இருதயத்தில் விசுவாசிக்கிறேன். அதை அவர் கட்டளையிட்டபடி ஞானஸ்நானத்தின்மூலம் வெளிக்காட்டுகிறேன். நான் அவரோடு என்னை அடையாளப்படுத்திக்கொள்கிறேன். இப்படிக் கிறிஸ்துவோடுகூட தன்னை அடையாளம் காட்டிக்கொண்டவர்கள் ஞானஸ்நானப்பட்ட வாழ்க்கை வாழ அழைக்கப்படுகிறார்கள். அதாவது அவரோடுகூட நாம் நடக்கவேண்டும்.

வேதவாக்கியங்களில் சொல்லப்படாத வார்த்தைகளைப் பற்றி நாம் விவாதிக்கத் தேவையில்லை. ஆனால் இவை மனிதனால் அடிக்கடி பயன்படுத்தப்படுகிறது. அவைகள் சாக்கிரமந்து சடங்கு, மரபுமுறைகள், ஏற்றுக்கொள்ளுதல், கிருபையின் முத்தரிப்பு, சுத்திகரிப்பின் அடையாளம், வாக்குறுதி.

## ஞானஸ்நானம் இரட்சிக்குமா ?

அநேக சபைகள் தண்ணீரினாலே எடுக்கப்படுகின்ற ஞானஸ்நானம் புதிய பிறப்பிற்கு காரணமாயிருக்கிறது என்றும், பாவத்தைப் போக்குகின்றது என்றும் நம்புகின்றனர். இந்த வேதபகுதிகளை அவர்கள் இதற்கு ஆதாரமாகப் பயன்படுத்துகின்றனர்.

### 1) யோவான் 3:5

ஜலத்தினாலும் ஆவியினாலும் பிறத்தல் என்கிற வார்த்தை புதிய பிறப்பு அல்லது மறுபடி பிறத்தல், தண்ணீரில் எடுக்கின்ற ஞானஸ்நானத்தால் நிகழக்கூடிய ஒன்று என்று நினைக்கக்கூடுகிறது. இங்கு ஞானஸ்நானம் என்ற வார்த்தை பயன்படுத்தப்படவில்லை என்பதை நாம் முதலில் தெரிந்துகொள்ளவேண்டும். தண்ணீர் எப்பொழுதும் ஞானஸ்நானத்தைக் குறிப்பதாக அர்த்தம்கொள்ளக்கூடாது. யோவான் 7:38-39ல் தண்ணீர் பரிசுத்தஆவியைக் குறிப்பதாக உள்ளது. யோாவன் 3:6,8 ஆவியினால் பிறப்பதைக் குறித்துச் சொல்கிறது. வேறுசிலர் கூறுகின்றார்கள் தண்ணீர் தேவனுடைய வார்த்தையைக் குறிப்பதாக, யோவான் 15:3 வார்த்தையினாலே சுத்தமாகுதலைப் பற்றிச் சொல்கிறது. எபேசியர் 5:26 தண்ணீராகிய வசனத்தையும், 1.பேதுரு 1:23 வசனத்தால் மறுபடி பிறத்தல் பற்றியும் கூறுகிறது. கர்த்தர் ஜீவதண்ணீரைக் குறித்துப் பேசும்போது தண்ணீரைப் பற்றிக் கூறுகிறார் (யோ.4:14). யோவான் மூன்றாம் அதிகாரத்தில் மறுபடி பிறத்தல் அல்லது புதிய பிறப்பிற்கு காற்று, வெண்கல சர்ப்பமும் விளக்கமாகக் கூறப்பட்டிருக்கிறது. இரண்டுமே தண்ணீரினால் கொடுக்கப்படுகிற ஞானஸ்நானத்தைக் குறிக்கவில்லை. காற்று வீசுகிறதைப் பார்க்கமுடியாது, நிதானித்து அறியமுடிகிறது. இங்கு இப் பகுதிக்கும் ஞானஸ்நானத்திற்கும் சம்பந்தம் இல்லை.

### 2) தீத்து 3:5

இந்த வசனம் மறுஜென்மமுழுக்கு பற்றிக் கூறுகிறது. இங்கு ஞானஸ்நானம் என்ற வார்த்தை பயன்படுத்தப்படவில்லை. இதன் பின் பகுதியில் பரிசுத்த ஆவியின் புதிதாக்குதல் பற்றி சொல்லப்படிட்டிருக்கிறது. மேலும் முழுகல் என்கிற வார்த்தை பாப்டிஸ்மாஸ் (baptismus) என்கிற கிரேக்க வார்த்தையில் இருந்து எடுக்கப்பட்டது அல்ல, லௌட்ரான் (loutron) என்ற வார்த்தையிலிருந்து எடுக்கப்பட்டது. இது குளிப்பதற்குப் பயன்படுத்தப்படுகின்ற வார்த்தை.

### 3) 1.பேது.3:21

ஞானஸ்நானம் நம்மையும் இரட்சிக்கிறது என்ற பகுதி ஞானஸ்நானத்தால் இரட்சிப்பு என்ற கூற்றை உறுதிப்படுத்துவதாக இருப்பதுபோல் தோன்றுகிறது. ஆனால் இதன் முந்தின பகுதியைப் படிக்கின்ற பொழுது ஞானஸ்நானமானது, மாம்ச அழுக்கை நீக்குவதாயிராமல், தேவனைப் பற்றும் நல்மனச்சாட்சியின் உடன்படிக்கையாயிருக்கிறது என்கிற பகுதி ஞானஸ்நானத்தால் இரட்சிப்பு உண்டாகிறது என்ற கருத்தைப் பலவீனப்படுத்துகிறது. இங்கு நோவாவின் காலத்தில் தேவன் ஜலத்தின் மூலமாக பூமியை அழித்தார். ஆனால் நோவாவின் குடும்பத்தாரை ஜலத்தின் மூலமாக பேழையை மிதக்கச் செய்து காப்பாற்றினார் (1.பேது.3:20 ம் வசனம்). இங்கு கிறிஸ்து பாதுகாப்பின் பேழையாக இருக்கிறார். நம்முடைய இடத்தில் கிறிஸ்து மரணஜலத்தை அனுபவித்தார். நாமும் அவரின் மரணத்திலே கடந்து சென்றோம். இவ்வாறு நியாயத்தீர்ப்பிலிருந்து நம்மை கிறிஸ்து பாதுகாக்கிறதற்கும், இரட்சிக்கிறதற்கும் இது சாயலாக இருக்கிறது. நாம் ஞானஸ்நானத்தால் பாதுகாக்கப்படாமல், கிறிஸ்துவில் பாதுகாப்பாக உள்ளோம்.

### 4) மாற்கு 16:16

விசுவாசமுள்ளவனாகி ஞானஸ்நானம் பெற்றவன் இரட்சிக்கப்படுவான் என்கிற பகுதி ஞானஸ்நானம் இரட்சிப்புக்கு முக்கியமான ஒன்றாகக் காணப்படுகிறதாகத் தெரிகிறது. ஆனால் இந்த வசனத்தின் பகுதியை நாம் பார்க்கின்றபொழுது விசுவாசியாதவனோ ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படுவான் என்றே கூறுகிறது. ஞானஸ்நானம் பெறாதவன் ஆக்கினைக்குள்ளாகத் தீர்க்கப்படுவான் என்று கூறவில்லை.

### 5) அப்போஸ்தலர் 22:16

இந்த வசனம் கூறுகிறது ஞானஸ்நானம் பெற்று உன் பாவங்கள் போகக் கழுவப்படு என்றான். இவ் வசனத்தை நாம் பார்க்கினற பொழுது, ஞானஸ்நானம் பாவத்தைப் போக்குகிறது போல காணப்படுகிறது. இது சரியென்றால் கிறிஸ்துவின் இரத்தம் மட்டுமே சகல பாவங்களையும் நீக்கும் என்கிற சத்தியம் இக் கூற்றை மறுக்கிறது (1.யோ.1:7 ; எபி.9:22). இவ் வசனம் பவுல் மனம் மாறியதைப் பற்றிக் கூறுகின்றபொழுது உள்ள வசனமாகும். அனனியா பவுலிடம் ஞானஸ்நானம் எடுக்கும்படி கூறினார். மேலும் கர்த்தரின் நாமத்தைத் தொழுதுகொள்ளவும் வேண்டினான் (ரோ.10:13). ஞானஸ்நான தண்ணீர் பாவத்தைக் கழுவாது (வெளி 1:6).

பின்வருகின்ற எடுத்துக்காட்டுக்கைள பார்க்கின்ற பொழுது தண்ணீர் அல்லது ஜலம் நம்முடைய இரட்சகர் அல்ல என்பதை

- சிலுவையில் அறையப்பட்டிருக்கிற திருடன் தண்ணீர் இல்லாமல் இரட்சிக்கப்பட்டான் (லூக்.23:43). பவுல் கிறிஸ்துவுக்குள் வழிநடத்தினவர்கள் அனைவருக்கும் ஞானஸ்நானம் அவன் கொடுக்கவில்லை. ஒருவேளை ஞானஸ்நானமானது மறுபடி பிறத்தலுக்கு காரணமாக இருக்குமானால் இது மன்னிக்கமுடியாத ஒரு பெரும் குறை (1.கொரி.1:14-17).
- இயேசு இரட்சகராக இருந்தபொழுதும் கூட அவர் ஞானஸ்நானம் கொடுக்கவில்லை (யோ.4:3).
- புறஜாதிகள் ஞானஸ்நானம் எடுப்பதற்கு முன்னாலே இரட்சிப்பையும், பரிசுத்தஆவியையும் பெற்றார்கள் (அப்.10:44-48).

## எப்படி ஒருவரை ஞானஸ்நானப்படுத்துவது ?

### 1) ஞானஸ்நானம் கொடுக்கும் விதம்

முதல் கிறிஸ்தவர்கள் அல்லது ஆதிக்கிறிஸ்தவர்கள் முழுக்கு ஞானஸ்நானம் கொடுத்தனர். இரண்டாம் நூற்றாண்டில்தான் தெளித்தல் முறை தோன்றியது, ஏறக்குறைய பதின்மூன்றாம் நூற்றாண்டில் இம்முறை பெருமளவில் கடைப்பிடிக்கப்

படுகின்ற ஒன்றாக மாறியது. வேதவாக்கியங்களின்படி பார்த்தால், முழுக்கு ஞானஸ்நானந்தான் காணப்படுகிறது. எடுத்துக்காட்டாக யோவான்ஸ்நானகன் கொடுத்த ஞானஸ்நானம் (யோ.3:23 ; மத்.3:16), பிலிப்பு கொடுத்த ஞானஸ்நானம் (அப்.8:38-39), இவைகளுக்குச் சான்று. ஞானஸ்நானத்தின் அடையாளம் கூட மூழ்கி எடுத்தலையே உணர்த்துகிறது. கிறிஸ்துவோடுகூட அடக்கம்பண்ணப்படல் (கொலோ.2:12 ; ரோ.6:4) என்கிற சொல் தலையிலே சில துளி தண்ணீரை தெளிப்பதைவிட, முழுவதுமாக தண்ணீருக்குள் செல்வதைக் குறிக்கிறது. தெளித்தல், அடக்கம்பண்ணலைக் குறிப்பது மிகவும் கடினமாகும். ஞானஸ்நானம் என்கிற சொல்லின் அர்த்தம் மூழ்குதலைக் குறிக்கிறது. ஆவியானவர் தெளித்தலைப் பற்றிக் கூறியிருக்கவேண்டுமென்றால் ரென்டிசோ (rhantizo) என்ற வார்த்தையைப் பயன்படுத்தியிருக்கலாம். ஆதிச்சபை பின்பற்றி முறை ஞானஸ்நானத்தின் அடையாளம், அதன் விளக்கம் ஆகியவை முழுகலையே குறிக்கிறது.

### 2) சூத்திரம்

சூத்திரம் அல்லது ஞானஸ்நானம் கொடுக்கும்போது சொல்லவேண்டிய வார்த்தைகள் என்னவென்றால், பிதா குமாரன் பரிசுத்தஆவியின் நாமத்தினாலே என்பதாகும் (மத்.28:19). இயேசுவின் நாமத்தினாலோ கர்த்தரின் நாமத்தினாலோ என்கிற வார்த்தைகளும் அப்போஸ்தலர் 2:38 ; 8:15 ; 10:48 ஆகிய இடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது. விசேடமாக யோவானின் ஞானஸ்நானத்திலிருந்து வித்தியாசப்படுத்த கூறப்பட்டதாகக் காணப்படுகிறது (அப்.19:2-5).

### 3) ஞானஸ்நானம் கொடுப்பவர்

ஞானஸ்நானம் கொடுப்பவர் விசுவாசியாக இருக்கவேண்டும். கர்த்தரையும், சபையையும் பிரிதிநிதிப்படுத்துபவராக இருக்கவேண்டும். தகுதிகள் எதுவும் கொடுக்கப்படவில்லை. புதிய ஏற்பாட்டில் சாதாரணமக்கள் மதகுருமார் என்ற பாகுபாடு கிடையவே கிடையாது.

## ஏன் ஞானஸ்நானம் இவ்வளவு முக்கியத்துவம் பெறுகிறது ?

நாம் நமக்குள்ளே ஒருவேளை இக் கேள்விகளைக் கேட்கலாம். ஞானஸ்நானம் நம்முடைய பாவங்களைக் கழுவாவிட்டால், அல்லது சபையில் சேர்க்காவிட்டால், அல்லது இரட்சிப்பைத் தராவிட்டால் ஏன் இது இவ்வளவு முக்கியமானதாக இருக்கிறது? இவைகளுக்கான விடைகளைப் பின்வரும் பகுதிகளிலிருந்து பார்ப்போம்.

### 1) கிறிஸ்து கொடுத்த பெரிய கட்டளையிலிருந்து ஞானஸ்நானத்தைப் பிரிக்கமுடியாது.

கர்த்தருடைய பெரிய கட்டளைக்குக் கீழ்ப்படிகின்றபொழுது, நாம் கர்த்தருக்குள் ஞானஸ்நானத்திற்குக் கீழ்ப்படிகிறோம். இந்த ஞானஸ்நானத்தைக் குறித்து சீஷர்கள் போதித்தார்கள், செயற்படுத்தினார்கள். கிறிஸ்து கட்டளையிட்ட யாவைக்கும் நாம் கீழ்ப்படிந்து அவற்றை உபதேசிக்கவேண்டும் (மத்.28:19-20).

### 2) ஞானஸ்நானம் இந்த உலகத்திற்கு ஒரு சாட்சி

ஞானஸ்நானம் நம்முடைய குடும்பத்தாருக்கும், நண்பர்களுக்கும் ஒரு சக்தி வாய்ந்த சாட்சியாகும்.

### 3) ஞானஸ்நானம் பிறவிசுவாசிகளுக்கு ஒரு சாட்சி

ஞானஸ்நானம் கிறிஸ்துவோடும், அவர் செய்கையோடும் நம்மை அடையாளப்படுத்திக் கொள்வதற்காக வெளிப்படையான ஒரு விளக்கமாக இருக்கிறது. மேலும் இது பிற விசுவாசிகளோடும் தான் யார் என்று சாட்சிபகர்கிறது. சில நாடுகளில் விசுவாசிகள் தங்கள் விசுவாசத்தின் காரணமாக துன்புறுத்தப்படுகிறார்கள். ஞானஸ்நானத்தின்

மூலம் வெளிப்படையாக அறிக்கை பண்ணாத கிறிஸ்தவர்களைக் குறித்து விசுவாசிகள் எச்சரிக்கையாய் இருக்கிறார்கள்.

## முடிவுரை

நாம் ஞானஸ்நானம் பெறவேண்டு என கிறிஸ்துவால் கட்டளையிடப்பட்டுள்ளோம். கிறிஸ்துவத்தின் முதல் நாளிலேயே விசுவாசிகள் ஞானஸ்நானத்திற்கு தங்களை ஒப்புக்கொடுத்தார்கள். நாம் நற்கிரியை செய்வதற்காகவும், நல்வாழ்க்கை வாழவும், கிறிஸ்துவை அப்பம்பிட்குதல் மூலம் நினைவுகூருவதற்கும், நாம் கிறிஸ்துவில் கொண்டுள்ள விசுவாசத்தைச் சாட்சியாக அறிவிக்கிறதற்கும், சக விசுவாசிகளோடு தங்களைச் சேர்த்துக்கொள்ளவும் ஞானஸ்நானம் பெறவேண்டும் எனக் கட்டளை பெற்றிருக்கிறோம். ஞானஸ்நானம் கீழ்ப்படிதலுக்கு தேவையாயிருக்கிறது. நம்முடைய விசவாச வாழ்க்கையை மேலும் வெளிக்காட்ட ஞானஸ்நானப்பட்ட வாழ்க்கை நடத்த வேண்டும்.

## பாடம் 4 ந் கான கேள்விகள்

*1) கிறிஸ்து ஞானஸ்நானத்தில் என்ன மதிப்பு வைத்திருந்தார் (மத்.28:19–20)?*

*யோவான் 14:21 மேலே தரப்பட்டுள்ள பகுதிக்கு எப்படித் தொடர்புடையது?*

(அப்போஸ்தலர் 2:41 ; 8:12,36-39 ; 10:47-48 ; 16:14-15,30-33 ; 18:18 ஆகிய வசனங்களைப் படித்து, கேள்விகள் 2-4 வரை பதிலளிக்கவும்).

*2) புதிய ஏற்பாட்டுக்காலத்தில் புதிய விசுவாசியின் சாதாரண பொறுப்பு என்ன?*

*3) விசுவாசிகளின் ஞானஸ்நானத்திற்கு முன்னால் என்னென்ன செய்யவேண்டும்?*

*4) புதிய ஏற்பாட்டுக்காலத்தில் மனந்திரும்பி எவ்வளவு சீக்கிரத்தில் ஞானஸ்நானம் எடுத்தார்கள்?*

இப்பொழுது ஒருவர் ஞானஸ்நானம் எடுக்க காலம் தாழ்த்துவதற்குக் காரணம் என்ன?

5) எண்ணிறைந்த விவாதங்கள் ஞானஸ்நானம் எடுக்கும் விதம் பற்றிக் கூறப்படுகிறது (முழுக்கு, தெளித்தல்) அப்போஸ்தலர் 8:36–39ன் படி எவ்விதமான முறையில் பதிய ஏற்பாட்டுக் காலத்தில் ஞானஸ்நானம் கொடுக்கப்பட்டது?

6) 1.கொரிந்தியர் 15:3–4 ன் படி சுவிசேஷத்தின் அடிப்படைச் செய்தி என்ன?

1.கொரிந்தியர் 15:3–4ஐ ரோமர் 6:3–6 ; கொலோசெயர் 2.12 ஆகிய வசனங்களுடன் ஒப்பிட்டு எப்படி ஞானஸ்நானம் சுவிசேஷத்தின் அடிப்படைச் செய்தியை விளக்குகிறது?

7) சொந்த வார்த்தைகளில் கலாத்தியர் 2:20ஐ எழுதுக. இந்த வசனம் ஸ்நானப்பட்ட ஜீவியத்தை குறித்து என்ன சொல்கிறது?

8) கேள்விகள் 3, 6 ன் படி குழந்தை மற்றும் அவிசுவாசிகள் ஞானஸ்நானத்திற்கு மதிப்பு உண்டா?

ஞானஸ்நானம் என்ற வார்த்தைக்கு ஒத்தவாக்கிய அகராதியில் (Concordance) கொடுக்கப்பட்டுள் அர்த்தத்தைப் பார்க்கவும். ஞானஸ்நானம் எப்பொழுதாவது குழந்தைகளோடு கூறப்பட்டுள்ளதா?

ஒருவர் குழந்தையாகவோ அல்லது கிறிஸ்துவை ஏற்றுக்கொள்வதற்கு முன்போ ஞானஸ்நானம் எடுத்தால், அவர் விசுவாசியான பின் ஞானஸ்நானம் பெறவேண்டுமா? விளக்கவும்!

9) சில குழுக்கள் விசுவாசிகளின் ஞானஸ்நானம் இரட்சிப்புக்குத் தேவை என்று மாற்கு 16:16ன் அடிப்படையில் கூறப்படுகின்றன. நீங்கள் எப்படி அப்போஸ்தலர் 10:44,47-48 ஆகிய வசனங்களின் அடிப்படையில் மறுத்துப் பதிலளிப்பீர்கள் (ரோ.8:9)?

எது பாவங்களை மட்டும் போக்கும் (எபி.9:14,22 ; 1.யோ.1:7 ; வெளி 1:6)?

10) பின்வருகின்றவைகளைப் படித்து விடையளிக்கவும்!

- இயேசு கிறிஸ்துவைக் கர்த்தரும் இரட்சகருமாக ஏற்றுக்கொண்டதும் நான் ஞானஸ்நானம் பெற்றேன்.
- நான் கிறிஸ்தவன் ஆன பின்பு ஞானஸ்நானம் பெறவில்லை. ஞானஸ்நானத்தைப் பற்றி ஒரு வளர்ந்த சகோதரனிடம் பேச விரும்புகிறேன்.
- எனக்கு இன்னும் விசுவாசிகளின் ஞானஸ்நானத்தைக் குறித்து சில கேள்விகள் இருக்கிறது. மேலும் விபரங்கள் தேவைப்படுகிறது.
- இதைக் குறித்துப் பிற கருத்துக்கள்:

## பாடம் 5: நித்திய இரட்சிப்பு

என் இரட்சிப்போ என்றென்றைக்கும் இருக்கும் என்று கர்த்தர் சொல்கிறார் (ஏசா.51:6ன் பிற்பகுதி). நம்முடைய மகா பெரிய தேவனும், இரட்சகரும் அவருடைய ஜனங்களுக்குள் நற்கிரியையைத் தொடங்கியிருக்கிறார். அதைக் கிறிஸ்துவின் நாள் பரியந்தம் முடிய நடத்துவார் (பிலி.1:5). கர்த்தராகிய இயேசு நமக்கு நித்திய மீட்பை உண்டுபண்ணினார் (எபி.9:12). தேவனுக்குள் இருக்கிற ஜீவனே நித்தியஜீவன் (யோ.1:4; 5:26 ; 1.யோ.1:2). அந்த ஜீவனையே தேவன் மனிதனுடைய இரட்சிப்புக்குக் கொடுத்திருக்கிறார் (1.யோ.5:11-12). அவருடைய வசனத்தைக் கேட்கிறவனுக்கு நித்தியஜீவன் இலவசமாக கொடுக்கப்படுகிறது (யோ.5:24). குமாரனை விசுவாசி (யோ.3:15-16) அவருடைய மாமிசத்தையும், இரத்தத்தையும் புசியுங்கள் (அர்த்தம் சிலுவையில் கிறிஸ்து செய்த வேலையை ஏற்றுக்கொள்ளல். யோவான் 6:56). நித்திய ஜீவனாகிய இந்த ஈவை பெறத் தேவனுக்கு மிகப் பெரிய செலவுசெய்யவேண்டி யிருந்தது (ரோ.6:25 ; யோ.17:2). அது அவருடைய குமாரனுடைய மரணம். இதை ஒழுக்க கட்டுப்பாட்டு மூலமோ, பக்தி மூலமோ பெறமுடியாது. அப்படிக் கிடைப்பதாயிருந்தால் அது ஈவாக இருக்காது. அது வேலைக்குக் கிடைத்த கூலியாகத்தான் இருக்கும் (ரோ.4:4). வேதத்தின் நித்தியஜீவன் நல்ல குணத்திற்காகவும், நல்நடத்தைக்காகவும் கொடுப்பதாகவும் எங்கும் கூறப்படவில்லை. தற்காலிகமான நித்தியஜீவன் கிடையாது. அது நித்தியம் என்ற வார்த்தைக்கு மாறுபாடாகக் காணப்படுகிறது.

விசுவாசிகளின் இரட்சிப்பு நிச்சயிக்கப்பட்டதும், இடைவிடாத தொடர்ச்சியான ஒன்று ஆகும். பரலோகத்திலே வைக்கப்பட்ட அழியாததும், மாசற்றதும், வாடாததுமாகிய சுதந்திரத்தை நாம் பெறும்படி மறுபடிஜெனிப்பிக்கப்பட்டிருக்கிறோம். அந்த சுதந்திரம் கடைசிகாலத்தில் வெளிப்பட இருக்கிற இரட்சிப்பாகும் (1.பேது.1:4-5). இரட்சிப்பின் வாழ்க்கை ஒரு தொடர்ச்சியான சங்கிலியாகும். தேவன் எவர்களை முன்குறித்தாரோ, அவர்களை அழைத்திருக்கிறார். எவர்களை அழைத்தாரோ அவர்களை நீதிமான்களாக்கியிருக்கிறார். எவர்களை நீதிமான்களாக்கினாரோ அவர்களை மகிமைப்படுத்தியிருக்கிறார் (ரோ.8:30). வருங்காரியங்களாலும், நிகழ்காரியங்களாலும் தேவனுடைய அன்பைவிட்டு நம்மைப் பிரிக்கமாட்டாது (ரோ.8:38-39). கர்த்தராயிருக்கிற இயேசு கிறிஸ்துவால் நித்தியஜீவன் நமக்குக் கொடுக்கப்பட்டி ருப்பதால் ஒன்றும் நம்மை தேவனுடைய கரத்திலிருந்து பறித்துப்போடாது (யோ.10:28-29). நம்மை வழுவாதபடி காக்க தேவன் வல்லவர் (யூதா 24). முடிவுபரியந்தம் நம்மை அவர் ஸ்திரப்படுத்துவார் (1.கொரி.1:8). அவர் நம்மைக் காத்துக்கொள்வார் (2.தீமோ.1:12). அவர் முற்றும்முடிய இரட்சிக்க வல்லவர் (எபி.7:25). இரட்சிப்பு என்றென்றும் நிலையான ஒன்று. ஏனென்றால் இதை முற்றும் முடிய செய்பவரும் பரிபூரணப்படுத்துபவரும் தேவன் ஆவார்.

### நித்திய இரட்சிப்பின் பரிபுரணத்துவம்

விசுவாசத்தைத் தொடக்கிறவரும், முடிக்கிறவருமாயிருக்கிற இயேசுவின் இரட்சிப்பின் பணியை நோக்குவோம் (எபி.12:1).

### 1) பூரண பிறப்பு

நாம் தேவனுடைய குடும்பத்தில் பிறக்கும்பொழுது, இரட்சிப்பு என்றென்றும் உள்ளதாக இருக்கிறது. தேவனுடைய ராஜ்யத்தில் பிரவேசிப்பதற்கு மறுபடி பிறக்கவேண்டும் என்று கர்த்தராகிய இயேசு நிக்கொதேமுவிடம் கூறினார் (யோ.3:3-7). நாம் தேவனுடைய குமாரனை உண்மையிலேயே விசுவாசித்தால் மறுபடி பிறந்தவர்களாவோம் (யோ.1:12-13). நாம் தேவனுடைய குடும்பத்திலே அங்கத்தினராக இருக்க மீண்டும் மீண்டும் பிறக்கவேண்டும் என்று வேதத்தில் கூறப்படவில்லை. மாமிசமான பிறப்பு வாழ்க்கையில் ஒருமுறை நடப்பதுபோலவே, ஆவிக்குரிய பிறப்பும் ஒரேமுறைதான் நடைபெறுகிறது.

## 2) பூரண பலி

பழைய ஏற்பாட்டில் சொல்லியிருக்கிற பலிகள் எல்லாம் இயேசு கிறிஸ்துவில் பூரணப்பட்டிருக்கிறது. அவர் சிலுவையில் செய்து முடித்த வேலை விசவாசியின் பாவத்தை நீக்கியிருக்கிறது என்று எபிரெயர் நிருபம் விளக்குகிறது. கிறிஸ்து செய்து முடித்த பணி என்றென்றும் நிலைநிற்கிறது. ஒரே ஒரு தரம் செய்து முடித்ததும், அப்பணி திரும்பவும், செய்யப்பட வேண்டியதல்லாமலும் இருக்கிறது. அவரின் சரீரம் ஒரேதரம் பலியிடப்பட்டதினாலே, அந்த சித்தத்தின்படி நாம் பரிசுத்தமாக்கப்பட்டிருக்கிறோம் (எபி.10:10). பாவங்களுக்காக ஒரே பலியைச் செலுத்தி, என்றென்றைக்கும் தேவனுடைய வலது பாரிசத்தில் உட்கார்ந்திருக்கிறார் (எபி.10:12). ஏனெனில் பரிசுத்தமாக்கப்படுகிறவர்களை ஒரே பலியினாலே இவர் என்றென்றைக்கும் பூரணப்படுத்தியிருக்கிறார் (எபி.10:14). கிறிஸ்து சிலுவையில் செய்துமுடித்த வேலையை விசுவாசிகள் நம்பி அதில் சார்ந்து நிற்க வேண்டியதே தலையாய கடமையாகும்.

## 3) பூரண ஐக்கியம்

இரட்சிப்பு நம்மை ஸ்தல சபைகளில் அங்கமாக்குவதில்லை. ஆனால் ஆவிக்குரிய பிரகாரமாய் நம்மைக் கிறிஸ்துவின் சரீரத்தில் அங்கமாக்குகிறது. தேவகுமாரனோடு ஐக்கியப்படுத்துகிறது. பரிசுத்த ஆவியானவர் கிறிஸ்துவின் சரீரத்தில் நம்மை ஞானஸ்நானப்படுத்தி (1.கொரி.12:13), அவரின் அவயவங்களாக்குகிறார் (1.கொரி.12:27; எபேசி.5:30). கிறிஸ்துவின் அவயவங்களாக இருப்பதால் தான் விசுவாசிகளைத் துன்புறுத்துவது, கிறிஸ்துவைத் துன்புறுத்துவதாக இருக்கிறது (அப்.9:4-.5). நாம் தேவனோடு ஐக்கியப்பட்டு அவரோடு இணைந்தவர்களாக இருப்பது எதைக் குறிக்கிறதென்றால் கிறிஸ்துவோடு உயிர்த்தெழுந்து, உன்னதங்களில் அவரோடு உட்காருவதைக் குறிக்கிறது (எபேசி.2:5-7). நம்முடைய ஜீவன் கிறிஸ்துவோடு இணைந்திருப்பது ஆவிக்குரிய திருமண கட்டமாக இருக்கிறது (ரோ.7:4 ; எபேசி.5:31-32). ஒன்றும் அவரின் அன்பிலிருந்து நம்மைப் பிரிக்காது (ரோ.8.33-39). அவர் சொல்கிறார் நான் உன்னை விட்டு விலகுவதுமில்லை உன்னைக் கைவிடுவதுமில்லை என்று (எபி.13:5).

## 4) ஆவியானவரின் பூரண பணி

நிகழ்காலத்தில் கிறிஸ்துவின் சரீரமாகிய சபையிலே பரிசுத்த ஆவியானவரின் பணி பழைய ஏற்பாட்டுக் காலத்திலும், சுவிசேஷத்திலும் அவர் ஆற்றியுள்ள பணியிலிருந்து வித்தியாசமானது. ஆவியானவர் மனிதன் மீது வந்து தங்கினார், திரும்பச் சென்றார் (1.சாமு.16:14). தாவீது பரிசுத்த ஆவி தன்னை விட்டு எடுபட்டுவிடுமோ என்று பயந்தான் (சங்.51:11). பரிசுத்த ஆவியானவர் வேண்டுமென்று வேண்டிக்கொள்வதை இயேசு கிறிஸ்து ஆமோதித்து, அவர் அப்படிக் கேட்பவர்களை உற்சாகப்படுத்தினார் (லூக்.11:13). இருந்தாலும் இயேசு கிறிஸ்து பிதாவிடம் சென்ற பின்னர் ஆவியானவரின் பணி முற்றிலும் வேறுபட்டதாக இருக்குமென அவரே கூறினார். அவர் மகிமைப்படுவதற்குமுன்னால் ஆவியை அவர் கொடுக்கவில்லை (யோ.7:39). அவர் மகிமையடைந்த பின்பு அவரால் விசுவாசிகளிடத்தில் நிரந்தரமாய் தங்கியிருக்க பரிசுத்த ஆவி கொடுக்கப்பட்டது ( யோ.14:16-17 ) , இது பெந்தேகோஸ்தே நாளில் நிறைவேறியது புதிய அத்தியாயம் துவங்கியது (அப்..1:4-5 ; 2:18,33) . உண்மையாய் எந்த விசுவாசியும் கிறிஸ்துவின் ஆவியில்லாமல் இருக்க முடியாது . ( ரோம. 8:9 ன் பிற்பகுதி ) நாம் நற்செய்தியை உண்மையாக விசுவாசிக்கின்றபொழுது பரிசுத்த ஆவியானவரால் முத்திரை போடப்படுகிறோம் , அது நம்முடைய மீட்புக்கு அச்சாரமாய் இருக்கிறது ( எபே. 1:13,14 ; 4:30 ; 2 கொரி. 1:22 ) ஆவியின் அபிஷேகம் எல்லா உண்மையான விசுவாசிகளிடத்திலும் நிலைத்திருக்கிறது (1.யோ.2:27) இவ்வாறாக எல்லா விசுவாசியும் தேவனால் ஆவியால் முத்தரிக்கப்பட்டு, நித்தியமீட்புக்கும், சுதந்திரத்துக்கும் பாத்திரவான்களாயிருக்கிறார்கள் .

### 5) பூரணமாக பரிந்து பேசுபவர்

பரிசுத்த வேதத்தில் பாவமில்லாத இயேசு கிறிஸ்துவை குறித்து சொல்லப்பட்டிருக்கிறது . ஒரு விசுவாசி பாவம் செய்தால் என்ன நடக்கும்? நிச்சயமாகவே அவன் தன் பாவங்களை அறிக்கையிட்டு அதை விட்டு விடுவது தேவையாயிருக்கிறது ( நீதி. 28:13 ; 1 யோ. 1:9 ) நம்முடைய பிரதிநிதியாக ஒருவர் பரிசுத்த தேவனுக்குமுன் நிற்க தேவையாயிருக்கிறது. நமக்காக பரிந்து பேசுவதற்காக, பிதாவிற்கு முன்பாக கர்த்தராகிய இயேசு மகா பிரதான ஆசாரியராக இருக்கிறார். பிரதான ஆசாரியராக கிறிஸ்து நமக்காக பிதாவினிடத்தில் பேசுவார் (1.யோ.2:1). நமக்காக வேண்டுதல் செய்ய அவர் எப்பொழுதும் தேவனுடைய வலது பக்கத்தில் வீற்றிருக்கிறார் (ரோ.8:34 ; எபி.9:24) யாருக்காக வேண்டுதல் செய்கிறாரோ அவர்களை முற்றுமுடிய இரட்சிக்க வல்லவராயிருக்கிறார் (எபி.7:25). நம்முடைய நல்ல நடத்தையால் கிறிஸ்து நமக்காக வேண்டுதல் செய்யவில்லை. பரலோக நீதிமன்ற அறையிலே நமக்காகப் பரிந்து பேசுகிறவரை நாம் எப்படி இழக்கமுடியும்?

### 6) பூரண பாதுகாப்பு

மனிதனின் உண்மைத் தன்மையை அடிப்படையாகக் கொண்ட எந்த இரட்சிப்பும் இருண்டதாகவே இருக்கும் . மாம்சத்தின் பெலவீனம் நமக்கு தெரிந்ததே (ரோ.6:19). ஆவியினாலே துவங்கப்பட்டது மாமிசத்தினாலே பரிபூரணப்பட்டது (கலா.3:3). நம்முடைய இரட்சகரின் வார்த்தையை கேட்போமானால் , அவர் இப்படி சொல்கிறார் அவர் எனக்குத் தந்தவைகளில் ஒன்றையும் நான் இழந்து போகாமல், கடைசி நாளில் அவைகளை எழுப்புவதே என்னை அனுப்பிய பிதாவின் சித்தமாயிருக்கிறது. குமாரனைக் கண்டு, அவரிடத்தில் விசுவாசமாயிருக்கிறவன் எவனோ, அவன் நித்திய ஜீவனை அடைவதும் என்னை அனுப்பினவருடைய சித்தமாயிருக்கிறது (யோ.6:39-40). கர்த்தர் நம்முடைய ஆத்துமாவைப் பாதுகாப்பவர், புதிய ஏற்பாட்டில் இது வலியுறுத்திக் கூறப்பட்டுள்ளது (யோ.10:27-30 ; 1.கொரி. 1:8 ; பிலி.1:5 ; யூதா 24-25; 1.பேது.1:5) இவ்வசனங்களில் ஒன்றாவது மனிதனின் உண்மைத் தன்மையின் இரட்சிப்பு நிலை நிற்க காரணமானது என்று சுட்டிக்காட்டவில்லை.

## நித்திய இரட்சிப்பைப் பற்றிய பிரச்சனைகள்

ஏராளமான விசுவாசிகளுக்கு நித்திய இரட்சிப்பை குறித்த போதனைகளை ஏற்றுக்கொள்ள கடினமாக இருக்கிறது. அவர்கள் மூன்று விதங்களில் இதை மறுக்கிறார்கள்.

### 1) மனம் மாறியவர்களின் தோல்வி

சிலர் கூறுகின்றனர் இரட்சிப்பு சில நிபந்தனைகளுக்கு உட்பட்டதாக இருக்கிறது. எப்படியெனில் சிலர் தங்களைக் கிறிஸ்தவர்களென்று கூறிக்கொண்டு (போதகர்கள்கூட) ஒழுக்கரீதியாக தேவனைவிட்டு தூரமாக சென்று, இறுதியாக கர்த்தரை கூட ஏற்று கொள்ளாமல் தள்ளி விடுகின்றனர். பழைய வாழ்கைக்குத் திரும்பி அல்லது கலகம் விளைவிப்பவராக இருந்தால், எப்படி அவர்கள் இரட்சிப்பை நம்ப முடியும்? இக் கேள்விக்கு பதில் அளிக்க கிறிஸ்தவர்கள் என்று சொல்லிக்கொள்கிறவர்களெல்லாம் உண்மையில் இரட்சிக்கப்பட்டவர்களா என்று முதலில் கேட்கவேண்டும். புதிய ஏற்பாட்டில் போலித்தனமான கிறிஸ்துவை ஏற்றுக்கொண்டதற்கு வெளிப்படையான ஆதாரம் உண்டு. இயேசு கோதுமையையும், களைகளையும் வைத்து ஓர் உவமையைச் சொன்னார். இதில் நல்ல கோதுமையும், களையும் ஒன்றாக வளர்கிறது (மத்.13:24-30,36-42). களைகள் ஒருபோதும் தேவனுடைய பிள்ளைகள் அல்ல. நீதிமார்க்கத்தை அறிந்தபின்பு திரும்பவும் பாவவாழ்க்கைக்குத் திரும்புவார்கள். நாய் தான் கக்கினதைத் தின்பதும், கழுவப்பட்ட பன்றி தன்னுடைய பழைய பழக்கத்துக்குத் திரும்பியது. ஏனென்றால் அவைகள் தேவனுடைய ஆவியால் கிறிஸ்துவின் மந்தையில் சேரவில்லை. வரும் நாட்களில் தங்களுடைய செயல்களினாலே கிறிஸ்துவோடு உறவு கொண்டாட அவர்கள் வரும்

போது, கர்த்தர் சொல்லுவார் நான் உங்களை ஒருபோதும் அறியேன், என்னை விட்டு அகன்றுபோங்கள் என்பார் (மத்.7:23). ஒரு காலத்தில் என்னைத் தெரியும், ஆனால் என்னைவிட்டுச் சென்றுவிட்டீர்கள் என்று கூறமாட்டார். இரட்சிப்புக்குக் காரணமாக விசுவாசத்திற்கும், போலி விசுவாசத்திற்கும் வித்தியாசம் உண்டு. குழந்தைப் பருவ ஜெபம், உயர்த்தப்பட்ட கை, சபைக்கூட்டங்களில் ஆவலோடு பங்குபெறல், ஞானஸ்நானம் ஆகியவை இரட்சிப்பை ஊர்ஜிதப்படுத்தாது. உண்மையான இரட்சிப்போ என்றென்றும் நிலைநிற்கும். ஒழுக்கமின்மை, சண்டை, கோபம், மதுபானவெறி, பொறாமை இவைகளை உடையவன் தேவனுடைய இராஜ்ஜியத்தைச் சுதந்தரிக்கமாட்டான் (கலா.5:19-21). இவைகள் எச்சரிப்பின் அடையாளங்களாக இருக்கிறது. இரட்சிப்பின் விசுவாசத்தைக் குறித்து நாம் பரிசீலித்துப் பார்க்க 1.யோவான் 2:3-6,15 ; 3:6-10,14 , 5:2-4 ஆகிய வசனங்கள் உதவும். நாம் கர்த்தராகிய இயேசுவுக்கும், அவருடைய வார்த்தைக்கும் கீழ்ப்படியாமல் இருந்தால், பாவம் செய்தால், உலகத்தை நேசித்து, தேவனுடைய பிள்ளைகளை நேசிக்காமல் போனால் நாம் கிறிஸ்துவைத் தெரியும் என்று சொல்லுவது வீணாய் இருக்கும். தேவன் சொல்கிறார் நாம் பொய்யர்களென்று (1.யோ.1:6 ; 2:4). அப்படியானால் மறுபடி பிறத்தல் நம் வாழ்வில் நிகழவில்லை.

## 2) பாவம் செய்ய அனுமதி

சிலர் கூறுகிறார்கள் ஜனங்களுக்கு நித்திய இரட்சிப்பைக்குறித்து நிச்சயம் இருக்குமானால், அவர் ஆவிக்குரிய நிலையில் திருப்தியாய் இருப்பார்கள். அதன்பிறகு தாங்கள் விரும்பிய பாவங்களைச் செய்வதற்குச் சுதந்திரம் இருக்கிறதென்று. இது இக் கருத்தைச் சரியாகப் புரிந்தகொள்ளாமல் தவறாக எடுத்துக்கொண்டதேயாகும். ஒரு உண்மையான கிறிஸ்துவின் ஆடு அவரையே பின்பற்றவிரும்புகிறது. அவரின் அன்பையும் இரக்கத்தையும் தவறாகப் பயன்படுத்த முயற்சிக்காது. தவறிப்போகிற தேவனுடைய பிள்ளைகளை தேவன் எப்படிச் சரிசெய்வார் என்ற வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. தண்டனை மூலம் தேவன் சரிசெய்கிறார் (எபி.12:5-11). சரி செய்தல் அல்லது திருந்துதல் தேவனுடைய குடும்பத்திலிருந்து வெளியேற்றுவதிலிருந்து வித்தியாசமாகும். தன்னைவிட்டுத் தூரமாய்ச் செல்கிற பிள்ளைகள் சந்தோஷம், சமாதானம், சாட்சி, ஜெபவல்லமை, வாழ்க்கையில் கனி கொடுத்தலை இழக்க அனுமதிக்கிறார். மேலும் கிறிஸ்துவின் நியாயாசனத்தின் முன் பலன்களையும் இழப்பார்கள். கிறிஸ்துவின் எந்த மந்தையும் தவறான பாதையால் திருப்தியடையாது.

## 3) நித்திய இரட்சிப்போடு முரண்படும் வேதவாக்கியங்கள்

சிலர் நித்திய இரட்சிப்பு உபதேசம் தேவவசனங்களைச் சுட்டிக்காட்டி மறுக்கின்றனர். உபதேசங்கள்: முழுவதுமான தேவவசனங்களின் அடிப்படையில் அமைகிறது. ஏதோ ஒரு வசனங்களில் ஒரு பகுதியை மட்டும் கொண்டு அமைகிறதல்ல. ஒருபோதும் தேவனுடைய வார்த்தை ஒன்றுக்கு ஒன்று முரணானது அல்ல. ஒரு உபதேசத்தைக் குறித்த எல்லா வசனங்களையும் ஆராய்ந்து பார்க்கவேண்டும். நாம் இப்பொழுது நித்திய இரட்சிப்போடு முரண்பாடாக காணப்படுகிற வேதவாக்கியங்களைப் பார்ப்போம்.

### அ) வீழ்ந்துபோதல்:

சில வேளைகளில் சில வேதபகுதிகள் வீழ்ந்துபோகிற நபர்களைப் பற்றிச் சொல்லும்பொழுது விசுவாசிகள் இரட்சிப்பை இழக்கிறார்கள் என்ற கண்ணோட்டத்தில் பார்க்கப்படுகிறது. ஆனால் வீழ்ந்துபோதல் என்பது ஒருமுறை கிறிஸ்தவர்கள் என்று கூறி அவ் விசுவாசத்திலிருந்து தவறிச் செல்வதாகும். வீழ்ந்து போதல் என்ற வார்த்தைக்கு கிரேக்கமொழியில் அப்போஷ்டாசியா (apostasia) என்கிற சொல் பயன்படுத்தப்பட்டுள்ளது. இதன் பொருள் இயேசு கிறிஸ்துவின் தெய்வீக தன்மையை மறுப்பதும், அவர் சிலுவையில் தன்னுடைய இரத்தத்தைச் சிந்தி முடித்த மீட்பின் பணியை ஏற்றுக்கொள்ளாததும் ஆகும். இக் கொள்கையை உடையவர்கள் சபையின் உள்ளிலே இருக்கிறார்கள். பெரும்பாலானோர் சபைக்குள்ளாகவே போதகர்களாக இருக்கிறார்கள். அவர்கள் நம்மைவிட்டுப் பிரிந்து போனார்கள், ஆகிலும் அவர்கள்

நம்முடையவர்கள் அல்ல (1.யோ.2:19). இப்படிப்பட்டவர்களைக் குறித்து யூதா நிருபம் தெளிவாகக் கூறுகிறது. இவர்கள் பக்க வழியாய் நுழைகிறவர்கள், பக்தியற்றவர்கள் (வசனம் 4), தண்ணீரற்ற மேகம் (வசனம் 12), ஆவியில்லாதவர்கள் (வசனம் 19), தேவபக்தியின் வேடம் தரித்த போலியான விசுவாசிகள் (2.தீமோ.3:5). மேலும் இவர்கள் பற்றி 1.தீமோத்தேயு 4:1-3 ; 2.பேதுரு 2:1,15-22 ; 1.யோவான் 2:18-22 ; 2.யோவான் 7-9 ஆகிய பகுதிகளில் கூறப்பட்டுள்ளது. கிருபையிலிருந்து வீழ்ந்து போதல் (கலா.5:4) ஆதி அன்பிலிருந்து விழுதல் (வெளி 2:4-5), உறுதியிலிருந்து விலகி வீழ்ந்துபோதல் (2.பேது.3:17) ஆகியவற்றிற்கு அப்போஷ்டசியா என்ற வார்த்தைகள் பயன்படுத்தப்பட்டுள்ளது. இவைகள் விசுவாசியின் தோல்வியைக் குறிக்கிறது. ஆனால் இரட்சிப்பிலிருந்து வீழ்தலை அல்ல.

## ஆ) நிபந்தனைக்குட்பட்ட பிரிவு:

இரட்சிப்பைப் பற்றிக் கூறுகின்ற ஏராளமான வேதவாக்கியங்களில் ஆல் என்ற வார்த்தை அத்துடன் இணைக்கப்பட்டுள்ளது. இந்த ஆல் என்ற வார்த்தையால் நாம் சில குறிப்பிட்ட வழியில் வாழ்ந்தால் தான் இரட்சிப்பு நிலை நிற்கும் எனப் புரிந்துகொள்ளப்படுகிறது. ஆனால் நன்கு ஆராய்ந்து பார்த்தால் வேதவாக்கியத்தின்படி இல்லாத வாழ்க்கையுடையவர்களின் இரட்சிப்பு உண்மையான இரட்சிப்பு அல்ல. எபிரெய நிருபம் ஏராளமான நிபந்தனைகளை உள்ளடக்கிய வசனங்களைக் கொண்டது. அவைகள் உண்மையான இரட்சிப்பைக் குறித்த கேள்விகளை எழுப்புகின்றன. எபிரெய நிருபம் யூத ஜனங்களுக்காக எழுதப்பட்டது. குறிப்பாக மறுபடி பிறந்த, பிறவாத விசுவாசத்தில் உறுதியில்லாதவர்களுக்காக எழுதப்பட்டது. பிற்பகுதியில் குறிப்பிடப்பட்டுள்ள இரு சாரரும் இயேசு கிறிஸ்துவின் இரத்தத்தின்மீது நம்பிக்கை கொண்டவர்களாக மட்டும் இருக்காமல் பழைய ஏற்பாட்டு பலிக்கும் திரும்பவும் முக்கியத்துவம் கொடுக்கிறவர்கள் இவர்கள் மறுபடி பிறவாமல், கிறிஸ்துவின் மீதுள்ள விசுவாசத்திலிருந்து சென்றவர்கள் இந் நிருபத்தின் மூலம் எச்சரிக்கப்படுகின்றனர் (எபி.2:1-3 ; 3:6,12,14 ; 4:1 ; 12:25). கிறிஸ்துவைத் தொடாந்து பற்றிக்கொண்டவர்களாக இருக்கவேண்டுமென்று 1.கொரிந்தியர் 15:1-2 ; கொலோசேயர் 1:22-23 ஆகிய பகுதிகள் கூறுகிறது. எபிரெயர் 6:4-6 ஏராளமானவர்களுக்கு குழப்பத்தை உண்டுபண்ணுகிறது. இங்கு கூறப்பட்டுள்ள பகுதி கிறிஸ்தவர்களுக்கு உரியது போன்று காணப்படுகிறது. இங்கு ஆவியானவரின் ஊழியத்தின் பங்கை குறிக்கிறதேயல்லாமல் ஆவியானவரால் உள்ள முத்தரிப்பையோ, வசித்தலையோ குறிப்பிடவில்லை (வசனம் 4). இரட்சிக்கப்படாமலேயே ஆவியானவரின் ஊழியத்தில் ஈடுபடமுடியும். எபிரெய நிருப ஆசிரியர் வசனம் 9ல் கூறுகிறார்: நன்மையானவைகளும் இரட்சிப்புக்குரியவைகளுமான காரியங்கள் உங்களிடத்தில் உண்டாயிருக்கிறதென்று நம்பியிருக்கிறோம். ஆகவே வசனம் 4 முதல் 6 வரை உள்ளவைகள் உண்மையான விசுவாசிகளுக்குப் பொருத்தமில்லாதது. இங்கு முக்கியமான தவறு என்னவென்றால் கிறிஸ்து இயேசுவின் இரத்தம் மட்டுமே இரட்சிப்புக்கு காரணமானது என்பதை ஏற்க மறுப்பதாகும்.

மனப்பூர்வமாய் செய்கிற பாவத்தைக் குறித்து எபிரெயர் 10:26-39ல் எச்சரிக்கப்பட்டுள்ளது. வசனம் 26 முதல் 39 வரை ஒப்பிட்டுப் பார்க்கும்போது இவ்விரு வசனங்களிலும் கூறப்பட்டுள்ள நாம் என்கிற சொல் வித்தியாசப்படுவதைக் காணலாம். வசனம் 26ல் கூறப்பட்டுள்ள மனப்பூர்வமாய்ப் பாவம் செய்கிறவன் தேவனுடைய குமாரனைக் காலில் மிதிக்கிறவனாக மாறுகிறான் (வசனம் 29). இதற்கு முரண்பாடாக வசனம் 39 இப்படிக் கூறுகிறது: நாமோ கெட்டுப்போக பின்வாங்குகிறவர்களாயிராமல் ஆத்துமா ஈடேற விசுவாசிக்கிறவர்களாயிருக்கிறோம். உண்மையான விசுவாசிகள் கிறிஸ்துவின் சிலுவையிலிருந்து பின்வாங்கமாட்டார்கள். அதுவே அவர்களின் ஒரே நம்பிக்கையாயிருக்கிறது. இரட்சிப்பின் விசுவாசம் நிலை நிற்கின்ற ஒன்று.

## இ) பல்வேறு உவமைகள்:

சில உவமைகள் நிரந்தரமற்ற இரட்சிப்புக்கு ஆதாரமாகப் பயன்படுத்தப்படுகிறது. சரியாக உவமைகளை விளக்கவேண்டுமானால் தெளிவாக போதிக்கப்பட்டுள்ள

உவமைகளை அடிப்படையாகக் கொண்டே விளக்கவேண்டும். இதுவே சரியான முறை. நான்கு உவமைகள் நித்திய இரட்சிப்புக்கு எதிராக விளக்கப்படுகிறது. அவை நான்கையும் இப்பொழுது சோதித்தறிவோம்.

### *1) விதைக்கிறவன் (லூக். 8:4–15)*

**பிரச்சனை:** கொஞ்ச காலம் விசுவாசிப்பவர்கள்
**விளக்கம்:** அவர்களைக் குறித்துச் சொல்கின்ற பொழுது வேர் அற்றவர்கள் என்று கூறப்படுகிறது. அவர்கள் என்ன விசுவாசிக்கிறார்கள்? பிசாசுகளும் விசுவாசிக்கிறது, ஆனால் அவைகள் இரட்சிக்கப்பட்டவைகள் அல்ல (யாக்.2.19). இந்த உவமை தேவனுடைய வார்த்தையை கேட்கிறவர்களின் மனநிலையை விளக்குகிறது. உண்மையும் உத்தமமுமான இருதயத்தோடு வசனத்தைக் கேட்டு விசவாசிக்கிறவர்கள் இரட்சிக்கப்படுவார்கள், கனிகளைக் கொடுப்பார்கள்.

### *2) விசாரணைக்காரன் (லூக். 12:41–48)*

**பிரச்சனை:** உண்மையற்ற விசாரணைக்காரன் கர்த்தருடைய வருகையை நோக்கியிருக்காதவன் இவனுடைய பங்கு அவிசுவாசிகளோடு நியமிக்கப்பட்டது.
**விளக்கம்:** ஒவ்வொரு மனிதனும் தேவனுடைய விசாரணைக்காரனாய் இருக்கிறான். தேவன் மனிதனுக்குத் தந்திருக்கிற அனைத்துக்கும் அம் மனிதன் விசாரணைக்காரனாயிருக்கிறான். இதில் உண்மையற்ற ஒருவன் விசுவாசி என்றும், இரட்சிப்பை இழந்தவன் என்றும் சொல்வதற்கு இடமில்லை.

### *3) மன்னிக்கும் பிரமாணம் (மத். 18:23–35)*

**பிரச்சனை:** நாம் பிறரை மன்னிக்காவிட்டால் தேவன் நம்மை மன்னிக்கமாட்டார். பொல்லாத ஊழியக்காரன் உபாதிக்கிறவர்களிடத்தில் ஒப்புக்கொடுக்கப்பட்டான்.
**விளக்கம்:** மன்னிக்கும் தன்மையற்றவனை இரட்சிக்கப்பட்டவன் என்று கூறவில்லை. தேவனுடைய கிருபையின் வெளிச்சத்தில் பிறருக்கு நியாயம் செய்யவேண்டும் என்பதே இவ் உவமையின் பொதுவான பாடமாகும்.

### *4) மெய்யான திராட்சைச் செடி ( யோ. 15:1–7)*
**பிரச்சனை:** ஒருவன் என்னில் நிலைத்திராவிட்டால் வெளியே எறியுண்ட கொடியைப்போல அவன் எறியுண்டு உலர்ந்து போவான். அப்படிப்பட்டவைகளைச் சேர்த்து, அக்கினியிலே போடுகிறார்கள், அவைகள் எரிந்துபோம்.
**விளக்கம்:** இப் பகுதி கனிகொடுத்தலைப் பற்றிச் சொல்லுகிறது. அதற்கு கிறிஸ்துவோடு உள்ள ஐக்கியம் தேவையாயிருக்கிறது. வயல்வெளிகளில் நடப்பதுபோன்று கனிகொடுக்காத கிளைகள் மனிதர்களால் எரிக்கப்படும். இந்த எரித்தல் நித்திய நியாயத்தீர்ப்பு அல்ல.

## ஈ) பிற பகுதிகள்:
விசுவாசமாகிய கப்பலைச் சேதப்படுத்தல் (1.தீமோ.1:19-20), விசுவாசத்தை விட்டு வழுகிச் செல்லுதல் (1.தீமோ.6:10,21), விசவாசத்தைக் கவிழ்த்துப் போடல் (2.தீமோ.2:18). ஆகிய பகுதிகளை வைத்து நித்திய இரட்சிப்பை மறுக்கின்றனர். இப் பகுதிகள் வழுகிப்போகிற விசுவாசிகளைக் குறித்து கூறுவதாக இருக்கலாம் என்றாலும் கர்த்தர் தம்முடையவர்களை அறிவார் (2.தீமோ.2:19). குழப்பமான வாழ்க்கையினால் நாம் அடிக்கடி பிறருடைய இரட்சிப்பின் நிச்சயத்துவத்தை அறிந்து கொள்ளமுடியவில்லை. ஆதியாகமத்தில் காணப்படும் நிகழ்ச்சிகளைப் பார்த்தால் லோத்து இரட்சிக்கப்பட்டவன் என்று தெரியவில்லை. ஆனால் அவர் இரட்சிக்கப்பட்டவர் என்று 2.பேதுரு 2:7-9 கூறுகிறது.

விசுவாசியின் கிரியைகள் கிறிஸ்துவின் நியாயசனத்தின் முன் அக்கினியால் சோதிக்கப்படும்போது, தன்னுடைய கூலியை இழக்க நேரிடுமேயொழிய இரட்சிப்பை அல்ல (1.கொரி.3:15). இதைக் குறித்து அப்போஸ்தலர் ஆகாதவனாய்ப் போவதால் உள்ள ஆபத்தைக் குறிப்பிடுகிறார் (1.கொரி.9:27). பவுல் இரட்சிப்பை இழந்துவிடுவேன் என்று பயப்படுவதாக அர்த்தமல்ல, அவர் தன்னுடைய இரட்சிப்பைக் குறித்து நம்பிக்கையுள்ளவராயிருந்தார் (2.தீமோ.1:12 4:7-8).

## முடிவுரை

இரட்சிப்பின் விசுவாசம் வாழ்க்கையின் முடிவுரையிலும் தொடர்கிறது என்று வேதவாக்கியம் தெளிவாகச் சொல்கிறது. அது ஒரு நொடிப்பொழுதில் உள்ள நிகழ்ச்சியல்ல. இரட்சிப்பின் விசுவாசம் உறுதியற்ற நம்பிக்கை, சடங்காச்சார ஜெபம் ஆகியவற்றிலிருந்து வேறுபடுகிறது. உண்மையான விசுவாசம் ஒருபோதும் கிறிஸ்துவையும், அவரின் இரட்சிப்பின் வேலையையும் நிராகரிக்கமாட்டாது. இது நல்ல ஜீவியத்திற்கு வழிவகுக்கும், பாவமான ஜீவியத்திற்கு அல்ல. இரட்சிக்கப்பட்டேன் என்று விசுவாசிக்கிறேன் என்கிற நபரிடத்தில் அல்ல, ஆனால் அவ்விசுவாசத்தை வாழ்க்கையில் காட்டுகிறவர்களிடத்திலே இது காணப்படும் (யாக்.2:14-24). வாழ்க்கையில் தன் விசுவாசத்தைச் செயற்படுத்திக் காட்டாதவனுக்கு பரலோகம் செல்ல பயணச்சீட்டு உறுதிப்படுத்தமுடியாது. அதற்குப் பதிலாக அவன் கர்த்தரைச் சந்திக்கும்போது என்னை விட்டு அகன்றுபோங்கள் நான் உங்களை அறியேன் என்கிற வார்த்தையைக் கேட்கவேண்டி வரும். ஆனால் கிறிஸ்துவின் ஆடு இப்படிச் சொல்ல முடியும். கர்த்தர் எல்லாத் தீமையினின்றும் என்னை இரட்சித்து, தம்முடைய பரமராஜ்யத்தை அடையும்படி காப்பாற்றுவார் (2.தீமோ.4:18).

## பாடம் 5ற் கான கேள்விகள்

*1) விசுவாசியாகிய நம்மை எதிலிருந்தெல்லாம் இரட்சித்திருக்கிறார் (மத்.1:21 ; ரோ.5:9 ; 6:14,17–18 ; கலா.3:13 ; எபேசி.2:1–7)?*

*2) தேவன் நம்முடைய பாவங்களை என்ன செய்திருக்கிறார் (ஏசா.1:18 ; சங்.103:12)?*

*பாவமன்னிப்பு எதன் அடிப்படையில் உள்ளது (எபேசி.1:7)?*

*3) எப்பொழுது எங்கே நம்முடைய பாவம் தீர்க்கப்பட்டது (1.பேது.2:24)?*

இதில் நம்முடைய எல்லாப் பாவங்களும் அடங்கியுள்ளதா அல்லது முன்பாக செய்த பாவங்கள் மட்டுமா? (எபி.9:24–28 ; 10:10–14)?

4) குமாரனை விசுவாசிக்கும் பொழுது நாம் என்ன பெறுவோம் (யோ.5:24)? இதை நாம் உடனடியாகப் பெறுவோமா அல்லது மரித்த பிறகு பெறுவோமா? விளக்குக.

நித்தியம் என்ற சொல்லை விளக்குக. அதன் எல்லையைக் குறிப்பிடுக.

5) இரட்சிக்கப்பட்ட நாம் இரட்சிக்கப்பட்டவர்களாக எப்படி பாதுகாக்கப்படுகிறோம் (யோ.6:39–40 ; 1.பேது.1:4–5 ; யூதா 24)?

6) கிறிஸ்தவர்கள் என்கிற முறையில் தேவனோடு நம்முடைய உறுவு என்ன (1. யோ. 3:1–2)?

நாம் எப்படி இவ் உறவிற்கு பாத்திரமாவோம் (யோ.1:12–13)?

இந்த உறவிலிருந்து எது நம்மைப் பிரிக்கமுடியும் (யோ.10:28–29 ; ரோ.8:35–39)?

7) விசுவாசியின் வாழ்க்கையில் எப்படிப் பரிசுத்தஆவியானவர் இரட்சிப்பு நித்தியமானது என்று சுட்டிக்காட்டுகிறார் (யோ.14:16–17 ; ரோ.8:9பிற்பகுதி ; எபேசி.1:13–14 ; 4:30)?

8) 2.தீமோத்தேயு 1.12ன் பிற்பகுதியை சொந்தமாக எழுதுக.

இந்த வசனத்திலிருந்து (2.தீமோ.1:12b ; 4:7–8, 18 ) ஆகியவற்றிலிருந்தும் பவுலுக்கு நித்திய இரட்சிப்பைக் குறித்து இருந்த நம்பிக்கை என்ன?

9) நமக்கு நித்திய இரட்சிப்பு இருக்கிறது என்று தெரிந்துகொள்வதற்கு 1.யோவான் 5:11–13 என்ன சுட்டிக்காட்டுகிறது?

10) பின்வரும் பகுதிகளுக்கு எப்படிப் வேதத்தின்படி பதில்கொடுப்பீர்கள்?
நீங்கள் சாகின்றவரையில் இரட்சிக்கப்பட்டீர்கள் என்று அறியமுடியாது.

என் வாழ்க்கை இதைக் காட்டவில்லை. ஆனால் எனக்குத் தெரியும் நான் இரட்சிக்கப்பட்டேன். ஏனென்றால் நான் எட்டு வயதாக இருந்தபொழுது கிறிஸ்துவை ஏற்றுக்கொள்வதாக ஜெபம்பண்ணினேன்.

நான் என் இரட்சிப்பை இழந்துபோகமாட்டேன். ஆகையால் நான் விரும்பிய பாவங்களைச் செய்வேன்.

நித்திய இரட்சிப்புக் குறித்த போதனை சரியல்ல. ஏனென்றால் எனக்கு ஒரு போதகரைத் தெரியும் அவர் பல தகாத செயல்களைச் செய்தார்.

## பாடம் 6: சபை வாழ்வு

சர்வ வல்லமையுள்ள தேவன் தன்னாற் படைக்கப்பட்ட ஒவ்வொரு மனிதனையும் தனித்தனியாக நேசிக்கிறார், பாதுகாக்கிறார். வேதவசனங்களில் படிக்கின்றபொழுது உண்மையிலேயே அவரின் அன்பு நம்மை அசைக்கிறது. சங்கீதக்காரன் கூறுகிறார். தாயின் கர்ப்பத்தில் உருவாகுமுன்னே தேவன் என்னை அறிவார் என்று (சங். 139:13-17). இப்படிப்பட்ட அன்பை அடிப்படையாகக் கொண்ட தேவனின் கரிசனைதான் தன்னுடைய ஒரேபேறான குமாரனை இந்த உலகத்திற்கு அனுப்பி நாம் கெட்டுப்போகாமல் நித்தியஜீவனைச் சுதந்தரித்துக்கொள்ளச் செய்தது (யோ.3:16). தனிநபர்களாக நாம் கர்த்தராகிய இயேசுவை ஏற்றுக்கொள்ளவேண்டும் (யோ.1:12). சரீரமாக நாம் பிறந்ததுபோல மறுபடி பிறக்கவேண்டும் (யோ.3:5). வளர்ச்சியும் முன்னேற்றமும் தேவனோடு ஒவ்வொரு மனிதனும் கொண்ட உறவைச் சார்ந்தே உள்ளது. இக் கருத்து நாம் தேவனுடைய பார்வையில் தனியான விசுவாசி என்று சிந்திக்க வகை செய்யலாம். ஆனால் இக் கருத்து வேதவாக்கியங்களிலிருந்து அப்பாற்பட்டது.

தேவனுடைய பிள்ளைகளில் ஒருவர் என்பது அவருடைய குடும்பத்தில் ஒரு உறுப்பினர் என்பதைக் குறிக்கிறது (1.யோ.3:1 ; எபேசியர் 3:14). கூட்டாக நாம் தேவனுடைய ஜனம் (1.பேது.2:9-10 ; வெளி 21:3). தேவன் நம்மைப் பூமியில் உள்ள பரலோக காவலாளியாகப் பார்க்கிறார். ஆனால் நம்முடைய குடியிருப்பு பரலோகத்திலிருக்கிறது (பிலி.3:20). வேதாகமத்தில் இயேசுவைப் பின்பற்றுகிற வர்களைப் பன்மையாகக் கூறப்பட்டுள்ளது. அவர்கள் விசுவாசிகள் (அப்.5:14), சீஷர்கள் (அப்.9:1), பரிசுத்தவான்கள் (எபேசி.1:1), சகோதரர்கள் (யாக்.2:1), கிறிஸ்தவர்கள் (அப்.11:26) என அறியப்படுகின்றனர். வேதாகமத்தில் எங்கும் சாதாரண மக்கள் (layman), மதகுருமார் (laity) என்கிற பாகுபாடு இல்லை, ஒருபோதும் நாம் அவ்வாறு அழைக்கப்படவில்லை. அநேக புதிய ஏற்பாட்டு நிருபங்கள் விசுவாசிகளின் கூட்டங்களுக்கு எழுதப்பட்டது, தனி விசுவாசிகளுக்கு அல்ல (1.கொரி.12:12-27). அப்போஸ்தலர் காலத்தில் தேவன் இரட்சிக்கப்பட்டவர்களை விசுவாசிகளின் ஐக்கியத்தோடு அனுதினமும் சேர்த்து வந்தார் (அப்.2:47). இந்த ஐக்கியம் எக்கலேசியா (ekklesia) என்று அழைக்கப்படுகிறது. ஆங்கிலத்தில் சர்ச் (church) என்று மொழிபெயர்க்கப்பட்டுள்ளது. தமிழில் சபை என்றழைக்கப்படுகிறது. இதுவே நடைமுறையிலுள்ள ஸ்தலவிசுவாசிகளின் செயல்படும் அமைப்பாக இருந்தது. இப்படிப்பட்ட ஐக்கியத்தின் ஒவ்வொரு விசுவாசியும் பங்குள்ளவர்களாக இருக்கவேண்டும் என்பது தேவனின் திட்டமும் நோக்கமுமாக இருந்தது.

### சபையின் விளக்கம்

சபை என்ற சொல் ஏராளமான அர்த்தங்களை உடையதாக இருக்கிறது. இந்த அர்த்தங்கள் எக்கலேசியா என்கிற மூல சொல்லிலிருந்து மாறுபட்டுக் காணப்படுகிறது. சிலர் இதை ஒரு கட்டடமாகக் கருதுகிறார்கள். சபை மூலையில் இருக்கிறது. கூட்டங்களும் ஆராதனைகளும் என்ற அர்த்தங்களிலும் நினைக்கப்படுகிறது. நாம் ஞாயிற்றுக்கிழமை சபைக்குச் செல்கின்றோம். சில நேரங்களில் குழுக்களில் செயற்பாடுகள் காணப்படுகிறது. நாம் சபையில் எப்பொழுதும் செயற்படுகிறவர்களாக இருக்கிறோம். நான் ரோமன் கத்தோலிக்கப சபையைச் சார்ந்தவன். இக் கருத்துக்கள் சபை என்ற சொல்லைச் சுற்றி காணப்படுகிறது. ஆனால் வேதாகமத்தில் இப்படிப்பட்ட அர்த்தங்களைக் கொண்டதாக சபை காணப்படவில்லை.

எக்கலேசியா என்ற சொல்லின் பொருள் அழைக்கப்படுபவர்களின் கூட்டம் அல்லது கூடுகை என்பதாகும். இதேசொல் அப்போஸ்தலர் 19:32, 39, 41 சீஷர்களின்

உபதேசத்திற்கு எதிராகக் கூடி கலகம் உண்டாக்கினவர்களைக் குறிக்கும்போது பயன்படுத்தப்படுகிறது. இது ஒரு கூட்டத்தையோ அல்லது ஜனங்கள்

சேர்ந்திருப்பதையோ குறிக்கும் ஒரு சாதாரண சொல். இந்த சொல் கர்த்தரால் தேர்ந்தெடுக்கப்பட்டு, தேவன் தனக்காக ஜனங்களை அழைக்கிறதற்கு பயன்படுத்துகிறார். அவர் நம்மை அந்தகாரத்தினின்று, ஆச்சரியமான ஒளியினிடத்திற்கு அழைத்திருக்கிறார் (1.பேது.2:9). அன்பின் குமாரனுடைய இராஜ்ஜியத்திற்கு அழைக்கப்பட்டிருக்கிறோம். (கொலோ.1:13). எக்கலேசியா வேதாகமத்தில் கிறிஸ்துவை விசுவாசிப்பவர்களை குறிப்பதற்குப் பயன்படுத்தப்பட்டுள்ளது. கட்டடத்தையோ, செயல்களையோ, அமைப்புகளையோ குறிப்பது அல்ல.

## சபையின் இரு தோற்றங்கள்

வேதாகமத்தில் சபையின் இரண்டு தோற்றங்கள் கூறப்பட்டுள்ளது. (1) உலகளாவிய சபை (universal Church) (2) ஸ்தல சபை (local church) உலகளாவிய சபை என்றால் பெந்தெகொஸ்தே நாளிலிருந்து கிறிஸ்துவை ஏற்றுக்கொண்டவர்களைக் குறிக்கும். இதில் ஜீவிக்கிறவர்களும், மரித்தவர்களும், எல்லாக் கோத்திரத்தாரும், சாதியரும் அடங்குவர். கிறிஸ்து சபையை நேசித்தார், அதற்காக தன்னையே ஒப்புக்கொடுத்தார் (எபேசி.5:25,27) என்று வேதம் சொல்லுகிறபொழுது முழு சபையையும் குறிக்கிறது. சபை கிறிஸ்துவின் சரீரமாகும் (எபேசி.1:22-23 ; 4:4). அவர் மட்டுமே அதன் தலைவர் என்கிற விளக்கம் மிக உண்மையுள்ளது (கொலோ.1:18). இப்படிப்பட்ட சபை ஏதோ ஒரு இடத்தில் ஒரு அமைப்பின்கீழ் இருப்பது அரிதான காரியம். நடைபெறமுடியாத ஒன்று என்பது வெளிப்படையான உண்மை. தேவனுடைய மனதில் இப்பொழுது ஒரு தெய்வீக ஒற்றுமையாக சபை இருக்கிறது. உண்மையான சபை புதிய ஏற்பாட்டு அப்போஸ்தலர்களாலும், தீர்க்கதரிசிகளாலும் கட்டப்பட்டது. அதன் பிரதான மூலைக்கல் இயேசு கிறிஸ்து ஆவார் (எபேசி.2:20). பரிசுத்தஆவியானவர் ஒருவரே நம்மைக் கிறிஸ்துவோடு ஐக்கியப்படுத்தி சபையின் அங்கத்தினர்களாக நம்மை மாற்றுகிறார் (1.கொரி.6.17 ; எபேசி.5:30). சபை பழைய ஏற்பாட்டிலும், நான்கு சுவிசேஷங்களிலும் இரகசியமாக இருந்தது (எபேசி.2:11-16 ; 3:6). கிறிஸ்துவின் சபை இன்னும் கட்டப்படவேண்டியிருந்தது (மத்.16:18). விசுவாசிகளைக் கிறிஸ்துவில் சேர்க்க ஆவியானவரின் ஞானஸ்நானத்தால் சபை ஏற்படுத்தப்பட்டது (1.கொரி.12:13). இது பெந்தேகொஸ்தே நாளில் துவங்கியது (அப்.1:5 ; 2:4 ; 5:11). இஸ்ரவேலர் வானாந்திரத்திலே பிரயாணம்பண்ணியபோது இருந்த சபைக்கும், இயேசு கிறிஸ்துவின் சபைக்கும் வித்தியாசம் உண்டு (அப்.7:58). யூதர்கள், புறஜாதியர், சபை ஆகிய மூன்றும் ஒன்றிற்கு ஒன்று வித்தியாசமானது (1.கொரி.10:33). தேவன் இஸ்ரவேல் ஜனங்களை இப்பொழுது என்னுடைய ஜனங்கள் இல்லை என்கிறார் (ரோ.9:25 ; ஓசியா 2:23) இயேசு கிறிஸ்துவில் விசுவாச முள்ளவர்கள் மட்டுமே தேவனுடைய ஜனங்கள், இதுவே வேதம் நமக்கு கூறுகிறது.

உலகளாவிய சபையிலே நாம் ஒரு பகுதியாயிருப்பதால், ஸ்தல சபையிலே நாம் செயலற்றவர்களாக இருக்கமுடியாது. முதல்முதலாக கிறிஸ்துவை விசுவாசித்து, ஞானஸ்நானம் பெற்றவர்கள் எருசலேமில் உள்ள ஸ்தல ஐக்கியத்தில் சேர்க்கப்பட்டார்கள் (அப்.2:41). அவர்கள் மற்ற விசுவாசிகளோடு சேர்ந்து வாழ்க்கை நடத்தினர் (அப்.2:44). மிக விரைவாக அருகாமையுள்ள பகுதிகளில் சபை அமைக்கப்பட்டது (அப்.9:31 , 15:41 ; 16:5). உலகில் பிற பகுதிகளான ஆசியா (1.கொரி.16:19), மக்கதேனியா (2.கொரி.8:1), கலாத்தியா (கலா.1:2) ஆகிய நாடுகளிலும் சபை பரவியது. இவைகள் கிறிஸ்துவின் சபைகள் என்றும் (ரோ.16:16), தேவனுடைய சபைகள் என்றும் (1.கொரி.11:16), பரிசுத்தவான்களின் சபைகள் என்றும் (1.கொரி.14:33) அழைக்கப்பட்டது. சில சமயங்களில் சபைகள் இருக்கின்ற பட்டணங்களின் பெயர்களைக் கொண்டு அவைகள் அழைக்கப்பட்டது. அவைகள் கொரிந்து (1.கொரி.1:2) அல்லது அந்தப் பட்டணத்தில் தங்கி வசிப்பவர்கள்

தெசலோனிக்கெயர் சபை (1.தெச.1:1). கிட்டத்தட்ட இரண்டு நூற்றாண்டுகள் ஆராதனை செய்வதற்கு பொதுவான கட்டடங்கள் இல்லை. அவர்கள் வீடுகளிலேயே கூடினர் (ரோ.16:5 ; கொலோ.4:15). சபைகளில் உள்ள பரிசுத்தவான்கள் மத்தியில்

மிக எளிமையான தலைமைத்துவ அமைப்பு இருந்தது. அவர்கள் கண்காணிகள் என்றும் உதவியாளர்கள் என்றும் அழைக்கப்பட்டனர் (பிலி.1:1 ; 1.தீமோ.3 ; தீத்து 1). இங்கு கண்காணிகள், உதவிக்காரர்கள் பன்மையில் இருப்பதைக் காணலாம். சபையை நிர்வகிப்பதிலே இச் சபைகள் ஒரு நபரின் தலைமையை நாம் காணமுடியவில்லை. ஆதித்திருச் சபைகளில் ஒரு நபர் எல்லா அதிகாரத்தையும் வைத்து சபையை நிர்வகிக்கின்ற முறை இல்லாமல் இருந்தது. நடத்துகிறவர்களை மதித்து, கீழ்ப்படிந்திருக்கவேண்டும் (எபி.13:17 ; 1.தெச.5:12). நாம் கிறிஸ்துவுக்கு மட்டும் கீழ்ப்படிகிறவராயிராமல் நம்மைச் சபையிலே நடத்துகிற தலைவர்களுக்கும் கட்டுப்பட்டு இருக்கவேண்டும்.

உண்மையான விசுவாசிகள் அனைவரும் உலகளாவிய சபையின் அங்கத்தினர்களாக இருக்கிறார்கள். அவர்கள் அனைவரும் ஸ்தல சபையிலும் அவ்வாறே உள்ளனர். அநேகநேரங்களில் இது மிகவும் கடினமான ஒன்றாக இருக்கிறது. ஏனென்றால் உண்மையான விசுவாசமின்றி கிறிஸ்துவை ஏற்றுக்கொண்டேன் என்று சொல்லுகிறவர்கள் சபைக்குள்ளாக வருகின்றபொழுது, இயேசு கிறிஸ்து போதித்தார் களைகளும் கோதுமையும் ஒரே நேரத்தில் ஒன்றோடு ஒன்று சேர்ந்து வளரும் என்று (மத்.13:24-30,36-42). உண்மையற்ற விசுவாச அறிக்கை பண்ணியவர்கள் வரும் நாட்களில் நிராகரிக்கப்படுவார்கள். அவர்கள் ஸ்தலசபையைச் சார்ந்தவர்களாக இருந்தாலும் சரி இல்லை என்றாலும் சரி (மத்.7:21-23).

## சபையின் குணங்கள்

சபை என்று சொன்ன உடனே மக்கள் தங்கள் மனதில் ஒரு பெரிய அரங்கத்தை நினைக்கிறார்கள். ஒரு பேச்சாளரை நினைக்கின்றனர் அல்லது ஒரு தலைமைச் செயலகம் கொண்ட ஒரு பெரிய அமைப்பாகக் கருதுகின்றனர். இல்லையென்றால் ஏராளமான அதிகாரிகள், குருக்கள் கொண்ட ஒரு அமைப்பு என்று நினைக்கின்றனர். ஆனால் பரிசுத்த வேதம் இதிலிருந்து முற்றிலும் மாறுபட்ட கருத்தை உடையதாக இருக்கிறது.

### 1) ஒருமைப்பாடு (எபேசி.4:3 – 6)

சபை ஒன்றே, பிரிவினைகள் இருக்கக்கூடாது. ஆவிக்குரிய ஒருமைப்பாட்டை பேணிக்காக்க எல்லா முயற்சிகளும் எடுக்கவேண்டும் (எபேசி.4:3). விசுவாசிக்குள் உள்ள ஐக்கியத்தைச் சீர்குலைக்கிறவைகளைத் தவிர்க்கவேண்டும் (1.கொரி.1:10 ; 11:18 ; 12:25 ; 2.கொரி.12:20). பரிவினை உண்டாகிறது தவறான போதனைகளால்த்தான் (2.பேது.2:1). பிரிவினையை உண்டுபண்ணுகிறவர்கள் எச்சரிக்கப்பட்டு, பின்பு அவர்களை விட்டு விலகவேண்டும் (தீத்து 3:10).

### 2) வித்தியாசமான வரங்கள் (எபேசி.4:7 ; 1.கொரி.12:11)

வித்தியாசமான வழியாக இருந்தாலும், ஒவ்வொரு சபை அங்கத்தினரும், சபை பக்திவிருத்திக்கு தன்னுடைய பங்கைச் செய்யவேண்டும். ஒவ்வொருவரும் சபைக்குச் செய்யவேண்டிய பணிகளின் மொத்தஉருவமே சபையாக இருக்கிறது. எதுபோல் என்றால் அநேக அவயவங்கள் சேர்ந்துதான் சரீரம் ஆவதுபோல் (1.கொரி.12:12-27 ; ரோ.12:4-5). சரீரத்திற்குள் பல அவயவங்கள் இருப்பதுபோல, ஒவ்வொரு விசுவாசியும் சபைக்குள் ஓர் அங்கமாக இருக்கிறான். கிறிஸ்து சரீரத்தின் தலையாக இருக்கிறார். அவர் தன்னுடைய விருப்பத்தின்படி ஆவிக்குரிய வரங்களை அளிக்கிறார் (1.கொரி.12:13). முக்கியமான வரங்களை நாடுங்கள் என்று வேதம் சொல்கிறபொழுது, ஸ்தலசபையே முழுவதுமே சில முக்கியமான வரங்கள் மீது மதிப்பை வைத்திருத்தலைக் குறிக்கிறதேயல்லாமல் (1.கொரி.12:31 ; 14:1). தனிநபர்களின்

தனிப்பட்ட ஆவலைக் குறிப்பதில்லை இப் பகுதியில் முக்கியமாக இருப்பது என்னவென்றால் ஒவ்வொரு அவயவங்களுக்கும் வரங்கள் உண்டு. அவைகள் சரீரத்திற்குள்ளாகச் செயல்பட வேலை ஒதுக்கப்பட்டுள்ளது (1.கொரி.12:27). ஒவ்வொரு

அவயவமும் (உறுப்பினரும்) முக்கியமானவர்கள். ஒவ்வொருவரும் செயற்பட சரியான தருணம் உண்டு. ஒவ்வொருவரும் மதிக்கப்படவேண்டும். எல்லோருக்கும் ஒரேவிதமான வரங்கள் இருக்காது.

### 3) ஒன்றுக்கொன்று சார்புடைய தன்மை (எபேசி.4:12 – 13 ; 1.கொரி. 12:23 – 24)

நாம் ஒருவருக்கொருவர் தேவை உள்ளவராயிருக்கிறோம். நாம் மட்டுமே செயற்பட உண்டாக்கப்பட்டவர்கள் அல்ல. எல்லா விசுவாசிகளும் ஊழியத்தில் ஈடுபாடு காட்டவேண்டியதே பிரதான வரங்களின் நோக்கமாகும். அவர்கள் பார்வையாளராகவோ, தனிநபராகவோ, முடங்கிப்போன உறுப்புக்களாக சபையில் இருக்கவேண்டியதில்லை. எல்லா விசுவாசிகளும் ஸ்தல சபைகளில் செயற்படவே அழைக்கப்படுகிறார்கள்.

### 4) ஆராதனை (1.பேது.2:4 – 5)

நம்முடைய அதிசயமான தேவனைத் துதிப்பதற்காகவும், அராதிப்பதற்காகவும் நாம் அழைக்கப்பட்டிருக்கிறோம் (யோ.4:23). ஆராதிக்கும் இச் செயல் சபை என்ற வடிவில் உள்ளது. இது தேவனுடைய ஆலயமாகவும் அல்லது தேவனுடைய வீடாகவும் இருக்கிறது (1.கொரி.3:9,16-17 ; 1.தீமோ.3:1 ; எபேசி.2:22) பழைய ஏற்பாட்டுக் காலத்து ஜனங்கள் வனாந்தரத்திலே ஆசாரிப்புக் கூடாரத்திலும், எருசலேமிலும் தேவாலயத்திலும் தேவனை ஆராதித்தார்கள். அதன்பின் தேவன் கைகளால் கட்டப்பட்ட ஆலயங்களில் வாசம்பண்ணுவதை நிறுத்தினார் (அப்.7:48). இதுவே இஸ்ரவேல் ஜனங்களுக்கும், கிறிஸ்துவின் சபைக்கும் உள்ள முக்கியமான வித்தியாசமாகும். தேவனுடைய வீடு இப்பொழுது ஆவிக்குரிய ஒன்று, ஜீவனுள்ள கற்களால் கட்டப்பட்டவை. நாம் தெளிவாக சொல்வோமானால் ஆவியானவர் தங்குகிற விசுவாசிகளே தேவனுடைய ஆலயம். இப்பொழுது நம்முடைய பலிகள் மிருகங்கள் அல்ல. அர்ப்பணிக்கப்பட்ட சரீரங்களும், நமக்குள்ள பொருட்களும், நம்முடைய துதிகளுமே ஆகும். கிறிஸ்துவுக்குள் உள்ள அனைத்து விசுவாசிகளுமே ஆசாரியர்கள் தான் (1.பேது.2:5,9). தேவனுடைய சபையில் ஆராதனை முதன்மையான செயலாகும். தேவனுக்குத் துதிகளையும், ஸ்தோத்திரங்களையும் ஏறெடுப்பதே ஆராதனை. பிரசங்கத்தை மட்டும் கேட்பதோ எழுதிவைக்கப்பட்ட ஒழுங்குமுறைகளைக் கையாண்டு திரும்ப திரும்ப ஒரே வார்த்தையைச் சொல்வதோ ஆராதனை அல்ல.

### 5.) அன்பால் ஆன உறவு (எபேசி.5:23 – 24 ; 2.கொரி.11:2)

அன்பின் அடிப்படையிலான உறவை சபையின் வடிவில் நாம் காணலாம். சபை மணவாட்டிக்கு ஒப்பிடப்பட்டுள்ளது. பெந்தேகொஸ்தே நாளில் இருந்து தேவனுடைய ஜனங்கள் ஒரு அழகான மணப்பெண்ணாக அலங்கரிக்கப்பட்டு, மணவாளனாகிய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவுக்கு நியமிக்கப்பட்டிருக்கிறாள். கிறிஸ்து தன்னுடைய மணமகளை உயிரினும் மேலாய் நேசிக்கிறார். அவளைப் பரிசுத்தமாக தனக்குள்ளாக நிலைநிறுத்தவேண்டும் என்று அவலுள்ளவராய் இருக்கிறார். அதற்கு மாறாக இஸ்ரவேல் ஜனங்கள் மணமுறிவு (விவாகரத்து) செய்துகொண்ட பெண்ணிற்குச் சமமாக கருதப்படுகிறாள் (ஏசா.50:1). சபை கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவோடு உள்ள நெருங்கிய, அன்பான உறவையும், அவரின் நிகழ்கால, வருங்கால நோக்கங்களில் தன்னுடைய முக்கிய செயலையும் தெரிந்துகொள்ளவேண்டும். தன்னுடைய மணவாட்டியைக் குறித்து, மணவாளனாகிய கிறிஸ்து தன் மனதில் நல்லதையே கொண்டுள்ளார். சபை எப்பொழுதும் தன்னுடைய கண்களை மணவாளனின் மீதே பதித்திருக்கவேண்டும்.

### 6) பிற குணங்கள்

சபை வளர்கின்ற ஒன்று. முடமாகிப் போகிறதில்லை. இல்லை என்றால் அழிந்துபோகின்ற ஒன்றுமல்ல (அப்.6:1,7 ; 12:24 ; 19:20). சபை ஜீவனுள்ளது, மரித்தது அல்ல. பரிசுத்தமுள்ளது (1.கொரி.3:17 ; 1:பேது.1:15-16). பரிசுத்தமான போதனைகளைக் கொண்டது, மாறுபாடான போதனைகளை அல்ல (1.தீமோ.1:3, 11 ; தீத்து 1:9-10 ; 2.பேது.2:1-3 ; வெளி 2:13-14,20). இயேசு கிறிஸ்துவை வெளிப்படுத்துகின்ற போதனைகளான அன்பு, ஜீவன், ஒளி ஆகியவை உண்மையான

பரிசுத்தவேதாகமத்தின் அடிப்படையில் உள்ள ஸ்தல சபைகளில் இருந்து ஒளிவிட்டுப் பிரகாசிக்கவேண்டும்.

## சபையின் செயற்பாடுகள்

சபை என்னென்ன பணிகளைச் செய்ய அழைக்கப்பட்டுள்ளது? சுவிசேஷத்தை எங்கும் போதித்தலும், சீஷர்களாக மக்களை மாற்றுவதுமாகிய உன்னத பணியைக் குறிக்கிறது. சபை மிகவும் கரிசனையுள்ளதாக இருக்கவேண்டும் (மத்.28:19-20). இதன் மாதிரி அப்போஸ்தலர் 2:40-42ல் காணப்படுகிறது. ஜனங்கள் நற்செய்தியைக் கேட்டார்கள். அதை விசுவாசித்தார்கள். ஞானஸ்நானம் பெற்றார்கள். அதன் பிறகு சபை வாழ்வில் உற்சாகமாய்ச் செயலாற்றினார்கள். சபை ஜீவியமும், செயல்களும் நான்கு வகையான பணிகளை உள்ளடக்கியது. அப்போஸ்தல உபதேசம், அந்நியோந்நியம், அப்பம்பிட்குதல், ஜெபம்பண்ணுதல் ஆகியவையாகும். இவற்றைத் தெளிவாக நாம் கூறுவோமானால் ஆரோக்கியமான வேதபோதனை, பிறவிசுவாசிகளோடு ஐக்கியமாக இருத்தல், அப்பம்பிட்குதல் (திருவிருந்து) மூலம் கர்த்தரை நினைவு கூருதல், சக விசுவாசிகளோடு சேர்ந்து ஜெபித்தல் ஆகும். ஏன் அப்பம்பிட்குதல் அல்லது திருவிருந்து இவ் அட்டவணையில் கூறப்பட்டுள்ளது? ஆதிச் சபையின் கூட்டங்களில் அப்பம்பிட்குதல் ஒரு முக்கியமான நிகழ்ச்சியாகும். (அப்.20:7; 1.கொரி.11:23-33). இம் மாதிரிகள் தேவன் ஆவிக்குரியவைகளுக்கு முக்கியத்துவம் கொடுக்காமல் அப்பம் பிட்குதலாகிய அடையாளத்திற்கு முக்கியத்துவம் கொடுக்கிறார் என்பது சரியல்ல. யூதர்கள் உண்மையான பொருள் தெரியாமல் கடைப்பிடித்த அனைத்துச் சடங்குகளும் தேவனால் நிந்திக்கப்பட்டது என்று பார்க்கிறோம்.

ஆதிச் சபைகள் தங்கள் அன்பைச் செயல் வடிவில் காண்பித்ததின் மூலமே (அப்.2:45). வல்லமையால் தேவனுடைய வார்த்தையை பிரகடனப்படுத்தியது மூலமும் (அப்.4:13,29-31) உபத்திரவத்தின் நிமித்தம் விசுவாசிகள் சிதறடிக்கப்பட்டபோது, அவர்கள் வாழ்க்கையாலும், சாட்சியாலும், அவர்கள் விசுவாசமும் பரவியது. இப்படி அவர்கள் வாழ்க்கை நல்ல மாதிரியாக இருந்தாலும் அவர்களில் குறை இல்லை என்று சொல்லமுடியாது. சிலவேளைகளில் அவர்கள் மாமிசத்திற்கு உரியவர்கள் என்றும், மனித விருப்பங்களினால் நடத்தப்படுகிறார்கள் என்றும் விமர்சிக்கப்பட்டார்கள் (1.கொரி.3:1-4). சிலரை அவர்கள் கிறிஸ்தவர்களா என்று சோதித்து அறிய கூறினார்கள் (2.கொரி.13:5). தவறான உபதேசத்தால் சிலர் கடிந்துகொள்ளப்பட்டார்கள் (கலா.1:6-9 ; 3:1-4). கிறிஸ்து சபைகளின் மத்தியில் உலாவுகிறபொழுது நிறைவையும், குறையையும் கூறுகிறார் (வெளி 2-3). இவ்வாறு இருந்தாலும், நாகரீகமான உலகம் முழுவதும் சபை பரவி, கிறிஸ்தவ விசுவாசம் ஒரு வலுவானதாகக் காணப்படுகிறது. சபைகளில் என்ன குறைகள் இருந்தாலும் அவைகளில் ஜீவன் இருந்தது. மேலும் தேவன் நோக்கத்தைச் செயற்படுத்துகிறார்.

## சபையின் வருங்காலம்

கர்த்தர் வானத்திலிருந்து இறங்கி வருகின்றபொழுது கிறிஸ்துவின் சபை அவருக்கு எதிர்கொண்டு போக மேகங்கள் மீது எடுத்துக்கொள்ளப்படும் (1.தெச.4:16-17). நாம்

மறுரூபமாக்கப்படுவோம் (1.கொரி.15:51-54). நாம் அவரோடே கூட இருபபோம். அவருக்கு ஒப்பாயிருப்போம் (1.யோ.3:2-3). இவ்வாறான சபையை உன்னதமான மகிமை நிலைக்குத் தேவன் உயர்த்தியிருக்கிறார் (எபேசி.2:6-7).

# பாடம் 6 ந் கான கேள்விகள்

1) புதிய ஏற்பாட்டில் சபை என்ற சொல் உலகளாவிய மற்றும் ஸ்தல சபையைக் குறிக்கிறது. பின்வருகின்ற பகுதிகளில் எவை எல்லாம் உலகளாவிய சபையையும், ஸ்தல சபையையும் குறிக்கிறது ?

1.கொரி.10:33 கலா.1:1–2

எபேசி.5:25 கொலோ.1:18

1.தெச.1:1

2) உலகளாவிய சபையையும் அதன் அங்கத்தினர்களையும் பற்றி விளக்குக (எபேசி.1:22–23 ; 4:15–16).

3) அப்போஸ்தலர் 2:42ஐ சொந்த நடையில் எழுதுக.

இந்த வசனத்திலிருந்தும் மத்தேயு 28:19–20 ல் இருந்தும் ஸ்தல சபையின் அடிப்படைச் செயல்கள் என்ன?

4) கிறிஸ்தவ ஐக்கியத்தின் நோக்கம் என்ன (பிர.4:9–10 ; எபி.10:24–25)?

5) எனக்குச் சபைக்குப் போகத் தேவையில்லை நான் தங்குகிற அறையிலே தேவனை ஆராதிப்பேன் என்று கூறுகிறவர்களுக்கு எவ்வாறு பதில் கூறுவீர்கள்?

6) ஸ்தல சபைக்குத் தேவன் தந்துள்ள ஆவிக்குரிய தலைவர்கள் யார் (பிலி.1:1)? அவர்கள் என்னென்ன தகுதிகள் பெற்றவர்களாக இருக்கவேண்டும் (1.தீமோ.3:1–13)?

ஸ்தல சபையில் உள்ள ஆவிக்குரிய தலைவர்களின் பொறுப்புகள் என்ன (எபி.13:17 ; 1.பேது.5:1–5)?

7) ஸ்தல சபையிலே உள்ள ஆவிக்குரிய தலைவர்களுடன் தனிப்பட்ட விசுவாசியின் பொறுப்பு என்ன (எபி.13:7,17 ; 1.பேது.5:5)?

என்ன வழிகளில் இந்த வேதவசனத்திற்கு கீழ்ப்படிகிறீர்கள்?

8) ஒவ்வொரு விசவாசியும் சபையில் தனிநபராக என்ன செயல்கள் உடையவராக இருக்கின்றனர் (1.கொரி.12:12–17)?

ஏன் தேவன் ஒவ்வொரு விசுவாசிக்கும் ஆவிக்குரிய வரங்கள் கொடுத்துள்ளார் (எபேசி.4:11–16)?

ஸ்தல சபைகளில் நீங்கள் எப்படி நடந்துகொள்ளவேண்டும் (எபேசி.4:2–3 ; யோ.13:34–35)?

9) உங்களுடைய கருத்தின்படி எப்பொழுது ஒருவர் ஸ்தல சபையில் செயற்படுகின்ற அங்கத்தினராவார்? விளக்குக.

10) நீ இருக்கின்ற இடத்தைவிட்டு இன்னொரு இடத்திற்கு மாறிச் சென்றால் எப்படி ஸ்தல சபையைத் தெரிந்துகொள்வீர்கள்? எந்த வேத பகுதியை நினைவில் எடுத்துக்கொள்வீர்கள்?

## பாடம் 7: சோதனையை மேற்கொள்ளல்

மனித இனத்தின் பொதுவான குணங்களில் ஒன்றாக இருப்பது தவறு என்று தெரிந்த பின்பும் அத் தவறைச் செய்வதாகும். நாம் சிலவேளைகளில் தவறு செய்யாதவண்ணம் வெற்றிகரமாக தவறை எதிர்த்து நிற்கின்றோம். சில நேரங்களில் தவறைச் செய்கின்றோம். தவறு செய்வதற்கு தூண்டுதல் அல்லது வேண்டுதலைச் சோதனை என்று அழைக்கின்றோம். விசுவாசிகளாகிய நம்முடைய முன்னேற்றம் இச் சோதனைகளை நன்கு அறிந்து அவற்றைத் தேவனுடைய வார்த்தையினால் வெற்றிகரமாக எதிர்த்து நிற்பதை அடிப்படையாகக்கொண்டது என்பதில் எந்தவித சந்தேகமும் இல்லை.

## சோதனையின் பொருள்

வேதாகமத்தில் சோதனை என்ற சொல்லிற்கு ஒன்றுக்கு மேற்பட்ட அர்த்தங்கள் உள்ளது.

(1) சோதித்தல் அல்லது புடமிடுதல். தேவன் மனிதனுடைய விசுவாசத்தைச் சோதிப்பது ஆகும் (ஆதி.22:1 ; யாத்.15:25 ; 16:4). விசுவாசத்தைத் தேவன் சோதிப்பது நேரடியாக இருக்கலாம், மறைமுகமாகவும் இருக்கலாம். தேவன் ஆபிரகாமிடம் ஈசாக்கைப் பலியிட வேண்டியது நேரடியான சோதனையைக் குறிக்கிறது. வாழ்க்கையில் ஏற்படுகின்ற கஷ்டங்கள், துன்பங்கள் ஆகியவை மறைமுகமான சோதனையைக் குறிக்கிறது (யாக்.1:2-3 ; 1.பேது.1:6 ; 4:12). நம்முடைய விசுவாசத்தின் உண்மைத் தன்மையைச் சோதித்துப் பார்ப்பதே இச் சோதனையாகும்.

(2) தேவனுக்கு மனிதன் சவால் விடுதல் அல்லது அவரைக் கோபமூட்டுதல் என்பதும் சோதனையின் இன்னொரு பொருளாகும் (யாத்.17:7 , அப்.15:10 ; 1.கொரி.10:9; எபி.3:8). ஒருவன் தேவனை எப்படிச் சோதிக்கிறான் என்றால் அவருடைய அன்பையும் வல்லமையையும் குறித்துச் சந்தேகம் கொள்வதாலும் வேதத்திற்குப் புறம்பான செயல்களாலும் அவருக்கு விரோதமாக கலகம் செய்து தேவனைச் சோதிக்கிறான். இப்படிப்பட்ட செயல்கள் தேவனுடைய கோபத்தைத் தூண்டுகிறது (சங்.107:29 ; ஏசா.5:25).

(3) தேவனுடைய பார்வையில் தவறாகவும், தீமையாகவும் காணப்படுபவைகளைச் செய்ய இச்சைகளினாலே இழுக்கப்படல் என்பதும் சோதனையின் இன்னொரு பொருளாகும் (யாக்.1:14 ; கலா.6:1 ; 1.தீமோ.6:9 ; 1.தெச.3:5). இதுவே இங்கு அடிப்படைப் பாடமாக இருக்கிறது. தேவன் மனிதனை ஒருபோதும் நேரடியாக இம்மாதிரியாகச் சோதிப்பவர் அல்ல (யாக்.1:13). ஆனால் சாத்தான் அப்படிச் செய்வதற்கு அனுமதிக்கிறார். சில சமயங்களில் பிசாசு விசுவாசிகளைச் சோதிக்கும்படியாக தேவன் அவனுக்கு அனுமதியளிக்கிறார் (யோபு 1:12 ; 2:3-6).

இவ்விதமான மூன்றுவித சோதனைகளை வசனத்தின் அடிப்படையிலுள்ள எடுத்துக்காட்டோடு பார்ப்போம். சங்கீதக்காரன் தேவனிடத்தில் தேவனே என்னை ஆராய்ந்து, என் இருதயத்தை அறிந்து கொள்ளும். என்னைச் சோதித்து என் சிந்தனைகளை அறிந்துகொள்ளும் (சங்.139:23). என்கிற வேண்டுகோளை முதல்வகை சோதனையைச் சார்ந்தது. சோதனைக்காரன் இயேசுவை நோக்கி தேவாலயத்தின் உப்பரிகையில் இருந்து குதியும் அப்பொழுது தூதர்கள் அவரைக் காப்பாற்றுவார்கள் என்று கூறியபோது இயேசு சோதனைக்காரனைப் பார்த்துக் கர்த்தரைப் பரீட்சை பாராது இருப்பாயாக (லூக்.4:9-12) என்று கூறி தேவனை சோதிக்கவில்லை. இது இரண்டாவது வகை சோதனையைச் சார்ந்தது. கர்த்தருடைய ஜெபம் என்று அழைக்கப்படுகின்ற ஜெபத்தில் எங்களைச் சோதனைக்குட்படப் பண்ணாதேயும்

என்கிற வாக்கியமும் அதே வசனத்தில் பிற்பகுதியில் கூறப்பட்டுள்ள தீமையில் இருந்து எங்களை இரட்சித்துக்கொள்ளும் (மத்.6:13) ஆகியவை மூன்றாவது வகை சோதனையைக் குறிக்கிறது. தேவனுடைய வார்த்தையில் இப் பகுதியைப் படிப்பது நமக்குத் தைரியமூட்டுவதாக இருக்கும். மனுஷருக்கு நேரிடுகிற சோதனையல்லாமல் வேறே சோதனை உங்களுக்கு நேரிடுவதில்லை. தேவன் உண்மையுள்ளவராய் இருக்கிறார். உங்கள் திராணிக்கு மேலாக நீங்கள் சோதிக்கப்படுவதற்கு அவர் இடங்கொடாமல், சோதனையைத் தாங்கத்தக்கதாக சோதனையோடு கூட அதற்குத் தப்பிக்கொள்ளும் போக்கையும் உண்டாக்குவார் (1.கொரி.10:13). தேவன் சோதனையைத் தன்னுடைய நோக்கத்திற்காவும் மனிதனுடைய நலனுக்காகவும் பயன்படுத்துகிறார். அதன்மூலம் அவர் விசுவாசத்தையும் உண்மையையும், நற்குணங்களையும் விளங்கப்பண்ணுகிறார். எதிரியின் வாயை மூடிப்போடுகிறார்.

## தீமை செய்வதற்கு இழுத்துச் செல்லும் மூன்று ஆதாரங்கள்

மூன்று திசைகளில் இருந்து மனிதன் மீது தாக்குதல் தொடுக்கப்படுகிறது. இந்த மூன்று வித தாக்குதல்களைப் படிப்பது மிகவும் நல்லது.

### 1) பிசாசு:

தீமைக்குக் காரணமாய் இருப்பவன் பிசாசு. மனிதன் தேவனைப் பின்பற்றுவதில் இருந்து அவனை வழிவிலகச் செய்கிறான். சோதனைக்காரன் என்று இவன் அழைக்கப்படுகிறான் (மத்.4:3 ; 1.தெச.3:5). பிசாசு என்ற சொல்லின் பொருள் குற்றம்சுமத்துபவன் அல்லது பழிச்சொல் கூறுபவன் ஆகும். மனிதனிடத்தில் தேவனைப் பற்றிக் குற்றம் கூறினான் (ஆதி.3:5). தேவனிடத்தில் மனிதனைப் பற்றிக் குற்றம் சுமத்துகிறான் (வெளி 12:10). சாத்தான் என்ற சொல்லின் பொருள் விரோதி என்பதாகும். ஏனென்றால் அவன் தேவனுக்கும், மனிதனுக்கும் விரோதியாக இருக்கிறான் (1.பேது.5:8). இந்தத் தீமையின் துவக்கத்தைப் பற்றி எசேக்கியேல் 28:12-19 லும் ஏசாயா 14:12-14 லும் கூறப்பட்டுள்ளது. தேவனுடைய வார்த்தையைப் பற்றி சந்தேகத்தைக் கிளப்புவதன் மூலமும் பிசாசு செயற்படுகிறான் (ஆதி.3:1) ஜனங்களை சரீரப்பிரகாரமும், மனரீதியாகவும், ஆவிக்குரிய ரீதியாகவும் துன்புறுத்துகிறான் (அப்.10:38) மனிதனை அழிவுக்கு நேராக பிசாசு இழுத்துச் செல்கிறவனாக இருக்கிறவன் ஆகையால் அவனுக்கு அபெத்தோன் அல்லது அப்பொல்லியோன் என்ற பெயர் உள்ளது. இதன் அர்த்தம் அழிப்பவன் என்பதாகும் (வெளி 9:11). இவன் செயல் மனிதன் தன் ஆத்துமாவை இழந்துபோகின்ற நிலைக்கு அவனைத் தள்ளிவிடுகிறது. பிசாசானவன் ஆத்துமாவைக் கொலைசெய்கிறான் (யோ.8:44).

### 2) உலகம்:

உலகம் தவறான வழிகளில் நடத்துகின்ற கொள்கைகளையும், கோட்பாடுகளையும், பக்தியற்ற தாக்கத்தையும் கொண்டுள்ளது. இவைகள் உலகத்தைத் தேவனைவிட்டுத் தூரமாக இழுத்துச் செல்கிறது. உலகம் என்ற சொல்லைக் கேட்டவுடன் குழம்பிவிடக்கூடாது. ஏனென்றால் இது பூமியாகிய கிரகத்தையோ அதில் வசிக்கின்றவர்களையோ குறிக்கவில்லை. தீமையான முறைகள் நிறைந்த உலகத்திற்கு சாத்தான் அதிபதியாகவும், தலைவனாகவும் இருக்கிறான் (யோ.12:31 ; எபேசி.2:2). குழந்தை, தாயின் கையில் இருப்பதுபோல் உலகமானது பொல்லாங்களாகிய சாத்தானின் கையில் உள்ளது (1.யோ.5:19). உலகத்திற்குச் சிநேகிதனாய் இருக்க விரும்புகிறவன் தேவனுக்குப் பகைஞனாய் இருக்கிறான் (யாக்.4:4). விசுவாசிகள் இவ்வுலகத்தில் வசிப்பவர்களாக இருக்கிறார்கள் (யோ.13:1). என்றாலும் உலகத்திற்கு ஏற்ப ஒத்து வாழ்கிறவர்களாக அல்ல (யோ.15:19). மறுபடிபிறந்து உலகத்தை ஜெயித்தவர்களாக இருக்கிறார்கள் (1.யோ.5.4).

### 3) மாமிசம்:

வேதாகமத்தில் மாமிசம் என்ற வார்த்தை மூன்று விதமாகக் கூறப்பட்டுள்ளது. இது (1) பொதுவான மனித இனத்தைக் குறிக்கிறது (அப்.2:17). மனித சரீரத்தைக் குறிக்கிறது

(யோ.1:14 ; 3:6 ; 6:51). இங்கு நாம் இறுதியாகக் கூறப்பட்டுள்ள இச்சையோடு உள்ள ஆவலைப் பற்றிப் பார்க்கப்போகிறோம். மாம்சம் ஒருவனைக் கட்டுப்படுத்துகின்ற பொழுது இயற்கையாகவே இருக்கின்ற ஆசை அல்லது ஆவல் எல்லையைத் தாண்டிச் சென்றுவிடுகிறது. உதாரணமாக பால்உணர்வு இது திருமண வாழ்க்கைக்குள் நியாயமான ஒன்று. அதே சமயம் திருமணத்திற்கு வெளியே அது வேசித்தனம். சரீரத்தின் தேவைக்காக உணவு உண்பது சரி, எப்பொழுதும் சாப்பிடுவதற்காகவே வாழ்கிறோம் என்று நினைத்து உணவு உண்பது பெருந்தீனியைக் குறிக்கிறது. மாம்சத்தின் செயல்கள் எவையெனக் குறிப்பிடப்பட்டுள்ளது. விபச்சாரம், வேசித்தனம், அசுத்தம், காமவிகாரம், விக்கிரக ஆராதனை, பில்லிசூனியம், பகைகள், விரோதங்கள், வைராக்கியங்கள், கோபங்கள், சண்டைகள், பிரிவினைகள், மார்க்கபேதங்கள், பொறாமைகள், கொலைகள், வெறிகள், களியாட்டுகள் இப்படிப்பட்டவைகளைச் செய்கிறவன் தேவனுடைய இராஜ்ஜியத்தைச் சுதந்தரிப்பதில்லை (கலா.5:19-21).

## இரண்டு விதமான சுபாவங்கள் - ஆவிக்கு எதிராக மாமிசம்

கிறிஸ்துவுக்குள் உள்ள விசுவாசிகள் தங்களுக்குள் நடைபெறுகின்ற ஒரு போராட்டத்தைத் தெரிந்திருப்பார்கள். சில நேரங்களில் இப் போராட்டம் இரண்டு சுபாவங்களுக்குள்ளான போராட்டமாகும். நல்லது செய்யவேண்டும் என்கிற சுபாவத்திற்கும் தவறு செய்யத்தூண்டும் சுபாவத்திற்கும் இடையே உள்ள போராட்டம். மாம்சம் ஆவிக்கு விரோதமாகவும் ஆவி மாம்சத்திற்கு விரோதமாகவும் இச்சிக்கிறது. நீங்கள் செய்யவேண்டும் என்கிறவைகளைச் செய்யாதபடிக்கு இவைகள் ஒன்றுக்கொன்று விரோதமாக இருக்கிறது. (கலா.5:17). விசுவாசி இரட்சிக்கப்படுகிறார் ஆனால் சுபாவம் அல்ல. புதிய பிறப்பால் சுபாவம் மாற்றப்படுவதில்லை. சுபாவம் என்பது மனநிலை, ஆனால் குணம் அல்லது ஒன்றைச் செய்வதற்குரிய தகுதியைக் குறிக்கிறது. நாய் குரைப்பதற்கு எத்தனித்தாற்போல பழைய சுபாவம் பாவம் செய்ய எத்தனிக்கிறது. இது மனிதனுடைய பிறப்பிலிருந்தே உள்ள மனநிலையாகும். ஆதாமிலிருந்து சுதந்தரித்ததாகும் (ரோ.5.12). சுபாவத்தின்படி மனிதன் இச்சிக்கிறான். மாம்சமும் மனதும் விரும்புகிறதைச் செய்ய எத்தனிக்கிறான் (எபேசி.2:3). சிலவேளைகளில் இந்த சுபாவம் பழைய மனிதன் என்றும் அழைக்கப்படுகிறது (எபேசி.4:22 ; கொலோ.3:9). மாம்ச சிந்தை என்றும் அழைக்கப்படுகிறது ( ரோ. 8:7 ). இந்த சுபாவமே தீமைக்கு மூலமாக இருக்கிறது ( மாற். 7:21-23 ) . அக்கிரமத்தால் நிறைந்திருக்கிறது . (சங்.51:5). தேவனுக்கு விரோதமாகவும், இதன் மூலம் அவரை பிரியப்படுத்தவும் முடியாது. (ரோ.8:7-8 ) நன்மையான ஒன்றும் மாம்சத்தில் இருந்து வராது. (ரோ.7:18).

நாம் மறுபடி பிறக்கிறபொழுது ஒரு புதிய சுபாவத்தைப் பெறுகிறோம் (2. பேது.1:4) நாம் புதிய சிருஷ்டியாக்கப்படுகிறோம் (2.கொரி.5:17) புதிய மனிதனாகவும் இருக்கிறோம் (எபேசி.4:24) தேவனுடைய வித்து நமக்குள் தரித்திருக்கிறது. (1.யோ. 3:9). பழைய மனிதன் நம்மை விட்டு நீக்கப்படாமலும், வளராமலும் இருப்பதால், ரோமர் நிருபத்தில் கூறப்பட்டுள்ளபடி (ரோ.7:15-23) இவ்விரு சுபாவங்களுக்கும் போராட்டம் நடைபெறுகிறது . புதிய சுபாவம் பழைய சுபாவத்தின் மீது அதிகாரம் செலுத்த வேண்டியது மிக முக்கியமாகும், இதற்கு நாம் தேவனுடைய வல்லமையைப் பெற வேண்டும், புதிய சுபாவத்தை எல்லா வழிகளிலும் வளர்த்து, விருத்தியாக்கி, பழைய சுபாவத்தை மேற்கொள்ள வேண்டும். அப்போஸ்தலனாகிய பவுல் தன் சரீரத்தை ஒடுக்கிக் கீழ்ப்படுத்துகிறேன் என்கிறார் (1.கொரி.9:27) இது சுய கட்டுப்பாட்டைப் பற்றி கூறுவதாக உள்ள சொல்லாகும் .

## தீமை செய்வதற்கு இழுத்துச் செல்லல் பற்றிய இரண்டு விளக்கங்கள்

மூன்று விதமான வழிகளில் சோதனையில் மனிதன் விழும்படி தாக்கப்படுகிறான். முதல் மனிதனின் வரலாறு இதை நமக்கு விளக்குகிறது (1.யோ.2:16). விலக்கப்பட்ட கனி ஏவாளுக்கு முன்னால் சோதனைக்காரனால் காட்டப்பட்ட பொழுது (ஆதி.3:6) அது புசிப்பதற்கு நல்லதும் ( மாம்சத்தின் இச்சை ) பார்வைக்கு இன்பமும் ( கண்களின் இச்சை ) புத்தியைத் தெளிவிக்கிறதும் ( ஜீவனத்தின் பெருமை ) ஆக இருந்தது.

கர்த்தராகிய இயேசுவை சோதனைக்காரன் சோதித்த விதமும் இதே மாதிரியை கொண்டதாகவும் இருக்கிறது. அவர் பசியாயிருக்கின்ற பொழுது முதலாவது சோதிக்கப்பட்டார். கற்களை அப்பமாக்க சோதனைக்காரன் கூறினான், இது மாம்சத்தின் இச்சை (மத்.4:3) அடுத்து அவரை தேவாலயத்தின் உப்பரிகையின் மேல் நிறுத்தி தாழ குதிக்கக்கூறி தூதர்கள் காப்பாற்றுவார்கள் என்று கூறினான் இது ஜீவனத்தின் பெருமை (மத்:4:5-6) இறுதியாக பிசாசை சேவித்தால் உலகின் மகிமையைக் காட்டி அதைத் தருவேன் என்பது கண்களின் இச்சையை விளக்குகிறது (மத்.4:8).

## இச்சைகளில் இருந்து வெற்றிபெற தேவன் என்ன செய்திருக்கிறார்

நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்து சோதனையை வெற்றி கொண்டார். அதன் மூலம் நம்முடைய வெற்றிக்கு வழி வகுத்துள்ளார் . இயேசு கிறிஸ்து சந்தித்த சோதனையல்லாமல், வேறு எந்த சோதனையும் மனிதனை எதிர்கொள்ளாது .

### 1) பிசாசின் தோல்வி:

கர்த்தராகிய இயேசுவால் சிலுவையிலே பிசாசு தோற்கடிக்கப்பட்டான் (யோ.12:31 ; 16:11 ) . அவனுக்கு விசுவாசிகளின் மீது இருந்த வல்லமை முறியடிக்கப்பட்டது (கொலோ.2:15 ; எபி.2:14) . நாம் பிசாசுக்கு பயப்படவேண்டும் என்று கூறப்படவில்லை ஆனால் நாம் பிசாசுக்கு எதிர்த்து நிற்க வேண்டும் அப்பொழுது அவன் ஓடிப் போவான் (யாக்.4:7). விசுவாசியின் மீது பிசாசுக்கு அதிகாரம் இருக்குமானால் இப்படி அவன் நிச்சயமாக ஓடமாட்டான் . இருந்தாலும் பிசாசுக்கு இடம் கொடுக்கக் கூடாது என்று எச்சரிக்கப்படுகிறோம் (எபேசி.4:27 ) அவனால் தீமைசெய்தத் தூண்ட முடியும், ஏமாற்ற முடியும், விசுவாசிகளை தாக்கவும் முடியும் என்றாலும் அவனை தேவனுடைய வல்லமையால், கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் இரத்தத்தால் எதிர்த்து நிற்கவும் முடியும் (வெளி 12:10-11).

### 2) உலகத்தின் தோல்வி:

உலகத்தைத் தோற்கடித்தது நம்முடைய கர்த்தருடைய மேலும் ஒரு வெற்றியாகும். அவர் கூறுகிறார் திடன்கொள்ளுங்கள். நான் உலகத்தை ஜெயித்தேன் (யோ.16:33). உலகத்தை ஜெயித்தது மட்டுமல்ல அதை முழுதுமாய் ஆக்கினைக்குள்ளாகத் தீர்த்தார் (யோ.12:31 ; 1.கொரி.11:32). இதன் காரணமாகத்தான் நாம் உலகத்திலிருந்து பிரிந்தவர்களாகக் காட்டவேண்டும் (2.கொரி.6:14-17). இது கிறிஸ்தவர்கள் அல்லாதவர்களை விட்டுத் தனியாகப் பிரிந்திருப்பதைக் குறிக்காது (மத்.11:19). ஆனால் அதன் பொருள் என்னவென்றால் அசுத்தப்படுத்துபவைகளில் இருந்தும், ஒத்துப்போதல் மற்றும் சமநிலையற்ற உறவுமுறையில் இருந்து விலகுவதாகும். நாம் உலகின்மீது அன்புகூரக்கூடாது (1.யோ.2:15). விசுவாசத்தினாலே அதை ஜெயிக்கவேண்டும் (1.யோ.5:4).

### 3) மாம்சத்தின் தோல்வி:

கர்த்தராகிய இயேசு சிலுவையிலே மாம்சத்தைத் தோற்கடித்தார் (ரோ.6:6), மாம்சத்தினாலே பாவத்தை ஆக்கினைக்குள்ளாகத் தீர்த்தார் (ரோ.8:3). ஒரு காலத்தில் நாம் பாவத்திற்கு அடிமையாயிருந்தோம். இப்பொழுதோ சுயாதீனமுள்ளவர் களாயிருக்கிறோம் (ரோ.6:20-22). கிறிஸ்து இரண்டு சுகத்தை விசுவாசிகளுக்கு பாவத்தில் இருந்து தந்திருக்கிறார். அவர் நம்மைப் பாவத்தின் குற்றத்தில் இருந்தும் அதன் வல்லமையிலிருந்தும் நம்மை இரட்சித்திருக்கிறார். நாம் எதிர்க்கமுடியாத இச்சைகளுக்குள் வீழ்ந்துவிட உதவியற்றவர்களல்ல. நாம் பாவம் செய்வதற்குக் காரணமான மாம்ச இச்சைகளை மேற்கொள்ள தேவனுடைய வல்லமை நமக்கு உண்டு.

## இச்சைகளிலிருந்து வெற்றி பெற நாம் என்ன செய்யவேண்டும்?

நம்முடைய கர்த்தரால் வெற்றிகொள்வதற்கு மேற்கொள்ளப்பட்ட வழிமுறைகளை நாம் சொந்தம் பாராட்டிக்கொள்ளவேண்டும். எந்த சோதனையிலிருந்தும் தப்புவதற்கு வழியுண்டு (1.கொரி.10:13). சோதனை நேரங்களில் மாம்சத்தின் பெலவீனத்தை அறிந்து ஜெபம்பண்ணுவது நல்லது (மத்.26:41). சோதனை மேற்கொள்வதற்கு நாம் ஆவியின் வல்லமையை நாடுவது தேவையாய் இருக்கிறது. புத்தியான சில செயல்களால் சில சோதனைகளைத் தவிர்க்கலாம் (1.கொரி.7:5). சுய பலத்தில் அதிக நம்பிக்கை கொள்வது ஆபத்துக்குரிய ஒன்று, இதைக் கண்டிப்பாக விலக்கிக்கொள்ள வேண்டும் (பிலி.3:3). வேதவாக்கியங்கள் நாம் வெற்றிப்பாதையில் எப்படிச் செல்லலாம் என்று கற்றுத்தருகிறது.

### 1) எண்ணிக்கொள்ளல்:

பாவத்திற்கு மரித்து கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவுக்குள் தேவனுக்கென்று பிழைத்திருக்கிறவர்களாக எண்ணிக்கொள்ளுங்கள் (ரோ.6:11). நாம் கிறிஸ்துவோடேக் கூட சிலுவையில் மரித்திருக்கிறோம் , நம்முடைய பழைய மனிதனும் அவரோடு கூட அறையப்பட்டள்ளார் என்று நம்முடைய மனதிலே நாம் எப்பொழுதும் நினைத்து அதன் படி செயல்ப்படவேண்டும் (கொலோ.3:3). மரித்துப்போன மனிதன் பாவத்தால் ஈர்க்கப்படுவதில்லை.

### 2) ஒப்புக்கொடுத்தல்:

மரித்தோரிலிருந்து பிழைத்திருக்கிறவர்களாக தேவனுக்கு ஒப்புக்கொடுத்து, உங்கள் அவயவங்களை நீதிக்குரிய ஆயுதங்களாக தேவனுக்கு ஒப்புக்கொடுங்கள் (ரோ.6:13). நாம் நம்முடைய சரீரங்களை தேவனுக்குப் பிரியமுள்ள ஜீவபலியாக ஒப்புக்கொடுக்கவேண்டும் (ரோ.12:1). அப்பொழுது கட்டுப்பாடுள்ள வாழ்க்கையின் மூலம் ஆவிக்குரிய நதி பாயும் (யோ.7:38-39). ஆவிக்கேற்றபடி நடந்துகொள்ளுங்கள், அப்பொழுது மாம்ச இச்சையை நிறைவேற்றாதிருப்பீர்கள் (கலா.5:16).

### 3) பிசாசுக்கு எதிர்த்து நில்லுங்கள்:

பிசாசுக்கு எதிர்த்து நில்லுங்கள் என்று நமக்கு புத்திசொல்லப்படுகிறது (யாக்.4:7). நாம் ஜெபம்பண்ணவேண்டும், தேவனுடைய வார்த்தையைப் பயன்படுத்தவேண்டும் (மத். 4:1-11). நம்முடைய ஆவிக்குரிய யுத்தத்தின் வெற்றி, கிறிஸ்து நம்முடைய விரோதிமீது பெற்ற வெற்றியை சார்ந்து நிற்கிறது. நாம் அவரின் வெற்றியை உரிமை பாராட்டி சுதந்தரித்துக்கொள்ளவேண்டும்.

## தோல்வியிலிருந்து மீளும் வழி

### 1) கிறிஸ்துவின் உதவியை நாடுங்கள்:

ஒரு கிறிஸ்தவன் பாவமற்றவனாக இருந்தாலும் பாவமற்றவன் அல்லன். ஆகையால்த் தான் பரிசுத்த வேதம் கூறுகிறது, ஒருவன் பாவம் செய்வானானால் நீதிபரராயிருக்கிற இயேசு கிறிஸ்து நமக்காகப் பிதாவினிடத்தில் பரிந்துபேசுகிறவராயிருக்கிறார் (1.யோ.2:1). அடுத்த வசனம் கூறுகிறது, இயேசு கிறிஸ்து பாவத்தை நிவிர்த்தி செய்தாரென்று, எப்படியெனில் அவர் நம்முடைய எல்லாப் பாவங்களுக்காகவும், அதாவது இறந்தகால, நிகழ்கால, வருங்காலப் பாவத்திற்காக சிலுவையில் மரித்தார். இப்பொழுது இயேசு நமக்காகப் பிதாவிடம் பரிந்துபேசுபவராய் இருக்கிறார்.

### 2) தேவனிடத்தில் அறிக்கையிடுங்கள்:

தேவனோடுள்ள நம்முடைய ஐக்கியம் நாம் நம்முடைய பாவங்களை அறிக்கையிடும்பொழுது திரும்பவுமாக நிலை நிறுத்தப்படுகிறது (1.யோ.1:9). அறிக்கை என்ற சொல்லின் பொருள் பிறர் சொல்வதுபோல் சொல்வதாகும் அல்லது சம்மதிப்பதாகும். நாம் பாவங்களை அறிக்கைபண்ணும்போது தேவனோடு நாம் செய்கிறது தவறு என்று சம்மதிக்கிறோம். நாம் பாவம் செய்திருக்கிறோம் என்று கூறிவிடுவது மட்டும் போதாது. ஆனால் உண்மையாகவே என்ன பாவத்தைச் செய்தோமென்று தெளிவுபடக்கூறவேண்டும்.

### 3) தேவனுடைய மன்னிப்பை உரிமை கொண்டாடுங்கள்:

தேவனின் பரிபூரண மன்னிப்பையும், மகிமையையும் ஏற்றுக்கொள்ளுங்கள். பாவத்தை ஒப்புக்கொண்டு, அதை விட்ட பின்பு தேவனுடைய பாவமன்னிப்பை ஏற்றுக்கொள்ள தவறுவது நாம் அவரைப் பொய்யராக்குகிறோம். ஏனென்றால் அவர் பாவமன்னிப்பை இந்த வகையில் அருளியுள்ளார். பழைய பாவங்களை தொடர்ந்திருத்தல் வருங்கால இடறுதல்களுக்கு தருணம் அமைத்துத் தருகிறது.

## முடிவுரை

சோதனை என்பது கிறிஸ்தவர்களின் வாழ்க்கை உண்மையாகும். அவன் பிசாசு, உலகம், மாமிசம் ஆகிய தீமைகளைச் சந்திக்கிறான். இருந்தபோதிலும், கர்த்தராகிய இயேசு அந்தகாரத்திலிருந்து வெளிச்சத்தில் நடக்கவும், வெற்றியுள்ள வாழ்க்கை வாழவும், அதிக கனி கொடுக்கவும், மறுபடி பிறந்த வாழ்வைக் காட்டவும் நம்மை அழைத்திருக்கிறார். கிறிஸ்து சிலுவையில் நம்முடைய எதிரியைத் தோற்கடித்து, நம்முடைய இரட்சிப்பின் அதிபதியானபடியால் இதை நடைமுறைப்படுத்தியுமிருக்கிறார் (எபி.2:10). நம்முடைய அதிபதியான கிறிஸ்து வெற்றிபெற வழிநடத்த ஆவலுள்ளவராயும் நம்மூலமாக அவரைப் பற்றி அறிவின் நறுமணம் எங்கும் பரவவும் விருப்பமுள்ளவராய் இருக்கிறார் (2.கொரி.2:14). மேலும் நம்முடைய ஆவிக்குரிய யுத்தத்தைச் சந்தித்து வெற்றி பெற, கிறிஸ்து நான்கு வகையான மூல ஆதாரங்களைத் தந்துள்ளார்: நமக்குள் இருக்கிற பரிசுத்தஆவியானவர் (ரோ.8:9,11), கிறிஸ்து நமக்காகப் பரலோகத்திலே பரிந்து பேசுகிறார் (எபி.7:25), தேவனுடைய வார்த்தை நம்மைப் போஷிக்கிறது நமக்காக யுத்தம்பண்ணுகிறது, இறுதியாக ஜெபம் நமக்காகத் தேவனோடு உயிருள்ள தொடர்பை உண்டுபண்ணுகிறது (எபி.4:16).

நம்மை வெற்றி பெற நடத்துவதற்கு ஒரு அதிபதியும், மூல ஆதாரங்களும் இருந்தாலும், நாம் சத்தியத்தைப் பின்பற்றுகிறவர்களாகவும், அவற்றுக்குக் கீழ்ப்படிகிறவர்களாகவும் இருக்கவேண்டியது தேவையாக உள்ளது. இது அறிவுபூர்வமாக அறிவதன்மூலம் ஏற்படாது. இயேசுவை ஆண்டவர் என்று சொல்லியும், அவர் சொல்லுகிறபடி செய்யாமல் இருப்பது மாய்மாலத்தின் முதன்மைத் தன்மையாகும் (லூக்.6:46). கீழ்ப்படிதல் ஆவிக்குரிய உண்மைத் தன்மையின் பரிசோதனை (1.யோ.2:3-4). அவர் மீது நாம் கொண்டுள்ள அன்பின் பரிசோதனை (யோ.14:15-21). அதுவே ஆவிக்குரிய வளர்ச்சியின் வழியாகும்.

## பாடம் 7ற் கான கேள்விகள்

1) பரீட்சித்துப் பார்த்தலின் தொடக்கத்தையும், தன்மையையும், நோக்கத்தையும் (யாக்.1:2–12) சோதனையின் துவக்கத்தையும், தன்மையையும், நோக்கத்தையும் (யாக்.1:13–15) கூறி வேறுபாட்டைக் கண்டுபிடியுங்கள்.

2) கீழ்வரும் வசனங்களின் சோதனைக்கு மூல ஆதாரமாக இருப்பது எது என்றும் அவற்றின் பண்புகள் எது என்றும் அடையாளம் காண்க.
எபேசி.6:11–12
1.பேது.5:8
ரோ.12:2
2.தீமோ.4:10
1.யோ.2:15–16
மாற்.7:21–23

3) சோதனையின்மீது நாம் பெறுகின்ற இறுதி வெற்றி எதன் அடிப்படையில் உள்ளது (யோ.12:31–33; ரோ.6:6)?

4) சோதனையைப் பற்றி இரண்டு முக்கியமான பகுதி ஆதியாகமம் 3:1–6 யோசுவா 7:20–21 ஆகும். உங்களுடைய கருத்துப்படி இப் பகுதிகளின் சோதனை எங்கு முடிகிறது? பாவம் எங்கு தொடங்குகிறது? இவ்விரு நிகழ்ச்சிகளில் காணப்படுகிற வளர்ச்சி என்ன?

5) ஆதியாகமம் 3:1–6 ; மத்தேயு 4:1–11 ஆகிய வசனங்களைப் படித்து அதில் சோதனைகளிலும், அதன் விளைவுகளிலும் உள்ள வேற்றுமை ஒற்றுமை என்ன?

6) 1.கொரிந்தியர் 10:13 ஐ உங்கள் சொந்த நடையில் எழுதுக.

இந்த வசனத்தில் குறைகள் பற்றியும், வழிமுறை பற்றியும் என்ன படிக்கிறீர்கள்? நீங்கள் எப்படிச் சோதனையைத் தாங்கிக் கொள்வதற்கு மேலாக இருக்கிறது என்று கணக்கிடுவீர்கள்?

7) ரோமர் 6ம் அதிகாரத்தைப் படிக்கவும், கிறிஸ்தவன் பாவம் செய்ய வேண்டியதிருக்குமா? உங்கள் பதில் என்ன?

8) சோதனையை ஜெயிப்பதற்கு எடுக்கவேண்டிய சில முன்னெச்சரிக்கை நடவடிக்கைகள் என்ன?
சங்.119:9–11
மத்.26:41
2..தீமோ.2:22
யாக்.4:7

9) துர்இச்சைக்கு இடம் கொடுக்காமல் இருக்க என்ன செய்யவேண்டும் (ரோ.13:13–14)?

அப்போஸ்தலர் 19:19ல் நீங்கள் காண்பது என்ன? இதை உங்கள் வாழ்க்கையில் எப்படிக் கடைப்பிடிப்பீர்கள். விசுவாசிகள் இவ்வாறு செயற்பட்டதால் என்ன விளைவு ஏற்பட்டது (அப்.19:20)?

10) நாம் தோல்வி அடைகின்ற பொழுது என்ன செய்யவேண்டும் (1.யோ.1:9)? இதில் என்ன பங்கு பெறுகிறது (சங்.32:1–5)

இந்த வழிமுறை பாவம் செய்வதற்குரிய அனுமதியா (ரோ.6:1–2)?

## பாடம் 8: தேவனோடு நேரம் செலவிடுதல்

மானானது நீரோடைகளை வாஞ்சித்துக் கதறுவது போல, தேவனே என் ஆத்துமா உம்மை வாஞ்சித்துக் கதறுகிறது. என் ஆத்துமா தேவன்மேல் ஜீவனுள்ள தேவன் மேலேயே தாகமாயிருக்கிறது. நான் எப்பொழுது தேவனுடைய சந்நிதியில் வந்து நிற்பேன்? (சங்.42:1-2) தேவனே, நீர் என்னுடைய தேவன், அதிகாலமே உம்மைத் தேடுகிறேன், வறண்டதும், விடாய்த்ததும் தண்ணீரற்றதுமான நிலத்தில் என் ஆத்துமா தாகமாயிருக்கிறது என் மாம்சமானது உம்மை வாஞ்சிக்கிறது (சங்.63:1) சங்கீதக்காரன் தேவனை தியானிக்கின்றபோது தேவன்பேரில் உள்ள தாகத்தையும், அவரோடுள்ள ஐக்கியத்திற்காக அவன் ஏங்குவதை காண்கிறோம் ஜீவனும் மகிமையுமான கர்த்தரோடு தொடர்புள்ளவர்களாக இருப்பதைவிட மேலான தொடர்பு எதுவாக இருக்க முடியும்? நாம் தேவனோடு பேசுகின்ற நேரத்தைவிட மேலான உரிமை சிலாக்கியம் எதுவாக இருக்க முடியும்? இப்படியாக சொல்லப்படுகிறது, நாம் ஒருவரை நேசிப்போமேயானால் அவரோடு நேரத்தை செலவிடுவோம். நாம் கர்த்தரை நேசிக்கின்றோம் என்று கூறியும் தனிமையாக அவரோடு நேரத்தை செலவிடுவது கடினமான ஒன்றாகவே இருக்கிறது. அன்றாட வாழ்க்கையில் தேவைகள் நம்முடைய வாழ்க்கையில் அவசரமிக்கதாகவும், வாழ்க்கையை பிளிந்து விடுகிறது. அவசரத்தால் நாம் விழுங்கப்படுகிறோம், இதனால் கிறிஸ்துவில் உள்ள ஐசுவரியத்தை பிடிக்கத் தவறிவிடுகிறோம். நம்முடைய அன்றாட நடக்கையில் தேவனோடு நேரம் செலவிடல் அவசியமாயிருக்கிறது. நாம் இதை கடைப்பிடிப்போமானால், தேவன் நமக்காக காத்திருப்பார்.

### <u>நேரமும் இடமும்</u>

#### 1) எப்பொழுது நாம் தேவனோடு தொடர்பு கொள்ளவேண்டும் ?

ஆபத்து நாளில் கர்த்தர் அருகில் இருக்கிறார் (சங்.20:1 ; 46:1). நாம் நம்முடைய பிதாவை நோக்கி வேண்டுதல் செய்ய முடியாத நேரம் எதுவும் இல்லை. என்றாலும் தேவ மனிதர்கள் குறிப்பிட்ட நேரத்தை இதற்காக ஒதுக்கி வைத்தார்கள். இது காலையாகவோ, நண்பகலாகவோ அல்லது மாலையாகவோ இருக்கலாம் (சங்.55:17 ; தானி.6:10). நடு இரவில் கூட இது நடக்கலாம் (சங்.119:62). நாம் பகல்வேளையிலே அவசரமாக இருக்கும்படி தூண்டப்படுகிறோம், இரவில் நம்முடைய களைப்பு நம்முடைய பெலனை எடுத்துவிடுகிறது. நாம் ஒரு நாளை துவங்குவதற்குமுன் மனிதருடைய முகத்தை பார்ப்பதற்கு முன்னாகவே தேவனுடைய முகத்தை பார்த்திருக்கிறோம் என்பதை உறுதி செய்து நாட்களை துவங்கவேண்டும், தேவமனிதர்கள் தேவனை விடியற்காலை தேடினார்கள். கர்த்தாவே, காலையிலே என் சத்தத்தைக் கேட்டருளுவீர், காலையிலே உமக்கு நேரேவந்து ஆயத்தமாகி காத்திருப்பேன் (சங்.5:3). கர்த்தராகிய ஆண்டவர் காலைதோறும் என்னை எழுப்புகிறார், கற்றுக்கொள்கிறவர்களைப்போல, நான் கேட்கும்படி என் செவியைக் கவனிக்கச் செய்கிறார் (ஏசா.50.4 ன் பிறபகுதி) அதிகாலையிலே நான் எழுந்து சத்தமிட்டேன் (சங்.119:147). நாள் பூராவும் இஸ்ரவேல் ஜனங்களைப் போஷிக்கும்படி தேவன் அவர்களை அதிகாலையிலே மன்னாவை சேர்க்கச் சொன்னார் (யாத்.16:21). எந்த துவக்கமாக இருந்தாலும் அது தேவனோடு துவங்குவதே நல்லது.

#### 2) நாம் எங்கு அவரைச் சந்திக்கவேண்டும் ?

எங்கும் இருக்கிறார், ஆனாலும் எவ்விதமான தடங்கலும், நம் கவனத்தைத் திசை மாற செய்கின்ற இடங்களை தவிர்த்து, ஒரு இடத்தை தெரிவு செய்ய வேண்டும். நம்முடைய கர்த்தர் பூமியில் இருந்தபொழுது, இப்படிப்பட்ட இடத்தை தெரிவு செய்தார். அவர் அதிகாலையில் இருட்டோடே எழுந்து புறப்பட்டு, வனாந்திரமான ஓரிடத்திற்குப் போய், அங்கே ஜெபம் பண்ணினார் (மாற்.1:35). அவர் அடிக்கடி

தனிமையாக மலையிலே ஜெபித்தார் (மத்.14:23). நமக்கும் மலையின் உச்சியைப் போல ஓர் அறையோ அல்லது ஓர் அறையின் மூலையோ ஜெபிக்க போதுமான இடமாக இருக்கலாம். முக்கியமான தேவையாக கருதப்படுவது என்னவென்றால், நாம் தேவனோடு தனிமையாக கவனத்தோடு இருப்பதேயாகும்.

## சந்திப்பின் நோக்கம்

நாம் எதை தேடவேண்டும்? நாம் அவரை தேட விரும்ப வேண்டும். இதுவே முதன்மையான நோக்கமாகும். தேவனோடு தொடர்பு கொள்வதின் அடிப்படையான பொருள் என்னவென்றால் அவருக்குள் நாம் ஆழமாக வேர் விடுதலை குறிப்பதாகும். இந்த நேரம், மெச்சிக்கொள்ளுதல், ஐக்கியம்கொள்ளுதல், இருதயத்திற்குஉற்சாகம் ஊட்டுதல், கற்றுக்கொள்ளல் ஆகியவைகளைக் கொண்டதாக இருக்கவேண்டும். தேவனைப் பற்றி பெரும் சிந்தனையைத் தருவதால் இந்நேரம் நம்மைப் பெலப்படுத்தும், நம்முடைய வாழ்க்கையில் தேவனுடைய சித்தத்தை அறிய வழிகாட்டும். உண்மையாகவே அவரை சந்தித்து, ஆசீர்வாதத்தைப் பெறுகின்ற வரையிலும் அவருக்கு முன்பாக தங்கியிருக்க வேண்டும் (ஆதி.32:26). நாம் அவருடைய சமூகத்தில் அவசரப்பட்டவர்களாக இருக்கக்கூடாது. நம்முடைய ஆத்துமாவின் விரோதி தீவிரமாக நம்மை எதிர்த்து நம்முடைய கட்டுப்பாடான தியான வாழ்க்கைக்கு இடையூறு பண்ணுவான். அவனுக்கு தெரியும் இது வாழ்க்கைக்கு நன்மையைத் தருமென்றும், வாழ்க்கையில் தேவனை சந்திக்காத நிலை ஆவிக்குரிய ஜீவியத்தில் மந்த நிலையை உண்டுபண்ணுமென்றும்.

தேவனோடு ஜக்கியம் கொள்ளல் இரு வழிப் பயணம். நாம் தேவனுடைய வார்த்தையை தியானிக்கின்ற பொழுது, அவர் நம்மோடு பேசுகிறார். நம்முடைய கரங்களை ஜெபத்தில் உயர்த்துகின்ற பொழுது, நாம் அவரோடு பேசுகின்றோம். இரண்டுமே தேவனோடு நாம் நேரம் செலவிடுதலைக் குறிக்கும். அமைதியாக அவருக்காக காத்திருத்தல் கூட அவரின் சத்தத்தை கேட்க உதவியாக இருக்கும்.

### 1) தேவனுக்குச் செவிகொடுத்தல்

கர்த்தராகிய இயேசு சொன்னார் தேவனுடைய வாயிலிருந்து புறப்படுகின்ற ஒவ்வொரு வார்த்தையினாலும் மனிதன் பிழைப்பான் (மத்.4:4). இது உண்மையாக இருந்தால், தேவன் நம்முடைய ஆத்துமாவோடு பேச தருணம் கொடுக்கப்பட வேண்டும், எதற்கென்றால் நம்முடைய ஜீவன் அவரோடும், அவரின் சித்தத்தோடும், அவரின் வழியோடும் பற்றிக்கொண்டதாக இருப்பதற்கு, நாம் ஒழுங்கற்ற வேதவசன தியானத்தை தவிர்த்து, ஒழுங்காக தொடர்ந்து அதிகாரங்களாகவும், புஸ்தகமாகவும் வேதத்தை வாசிக்க வேண்டும். நாம் நிதானமாக கருத்தூன்றி, கவனமாக வாசிக்க வேண்டும். தேவன் நம்மோடு சில வசனங்களை கொண்டு பேசும்போது அதையே தியானித்து நேரத்தை செலவிடல் நல்லது (சங்.119:15,23,48,78,97) இரண்டோ அதற்கு மேலோ ஒரு பகுதியை சமயம் கிடைக்கின்றபோது படிப்பது, நம்முடைய மனதில் அப்பகுதியை பதிய வைக்கஉதவும். இது இப்பகுதியை பற்றி ஏராளமான கேள்விகளை எழுப்ப நம்மை ஆயத்தப்படுத்தும், இப்பகுதி என்ன சொல்கிறது? இப்பகுதியின் அர்த்தம் என்ன? புரியாத கடினமான சொற்களின் பொருளை பார்த்து தெரிந்த கொள்க. இப்பகுதி என்னுடைய வாழ்க்கைக்கு எப்படி பொருந்தும்? நம்முடைய வாழ்க்கை கிறிஸ்துவின் சிந்தனையோடு ஒத்து இருக்க வேண்டும் என்று தேவன் நம் வாழ்க்கையின் நோக்கமாக கொண்டுள்ளார் என்பதை எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும் (ரோ.8:29).

தினந்தோறும் உள்ள தியானத்தில் அடங்கியுள்ள நான்கு முக்கிய நோக்கத்தை பற்றி ஸ்டீபன் ஒல்போர்ட் கூறுகிறார். ஆவிக்குரிய ஆரோக்கியம் (1பேது.2:3). கறைபடிந்த உலகத்தில் ஆவிக்குரிய சுத்திகரிப்பு (சங்.119:9 ; யோ.15:3; 17:17) ஆவிக்குரிய ஆலோசனை (2 தீமோ.3:16,17 ; சங்.73:24) ஆவிக்குரிய போராட்டம் (எபே.6:17) தினந்தோறும் தேவன் நம்மோடு பேசின வசனத்தை ஒரு சிறிய நோட்டு புத்தகத்தில் திகதி, வேத வசனப் பகுதி, முக்கிய வசனம் ஆகியவற்றை

குறித்து வைப்பது நாம் வசனத்தை கிரகித்து வைத்திருப்பதற்கும், வாழ்க்கையில் அவற்றை கடைப்பிடிப்பதற்கும் பயனுள்ளதாக இருக்கும். தேவன் காட்டுவதற்கெல்லாம் கீழ்ப்படிவதற்கு ஆயத்தமாக இருக்கிறவர்களுக்கு அவர் அவர்களுடைய கண்களை திறக்கிறார் (சங்.119:18).

## 2) தேவனோடு பேசுதல்

விசுவாசத்தால் ஜெபமானது தேவனோடு உத்தமத்தோடும், எளிமையாகவும் பேச அவருக்கருகில் நம்மை அழைத்து செல்கிறது. ஒருபோதும் ஜெபம் ஒருமுறை கூறியதை திரும்பத்திரும்ப கூறுவதோ அல்லது ஒரே மாதிரியான ஒன்றோ அல்ல (மத்.6:7). நம்முடைய வார்த்தைகள் சுத்தமாகவும், தேவனுக்கு முன்பாக உண்மை உள்ளதாயும், உத்தமமாயும் இருக்க வேண்டும். தேவனை துதித்து அவரின் மேன்மைகளை கூறி புகழ்ந்து ஜெபத்தை துவங்குவது மிக நன்று. இதற்கு நாம் தேவனுடைய பெயர்களை கற்றுக்கொள்வது தேவையாயிருக்கிறது. ஏராளமான அவரின் ஆசீர்வாதங்களுக்காக நன்றி தெரிவிக்கலாம், அவைகள் ஆவிக்குரிய மற்றும் இவ்வுலக ஆசீர்வாதங்களாக இருக்கலாம். பிறருக்காக வேண்டுதல் செய்யலாம். இங்குதான் ஜெபக்குறிப்புக்களை அன்றாடம் எழுதி வைத்துக்கொள்வது அவசியமாயிருக்கிறது. எல்லா ஜெபக்குறிப்புகளுக்காகவும் ஒரே நாளில் ஜெபிக்க வேண்டுமென்று அல்ல, ஸ்டீபன் ஒல்போர்ட் ஒரு மாதிரியை தருகிறார் எப்படியென்றால் ஒரு வாரத்தில் உள்ள ஏழு நாட்களின் முதல் எழுத்தை அடிப்படையாகக் கொண்டு ஜெப குறிப்புகளுக்காக ஜெபித்தல்.

**திங்கள்:** ஊழியர்களுக்காக,

**செவ்வாய்:** ஜெபத்திற்கு பதில் அளித்ததற்கும், ஆசீர்வாதங்களுக்கும் நன்றியை ஏறெடுத்தல்,

**புதன்:** ஸ்தல மற்றும் உலகளாவிய ஊழியர்களுக்காக வேண்டுதல் செய்தல்,

**வியாழன்:** ஊழியத்தில் காணப்படுகின்ற வேலைகளுக்காக ஜெபித்தல்,

**வெள்ளி:** குடும்பத்திற்காக ஜெபித்தல்,

**சனி:** விசுவாசிகள் தேவைக்காக வேண்டுதல் செய்தல்,

**ஞாயிறு:** பாவிகளுக்காகவும் அல்லது இரட்சிக்கப்படவேண்டியவர்களுக்காகவும் ஜெபித்தல்.

இறுதியாக நம்முடைய தனிப்பட்ட தேவைகளுக்காக அவைகள் சிறியதாகவோ அல்லது பெரியதாகவோ இருந்தாலும் அவற்றிற்காக நாம் வேண்டுதல் செய்யவேண்டும். (பிலி.4:6-7).

## <u>ஞாபகத்தில் காத்துக்கொள்ள வேண்டிய குறிப்புகள்</u>

1) ஒழுங்கான நேரமும், இடமும் தேவை. நேரத்தை குறித்துக்கொண்டு அதை பின்பற்றுங்கள். பிறரை தொந்தரவு செய்யாமல் வாய்திறந்து ஜெபிக்கவும், முதலில் குறைந்த நேரத்தோடு துவங்கி (20 நிமிடங்கள்) பின்பு படிப்படியாக ஜெபநேரத்தை கூட்டவும்.

2)பரிசுத்த வேதாகமம், கையேடு, பேனா மற்றும் தியான கையேடு தேவையான ஒன்று. வேதத்தை முறைப்படி ஒழுங்காகவும், சிரமமாகவும் படிப்பதற்குத் திட்டமிடவேண்டும்.

3) படுக்கைக்கு முன்கூட்டியே செல்லவும், சரியான நேரத்திற்கு துயிலெழும்பவும், எழும்பி உடலை சுத்தம் செய்து, கர்த்தரோடு பேச கவனமாயிருக்கவும்.

4) தேவன் உன்னிடத்தில் பேசவும் மேலும் அவரின் சமூகத்தை வெளிப்படுத்தவும் வேண்டுதல் செய்யவும்.

5) விசுவாசித்து கர்த்தருக்கு செவிகொடுத்து காத்திருக்கவும், மனது அங்கும் இங்கும் ஓடாதவண்ணம் கட்டுப்படுத்தவும், தேவனை நினைக்கவும், நமக்குரியதை நினைக்கக் கூடாது.

6) தேவ சமூகத்தில் அவசரம் வேண்டாம் வேதத்திலிருந்து வாசித்ததை தியானிக்கவும். ஜெபத்தில் இடைவெளிகொடுத்து, தேவனை கவனிக்கவும்.

7) தியான கையேட்டில் புதிய சிந்தையை எழுதி வைக்கவும், மேலும் படிப்பதற்கு உரியவைகளை எழுதிக்கொள்ளவும், ஜெபக்குறிப்புகளையும் எழுதிக்கொள்ளவும், உங்கள் புதிய சிந்தையை நண்பரோடோ அல்லது பங்காளர் உடனோ பகிர்ந்துகொள்ள திட்டமிடவும்.

ஒல்போர்ட் கூறுகிறார் தேவனோடு உள்ள நேரம் வாழ்க்கையில் ஆவிக்குரிய தன்மையை தாங்கி நிற்பதற்கு மிக அவசியமாகும். இது கிறிஸ்தவ ஜீவியத்தின் அளவுகோல் ஆகும். நாங்கள் உங்களை ஒன்று கேட்கட்டுமா! ஒவ்வொரு நாளும் தேவனை சந்திப்பதற்கு நேரம் ஒதுக்கி உள்ளீர்களா? அதை உண்மையாகவே கடைப்பிடித்திருக்கிறீர்களா? தேவனோடு நேரம் செலவிடாமல் வெற்றி உள்ள ஆவிக்குரிய வாழ்க்கை வாழ முடியுமா?

## <u>பாடம் 8 ந் கான கேள்விகள்</u>

*1) சங்கீதம் 42:1−2ல் கிறிஸ்தவ வாழ்க்கையில் எது முதன்மைத் தன்மை பெறுவதாக சுட்டிக்காட்டப்பட்டுள்ளது?*

*கர்த்தரோடு உள்ள உறவு வளர இது ஏன் தேவையாயிருக்கிறது?*

*2) நாம் ஏன் தேவனோடு ஒழுங்காக நேரம் செலவிடவேண்டியது அவசியமாயிருக்கிறது?*
*யோவன் 15:3*
*1 பேது.2:2*
*ரோ. 12:1*
*1.சாமு.1:19 முற்பகுதி*
*சங்.143:8*

*3) லூக்கா10:38−42ல் மரியாளின் செயலை விளக்குக. இயேசு அவளுடைய செயலைக் குறித்து என்ன கூறினார்?*

மார்த்தாளின் மனநிலையையும், செயலையும் விளக்குக.

எப்படி மார்த்தாளின் மதிப்பு குறைந்தது?

சேவைக்கு முன்பாக எது இருக்க வேண்டும்? (லூக்.5:15−16).

4) நாம் தேவனோடு ஐக்கியம் கொள்ளுதலை விட, சேவைகளையும், செயல்களையும் மதிப்பதாக கருதுகிற சில வழிமுறைகள் என்ன?

உம்முடைய வாழ்க்கையில் சேவையும் செயலும் முக்கியமாகக் காணப்பட்டால் நீர் என்ன செய்ய வேண்டும்?

5) இயேசுவின் பாதத்தில் ஒழுங்காக இருப்பதற்கு உரிய சில நல்ல நேரங்கள் என்னென்ன (தானி.6:10; சங்.119:147−148)

ஒரு நாளில் வித்தியாசமான நேரங்களில் தேவனைத் தேடுவதால் உள்ள பயன் என்ன (சங்.1:2ஐ ஒப்பிடுக.)

6) இஸ்ரவேல் ஜனங்கள் வனாந்தரத்தில் அலைந்து திரிந்தபொழுது தேவன் மன்னாவை ஆகாரமாகக் கொடுத்தார். பரத்திலுள்ள அப்பம் அதை எப்பொழுது சேகரிக்கவேண்டும்? காலதாமதமாக அவற்றைச் சேகரித்தால் என்ன நடக்கும் (யாத்.16:21)? இப் பகுதியிலிருந்து தேவனோடு ஒழுங்காக நேரத்தைச் செலவிடுதல் குறித்து என்ன அறிகிறீர்கள்?

இயேசு பிதாவோடு நேரத்தை கழிக்க எங்கு சென்றார் (மாற்.1:33–35)?

ஏன் அவர் விடியற்காலையைத் தனிமையோடு தேவனோடு கழிக்கத் தெரிந்துகொண்டார்?

7) தேவனோடு தனிமையாக இருக்கும்போது என்னென்ன காரியங்கள் செய்யமுடியும்?
சங்.5:3
ஏசா.50:4 பிற்பகுதி

8) தேவனோடு தனிமையிலேலே நேரத்தைச் செலவழிக்க ஏற்படுகின்ற சில தடைகள் என்ன?
நீதி.6:9
சங்.66:18
லூக்.10:41

உங்கள் வாழ்க்கையில் இவைகளை எப்படி மேற்கொள்வீர்கள்?

9) சங்கீதம் 63:1ஐ சொந்த நடையில் எழுதுக.

எவ்வாறு இவ் வசனம் நாம் தேவனை அறிந்து கொள்ளவேண்டும் என்கிற ஆவலை வெளிப்படுத்துகிறது?

10) தினந்தோறும் தனிமையிலேயே தேவனோடு ஐக்கியம் கொள்கிறீர்களா?

ஒவ்வொரு நாளும் எவ்வளவு நேரம் தேவனோடு செலவு செய்ய வேண்டும் என்று விரும்புகிறீர்கள்?

ஒவ்வொரு நாளும் தேவனைச் சந்திப்பதற்கு ஏற்றநேரம் எது?

தேவனுடைய ஒத்தாசையால் குறைந்தது நான் _____________நேரத்தை அவரோடு தனிமையில்____________ லிருந்து ____________ வரை செலவழிக்கிறேன். (நேரத்தைக் குறிப்பிவும்).

கையொப்பம்

___________________________

## பாடம் 9: தேவனுடைய வார்த்தையை உட்கொள்ளல் (புசித்தல்)

மனுஷன் அப்பத்தினால் மாத்திரமல்ல, தேவனுடைய வாயிலிருந்து புறப்படுகின்ற ஒவ்வொரு வார்த்தையினாலும் பிழைப்பான் (மத்.4:4) உபாகமம் 8:3 லிருந்து எடுக்கப்பட்ட கூற்று இதுவாகும். இப்பாடம் தேவன் தன்னுடைய ஜனங்களுக்கு கொடுக்கிற ஆகாரத்தைப் பற்றி கூறுகிறது.

தேவன் பூமிக்குரிய ஆகாரத்தைவிட மனிதனுக்கு மேலானதை அளித்திருக்கிறார். அவர் நமக்கு வேதவாக்கியங்களை அளித்திருக்கிறார். தேவனுடைய வார்த்தைகள் முழுதும் வேதபுஸ்தகமாக நம்மிடம் உள்ளது (2தீமோ.3:16; 2.பேது.1:19-21). பழைய ஏற்பாட்டிலிருந்து இயேசு ஒழுங்காக வசனங்களை எடுத்துக்கூறினார், அவைகளின் நிறைவேறுதலே புதிய ஏற்பாடாக இருக்கிறது. வேத புத்தகத்தில் தான் கர்த்தர் சொல்லுகிறார் என்ற பதம் அனேகமுறை தொடர்வாக கூறப்பட்டுள்ளது. தேவனுடைய வார்த்தை ஜீவனும் வல்லமையும் உள்ளது (எபி.4:12) என்றென்றைக்கும் நிற்கிறது, ஜீவனுள்ளதுமாயிருக் கிறது (1பேது.1:23). இதன் மகிமை குறித்து 119ம் சங்கீதத்தில் பாடப்பட்டுள்ளது. வேதப்புத்தகம் தேவன் மனிதனோடு தொடர்பு கொள்வதற்கு இருப்பதாகவும், மனிதனின் அதிகாரியும், அவனை படைத்தவருடைய போதனைகள் அடங்கிய ஏடாக இருப்பதாலும், நாம் இந்த உலகத்தில் வாழும் ஒவ்வொருநாளும் கவனமாக பயன்படுத்த வேண்டியது இவ்வேத புத்தகமாகும். தொடர்ந்து நாம் வேத புத்தகத்திற்கு கொடுக்க வேண்டிய கவனத்தைப் பற்றியும், கீழ்ப்படிதலைப் பற்றியும் தெளிவாக அதே வேதபுத்தகத்தில் கட்டளையாகக் கொடுக்கப்பட்டுள்ளது(உபா.6:6-9).

## வேத புத்தகத்தில் உள்ள பயன்கள்

பயபக்தியோடும், கீழ்ப்படிதலோடும் வேத வசனத்தை படிப்பவர்களின் வாழ்க்கையை தேவனுடைய வசனமானது மாற்றி அமைத்துள்ளது என்பதற்கு எண்ணற்ற நிகழ்ச்சிகள் சான்றாக உள்ளது. எந்தெந்த வழிகளில் இவ்விலைமதிப்பற்ற புத்தகத்தை உண்மையிலே படிப்பவர்களின் வாழ்க்கை பயன் அடைகிறது என்பதைப் பார்ப்போம்.

### 1) இரட்சிப்பு

தேவனுடைய வார்த்தையால் மறுபிறப்பு நிகழ்கிறது (1பேது.1:23) மனதிலே தேவனுடைய வசனமானது நடப்படும் பொழுது கிறிஸ்து இயேசுவில் உள்ள விசுவாசத்தின் மூலமாக நமக்கு இரட்சிப்பு கிடைக்கிறது (2.தீமோ.3:15). தேவனுடைய வார்த்தையை விசுவாசித்து, பிறரோடு பகிர்ந்து கொள்ளவேண்டும்.

### 2) ஆவிக்குரிய ஆகாரம்

தீர்க்கதரிசி தேவனுடைய வார்த்தையை உட்கொள்ளுதலைப் பற்றி கூறுகிறார். இதன் பொருள் என்னவென்றால் ஆத்துமாவிலே தேவனுடைய வார்த்தையை ஏற்றுக் கொள்ளுதலாகும் (எரே.15:16). இது பாலுக்கும் (1பேது.2:3) தேனுக்கும் (சங்.19:10,119:103) ஒப்புமையாகக் கூறப்பட்டுள்ளது. பலமான ஆகாரமாகவும் தேவனுடைய வார்த்தை இருக்கிறது (எபி.5:12,14).

### 3) வளர்சி

ஆத்துமாவிற்கு தேவனுடைய வசனத்தைக் கொடுக்கின்றபொழுது, நம்மை அவ்வசனமானது பரிசுத்த விசுவாசத்தில் கட்டி எழுப்புகிறது (அப்.20:32) ஆவிக்குரிய முன்னேற்றத்திற்கு வசனமாகிய ஆகாரம் தேவையாயிருக்கிறது (1.பேது.2:3).

### 4) ஞானம்

எங்கும் கல்வியினுடைய மதிப்பு உயர்வாகவே இருக்கிறது, கல்வி மூலம் ஜனங்கள் ஞானத்தை சம்பாதிக்கலாம் என நம்புகின்றனர். இருந்தாலும் வேதவாக்கியமே நம்மை

நம்முடைய சத்துருவை விடவும் ஞானமுள்ளவனாக்குகிறது, உலகப்பிரகாரமான ஆசிரியர்களைவிடவும் அறிவை நமக்கு தருகிறது (சங்.119:98-100).

### 5) சுத்திகரிக்கிறது

உலகம் முழுவதும் ஒழுக்க சீர்கேடுகளால் நிறைந்துள்ளது, மனதையும், இருதயத்தையும் சுத்தப்படுத்துகிற மிக பெரிய சுத்திகரிப்பானது வசனமாகவே இருக்கிறது (சங்.119:9 ; யோ.15:3) பாவம் செய்யாமையிலிருந்து நம்மை பாதுகாப்பதும் வசனமே (சங்.119:11).

### 6) ஆறுதல் அல்லது உற்சாகம்

ஆறுதல் அல்லது உற்சாகத்தை நம்முடைய கஷ்டமான மற்றும் கவலைகள் நிறைந்த நேரங்களில் நமக்கு தருகிறது (சங்.119:28, 50, 76 ; ரோ.15:4).

### 7) வழிகாட்டி

எதை செய்வதென்றும், எங்கே திருப்புவது என்பதும் ஒரு பெரும் பிரச்சனையாக இருக்கிறது. வசனம் நம்முடைய பாதைக்கு தீபமாக இருக்கிறது (சங்.119:105).

### 8) சந்தோஷம்

வசனம் கவலை நிறைந்த இந்த உலகத்தில் சந்தோஷம் தரக்கூடியதாக இருக்கிறது. (யோ.15:11).

### 9) ஆசீர்வாதம்

தேவனுடைய வசனத்திற்கு கீழ்ப்படிந்து கவனமாயிருப்பவர்களுக்கு ஆசீர்வாதங்கள் உண்டென்று வேதவாக்கியங்களில் தெளிவாக கூறப்பட்டுள்ளது (உபா.28:1-8). தேவனுடைய பார்வையில் வெற்றி என்பது வசனத்தில் தொடர்ந்து நின்று அதை கைக்கொள்ளுவதின் அடிப்படையில்த்தான் உள்ளது (யோசு.1:8).

## பலவிதங்களில் தேவனுடைய வார்த்தையை உட்கொள்ளுதல்

பலவிதமான விதத்தில் வசனங்கள் மூலமாக சரியான ஆகாரம் நமக்கு கிடைக்கிறது. தேவனிடத்தில் நம்முடைய கண்களை திறக்க விண்ணப்பம் செய்கின்றபொழுதும் (சங்.119:18) பரிசுத்தஆவியானவர் தெய்வீக போதகராக இருக்கும்பொழுதும் (யோ.14:26) தேவனுடைய அப்பத்தை நம்முடைய உள்ளான மனிதனுக்குள் உட்கொள்ள முடிகிறது. வளர்ந்து வருகின்ற விசுவாசி பின்வருகின்ற முறைகளில் செயல்படுகிறார்.

### 1) கேட்டல்

வேதத்தைக் கேட்கவேண்டும் (நீதி.28:9 ; லூக்.19:48) வேத புத்தகம் எளிதாக கிடைப்பதற்கு முன்பும், அச்சு இயந்திரங்களைக் கண்டுபிடிப்பதற்கு முன்பும், ஏராளமான ஜனங்களுக்கு வேதவசனங்களை சபை ஆராதனைகளில் மட்டுமே கேட்டமுடிந்தது. தேவனுடைய வசனம் பிரகடனப்படுத்தும் பொழுது அவற்றை உன்னிப்பாக கவனிப்பதற்கு நம்மைப் பக்குவப்படுத்திக் கொள்ளவேண்டும். என்ன சொல்லப்படுகிறது என்பதை நாம் கவனமாக சிந்திக்கவேண்டும். குறிப்புகள் எடுப்பதன் மூலமும், எடுக்கப்பட்ட குறிப்புகளை ஒப்பிட்டு பார்ப்பதன் மூலமும், பிறரோடு அதைப்பற்றி விவாதிப்பதன் மூலமும் நாம் கேட்டவைகளை நினைவில் வைத்துக் கொள்ளமுடியும்.

### 2) வாசித்தல்

வேதத்தை வாசிக்கவேண்டும் (உபா.17:19-20 ; வெளி.1:3) வேதத்தை வாசிப்பதற்கு திட்டமிட்ட ஒழுங்கை வரையறுத்துக் கொள்ளவேண்டும், ஒவ்வொரு நாளும் குறிப்பிட்ட

அளவோடு ஒழுங்காக வாசிக்கவேண்டும். இப்படி செய்வதால் வேதபுத்தகத்தின் முழு மைய கருத்தையும் அறிய முடியும். பழைய ஏற்பாடு, மற்றும் புதிய ஏற்பாடு இரண்டையும் தெளிவுற அறிந்திருக்கவேண்டும்.

### 3) படித்தல் அல்லது ஆராய்தல்

வேத வாக்கியங்களை ஆராய்ந்து பார்க்கவேண்டும் (அப்..17:11 ; நீதி.2:1-5) ஒரு பகுதியை வாசிப்பதை விடவும் இது முக்கியமானதாக இருக்கிறது. படித்தல் அல்லது ஆராய்தல், ஆழமாக தோண்டுதலைக் குறிக்கிறது. முக்கியமான கருத்துக்களை குறிப்பெடுத்துக் கொள்ளவும், அக்கருத்துக்களைப் பற்றி கேள்விகளை எழுப்பவோ அல்லது பிறரோடு பகிர்ந்து கொள்ளவோ வேண்டும். படிக்கின்ற ஒவ்வொன்றையும் வாழ்க்கையிலே கடைப்பிடிக்கவேண்டும். அதுவே சக்தி வாய்ந்த வேத ஆராய்சி ஆகும்.

### 4) இருதயத்தில் பதிய வைத்தல் அல்லது மனப்பாடம் செய்தல்

வேத வசனத்தை இருதயத்தில் பதித்து வைத்திருக்கவேண்டும் (உபா.6:6-7 ; சங்.37:31 ; நீதி.7:1-3). நம்முடைய இருதயத்திலே தேவனுடைய வசனத்தை மறைத்து வைப்பதற்கு நிச்சயமான ஒரே வழி, அவற்றை இருதயத்திலே மனப்பாடமாக பதிய வைத்தலேயாகும். நாம் கேட்பதிலேயும், வாசிப்பதிலேயும் பெரும்பாலானவற்றை மறந்து விடுவோம். ஆனால் மனப்பாடம் செய்தவற்றையோ 100 வீதம் ஞாபகத்தில் பாதுகாப்பாக வைத்துக் கொள்ளமுடியும். முக்கியமான ஒரு வசனத்தை நம்முடைய ஆத்துமாவுக்காக மனதில் திரும்ப கொண்டுவரவேண்டிய தேவையிருந்தாலோ, பிறரோடு பகிர்ந்து கொள்ள வேண்டியிருந்தாலோ, மனப்பாடம் செய்து கொள்ளப்பட்ட வசனம் மிகவும் பயனுள்ளதாக இருக்கும். கர்த்தராகிய இயேசு சோதனையை மேற்கொள்வதற்குத் தன் இருதயத்தில் பதித்து வைத்திருந்த வசனங்களை பயன்படுத்தினார் (மத்.4:1-11) வசனங்களை மனப்பாடம் செய்வதற்கு, முக்கியமான வேதவசனங்களடங்கிய சிறிய அட்டைகள் ஏராளமாக இப்பொழுது கிடைக்கிறது.

### 5) தியானித்தல்

வேத வசனங்களைத் தியானிக்கவேண்டும் (சங்.119:15,23,48,78,148 ; பிலி.4:8) தியானித்தல் என்பது நன்கு ஆலோசித்து, ஆழமாக சிந்தித்து, பின்பு சிந்தித்ததை பற்றி தனக்குள்ளே அமைதியாகவோ, சத்தமாகவோ அளவளாவுவதைக் குறிக்கும். தியானநேரமே சில சத்தியங்களைப் பற்றியும் தேவனுடைய ஆள்தத்துவத்தைப் பற்றியும் பிரதிபலிப்பு ஏற்படுகிற நேரம். பசுவானது அமைதியாக ஓய்வு நேரத்தில் தான் உட்கொண்ட உணவை அசை போடுகிறது போல தியான நேரமும் இருக்கிறது. நம்முடைய காலை வேத ஆராட்சியில் குறிப்பிட்ட சில வசனங்கள் நம்முடைய இருதயத்தில் பேசினது என்ற உணர்வு உள்ளத்தில் ஏற்படுகின்றபொழுது தியானித்தல் ஆரம்பமாகிறது. தியானித்ததின் பயனால் கிடைத்தஅரும் கருத்துகளைக் குறித்து கொள்ளவும். பின்பு பிறரோடு பகிர்ந்து கொள்ளவும் வேண்டும்.

பயனுள்ள உட்கொள்ளல், நாம் என்ன மனநிலையில் வசனத்தை அணுகுகிறோம் என்பதின் அடிப்படையில் தான் உள்ளது. அர்ப்பணிப்போடு வசனத்தைப் படிக்கிற மாணவன் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவுக்கும் அவரின் வார்த்தையை ஒழுங்காக படிப்பதற்கும், படித்த வசனங்களை அனுதின வாழ்க்கையில் கைக்கொள்வதற்கும், ஒப்புக்கொடுக்கிறான். உறுதியான, சீரான படிப்பே வளர்ச்சியை தரும் அல்லாமல் உறுதியற்ற ஒழுங்கற்ற முறைகள் அல்ல. வசனத்தை உட்கொள்ளல் தேவனோடு ஆவிக்குரிய பரிமாற்றத்தை ஏற்படுத்துவதாக இருக்கிறது.

## <u>வேதஆராட்சி முறை</u>

வேதாகமத்தில், வேதபுத்தகத்தை எப்படி படிக்கவேண்டும் என்று தனிப்பட்ட எம்முறையும் கூறப்படவில்லை என்றாலும், வசனத்தோடு விசுவாசிக்கு உள்ள பலமான

தொடர்பின் அடிப்படையில் பின்வரும் முறைகள் பயன்படுத்தப்படுகிறது. தினந்தோறும் குறிப்பிட்ட நேரத்தை ஒதுக்கிவைத்தல், எவ்வித இடஞ்சலும், கவனத்தை திசைதிருப்பாத ஓர் இடம். தொடர்ந்து வேதாகமம் முழுவதும் படிப்பதற்கு ஒரு செயல்த்திட்டம். கிறிஸ்துவோடு இணங்கி நடப்பது என்ற நோக்கத்தை வரையறுத்துக் கொள்ளல். இவை நான்கும் வேதபுத்தகத்தை படிக்க அடிப்படையான அம்சங்கள்.

கிறிஸ்துவுக்கு கீழ்ப்படிதல், கற்றுக்கொள்வதற்கு ஆர்வமாக இருத்தல், கிரமமாக வசனத்தைப் படித்தல் ஆகியவை எவ்வித சிறப்பு போதனைகளும் இன்றி நற்பலன் அளிக்கக் கூடியதாக இருக்கிறது. நாம் வசனத்தை அணுகுகின்ற பொழுது பின்வருகின்ற மூன்று கேள்விகளை பயன்படுத்துதல் பயன் உள்ளதாக இருக்கும்.

## 1) வசனம் என்ன சொல்கிறது?

ஒரு பகுதியில் கூறப்பட்டுள்ளவைகளைக் கவனமாகக் கவனியுங்கள். அப் பகுதியின் தன்மை, கூறப்பட்டுள்ள விளக்கங்கள், செயல்கள் மற்றும் விலியுறுக்கப்பட்டுள்ள போதனைகளைக் குறித்துக்கொள்ள வேண்டும். முக்கியமான வார்த்தையை வசனத்திலேயே அடிக்குறியிட்டுத் தனியாக ஒரு காகிதத்தில் அதைப் பற்றிக் குறிப்பு எழுதிக்கொள்ளவும். அதிகமாய் நேரம் எடுத்து, மனதை ஒருமுகப்படுத்தி இவைகளைச் செய்யவேண்டும்.

## 2) பொருள் என்ன?

படித்த பகுதியைச் சரியான முறையில் விளக்கவேண்டுமென்றால், அதன் பொருளை அறிந்திருக்கவேண்டும். வார்த்தையின் விளக்கத்தை நிச்சயமாக உறுதி செய்துகொள்ளவேண்டும். சந்தேகம் எழும்பும்பொழுது அவற்றைச் சோதித்துக்கொள்ளவேண்டும். ஏன் இந் நிகழ்ச்சி வேதபுத்தகத்தில் சேர்க்கப்பட்டுள்ளது என வினா எழுப்பவும். வார்த்தைகளிலோ அல்லது செயல்களிலோ ஏற்படுகின்ற விளைவுகளை குறித்துக்கொள்ளவும். இதில் தேவனுடைய மனநிலை என்ன? என்ன உபதேசம் கூறப்பட்டுள்ளது? விசுவாசியின் வாழ்க்கையில் இவ் உபதேசத்தின் முக்கியத்துவம் என்ன? இப் பகுதியின் முற்பகுதியில் என்ன கூறப்பட்டுள்ளது, அதேபோல் பிற்பகுதியில் என்ன கூறப்பட்டுள்ளது? இது சந்தர்ப்பம் என அழைக்கப்படுகின்றது. சந்தர்ப்பத்திற்கு புறம்பான முறையில் நாம் எதையும் இடையில் புகுத்துவதற்கு விரும்பக்கூடாது. புரியாத ஒன்றிற்காக நீங்கள் நேரத்தைச் செலவழிக்கத் தேவையில்லை. தேவைப்பட்டால் வருங்காலப் படிப்பிற்காக குறிப்புகளை எடுத்துக்கொள்ளலாம். தெளிவாகப் புரிந்துகொண்ட விசயத்தில் கவனத்தைச் செலுத்தல் நல்லது.

## 3) எப்படி என் வாழ்க்கையில் செயல்படுத்துவேன்?

இக் கேள்வி உங்கள் தனிப்பட்ட வாழ்க்கையில் வசனத்தை ஏற்றுக்கொண்டு அதைக் கடைப்பிடிப்பதை வலியுறுத்துகிற ஒன்றாக இருக்கிறது அல்லது தேவனை அறிகிற அறிவிலே உள்ள வளர்ச்சியின் அளவைக் குறிக்கிறது. கற்றறிந்ததை வாழ்க்கையில் கடைப்பிடிக்கும்பொழுதுதான் பயன் உள்ளதாக இருக்கிறது. அதுமட்டுமல்ல கற்றதைக் குறித்து உங்கள் நோக்கத்தையும் வெளிக்கொணர்வதாக இருக்கிறது. வேதஆராட்சியானது நம்மை மாற்றுவதற்கும் கிறிஸ்துவோடு நம்முடைய செயல்களை ஒப்புமையாக இருப்பதற்கும் தேவனை முழுவதுமாக அறிந்து அவரைப் புகழ்வதையுமே நோக்கமாகக் கொண்டது. தனிப்பட்ட வாழ்க்கையில் கடைப்பிடிக்காத எந்தக் கருத்துகளும் வேதாகமத்தின் நோக்கத்தைத் தவறான முறையில் பயன்படுத்துவதற்குச் சமமாக இருக்கிறது. வாக்குத்தத்தங்கள், எச்சரிக்கைகள், கட்டளைகள், எடுத்துக்காட்டுகள், பாவங்கள், உற்சாகமூட்டுதல் அல்லது

தேவனுடைய குணங்களைப் பற்றிய சத்தியங்களைப் பாருங்கள். படிக்கும்பொழுது தேவன் தன்னுடைய வசனத்தின் மூலம் உங்களோடு பேசும்படியாக வேண்டிக்கொள்ளுங்கள். தேவை ஏற்படும்பொழுது தேவனிடத்தில் காத்திருங்கள். அவருடைய சமூகத்திலே இருக்கும்பொழுது அவசரப்படவேண்டாம். வருங்காலத்தில்

பயன் உள்ளதாக இருப்பதற்காக தினந்தோறும் கற்றுக்கொண்டதைக் குறிப்பு எடுத்துப் பத்திரப்படுத்திக்கொள்ளவும். நீங்கள் படித்ததிலிருந்து வேதவாக்கியங்களைப் பற்றிய பலவீனமான அல்லது எந்தநபரையும் சாராத கருத்துக்களை நீக்கிவிடவும். நீங்கள் தவிர்க்கிறவர்களாக இருக்கவேண்டாம். நீங்கள் தேவனுடைய பாதத்திலிருந்து கற்றுக்கொள்ளவிரும்பினால் அவர் உங்கள் ஆசிரியராக இருக்கவிரும்புகிறார்.

## வேத ஆராட்சிசெய்ய பயன்படும் உபகரணங்கள்

தற்காலத்தில் வேதபுத்தகத்தைச் சரியான முறையில் படிப்பதற்கு ஏராளமான உபகரணங்கள் உள்ளது. ஆவியானவர் நமக்கு வழிகாட்டியாக இருக்கும்பொழுது வேதபுத்தகம் மட்டுமே போதுமானதாக இருக்கிறது. ஆனாலும் உபகரணங்கள் மூலம் பயன்பெறமுடியும். இங்கு சில உபகரணங்களைப் பார்ப்போம்.

### 1) அடிப்படை மொழிபெயர்ப்புக்கள்

வேதம் என்ன கூறுகிறது என்பதைச் சரியான முறையில் புரிந்துகொள்ளத் தீர்மானம் உடையவர்களாய் இருக்கவேண்டும். ஆங்கில மொழி தெரிந்த ஏராளமானோர் King James Version (KJV) யை விரும்புகின்றனர். பிற்காலத்தில் வழக்கிலில்லாத சொற்கள் நீக்கப்பட்டு New King James (NKJV) மொழிபெயர்ப்பு வந்திருக்கிறது. பிறர் New American Standard Bible (NASB) , New Internatoinal Version (NIV) , New English Bible (NEB) விரும்புகின்றனர். இது போன்ற பிறமொழிபெயர்ப்புகளும் அதிகமாக இப்பொழுது கிடைக்கிறது. குறிப்புகள், ஒப்பீட்டு வசனங்கள், விளக்கவுரைகள் மற்றும் வரைபடங்கள் அடங்கிய வேதபுத்தகம் ஏராளமாக இப்பொழுது கிடைக்கின்ற ஒன்றாக இருக்கிறது. புதிய விசுவாசி அடிப்படையான மொழி பெயர்ப்பைப் படிப்பது நல்லது.

### 2) பொழிப்புரை வேதபுத்தகம்

சரியான மொழிபெயர்ப்புகளாயிராமல் ஆனால் பொழிப்புரைகளாக உள்ள வேதபுத்தகங்கள் உள்ளது. Living Bible , Philips Today’s English (Good News) ஆகிய வேத புத்தகம் இதில் அடங்கும். நல்ல மொழிபெயர்ப்பிலிருந்து படித்து, பொழிப்புரை வேதபுத்தகத்தை மேலும் தெளிவாகப் புரிந்துகொள்வதற்கு பயன்படுத்துவது நல்லது.

### 3) ஒத்தவாக்கிய விளக்கவுரை

அகர வரிசைப்படி வேதத்தில் உள்ள வார்த்தைகள் எப்பகுதியில் உள்ளது, அதன் ஒப்பீட்டு வசனம் எங்கு உள்ளது போன்ற கருத்துக்கள் புத்தகமே ஒத்தவாக்கிய விளக்கவுரை. இப் புத்தகம் வேதபுத்தகத்தை கிரமமாக படிக்க உதவும். எபிரெய மற்றும் கிரேக்க வார்த்தைகளின் அர்த்தமும் கொடுக்கப்பட்டிருக்கும். Strong மற்றும் Young சிறப்பானது.

### 4) அகராதிகள்

முக்கியமான சொற்களில் உங்களுக்கு ஆழமான அறிவு ஏற்படுவதற்கு அகராதி உதவிசெய்கிறது. Unger’s மற்றும் The New Bible Dictionary ஆகியவை பொதுப்படையான பின்னணி, வேதபகுதிகளைப் பற்றியும், வேதாகமத்தில் உள்ள பெயர்கள், புத்தகங்கள் பற்றியும் விளக்கங்கள் கொண்டதாக உள்ளது.

### 5) பிற உபகரணங்கள்:

புவியியல் மற்றும் வரலாறு சம்பந்தமாக அறிய Bible Atlas இருக்கிறது. வேதாகமக் கலைக்களஞ்சியம் Bible encyclopedia களாகிய International Standard அல்லது Zondrvan போன்றவைகள் பயன் உள்ளவைகளாக இருக்கிறது. எளிமையான வேதாகமப் பயிற்சித் திட்டங்களும் பயன் உள்ளதாக இருக்கிறது.

நல்ல வாசிக்கத் தகுந்த மொழிபெயர்ப்பும், சில சாதாரண உபகரணங்களும் முதலில் தேவைப்படுகிறது. வேதபுத்தகத்தைப் படிக்க உபகரணங்கள் வாங்கும்போது, வேதத்துக்குப் புறம்பாகவும், தாராள கொள்கை மற்றும் விமர்சனத்துக்குரியவர்கள் எழுதிய புத்தகங்களை தவிர்க்கவேண்டும். மேற்சொல்லப்பட்ட ஐந்து உபகரணங்களும் ஆங்கிலம் தெரிந்தவர்களுக்கே பயன்படும்.

## முடிவுரை

தேவனுடைய வசனத்தை அறிவதிலே நீங்கள் எங்கு இருக்கவிரும்புகிறீர்கள்? குழந்தையாக இருக்க விரும்புகிறீர்களா? பலமான ஆகாரமாகிய வசனத்தை உட்கொள்ளமுடியுமா அல்லது இப்பொழுது பாலைத்தான் அருந்துகிறீர்களா? (1.கொரி.3:1-3). காலத்தைப் பார்த்தால் போதகராயிருக்கவேண்டிய உங்களுக்குத் தேவனுடைய வாக்கியங்களின் மூல உபதேசங்களை மறுபடியும் உபதேசிக்கவேண்டியதாயிருக்கிறது. நீங்கள் பலமான ஆகாரத்தையல்ல, பாலை உண்ணத்தக்கவர்களானீர்கள். பாலுண்ணுகிறவன் குழந்தையாயிருக்கிறபடியினாலே நீதியின் வசனத்தில் பழக்கமில்லாதவனாயிருக்கிறான். பலமான ஆகாரமானது நன்மை தீமையின்னதென்று பயிற்சியினால் பகுத்தறியத்தக்கதாக முயற்சி செய்யும் ஞானேந்திரியங்களுடையவர்களாகிய பூரண வயதுள்ளவர்களுக்குமே தகும் (எபி.5:12-14).

தேர்வு செய்தல் நம்மைச் சார்ந்தது. நாம் விசுவாசத்தில் புதியவராக அல்லது முதிர்ச்சியடையாதவர்களாக இருந்தால் கர்த்தருக்குள் வளரும்படியாக களங்கமில்லாத ஞானப்பாலாகிய திருவசனத்தின்மேல் வாஞ்சையாயிருப்போம் (1.பேது.2:3). நாம் வசனத்திலே முதிர்ச்சியடையாதவர்களாயிருந்தால் பலமான ஆகாரத்தை நாடுவோம். பகுத்தறியத்தக்கதாக நம்முடைய ஆவிக்குரிய புலன்களைப் பயிற்சிப்போம்.

## பாடம் 9 ற் கான கேள்விகள்

இந்த வாரத்தில் ஒவ்வொரு காலையிலும் நாம் தேவனுடைய வார்த்தையைப் பற்றி பல்வேறு விதமான தியான பயிற்சியைச் செய்வோம். இம்மாதிரி செய்வது தேவனுடைய வார்த்தையை உட்கொள்ளுதல் என்பதைப் பற்றி நாம் விவாதிக்க நம்மை ஆயத்தப்படுத்தும். மேலும் கடந்தவார பாடமாகிய தேவனோடு நேரம் செலவிடல் என்பதற்கு பலம் கூட்டுவதாகவும் அமையும். பின்வருகின்ற முறையிலே நாம் ஆயத்தமாக வேண்டும் என்று கருத்துக்கள் கூறப்படுகிறது.

1) தேவ ஆவியானவர் வெளிச்சம் தர விண்ணப்பம் செய்யவும்.

2) வேத பகுதியை பல முறை வாசிக்கவும்.

3) ஒவ்வொரு பகுதிக்கும் ஒரு சிறிய தலைப்புக் கொடுக்கவும். முக்கியமான கருத்தைப் பற்றி சுருக்கமாக எழுதிக்கொள்ளவும். தனிப்பட்ட வேண்டுதல்களை ஏறெடுக்கவும்.

4) ஒவ்வொரு நாளும் தியான நேரம் முடிந்தபின்பு தியானித்த பகுதியைப் பற்றி கேள்விகளுக்கு பின்பகுதியில் கொடுக்கப்பட்டுள்ள கற்றுக்கொள்ள வழிகாட்டி பகுதியில் எழுதவும்.

## தின அட்டவணை

| | |
|---|---|
| **நாள் 1** | சங்.19:7-11 |
| **நாள் 2** | உபா.11:18-21 |
| **நாள் 3** | 2.தீமோ.2:14-19 |
| **நாள் 4** | சங்.119:9-16 |
| **நாள் 5** | சங்.1 |
| **நாள் 6** | யாக்.1:22-25 |
| **நாள் 7** | மறுபடி பார்த்தல் |

## மாதிரிப் பயிற்சி அட்டவணை

**பகுதி:** கலா. 1.11-17 திகதி: ஆடி 12, 1998

**தலைப்பு:** மனிதனால் கற்றதல்ல

**சுருக்கம்:** எப்படிப் பவுல் நேரடியாகத் தேவனிடத்திலிருந்து நற்செய்தியைப் பெற்றார் என்று விளக்குகிறார்.

**வேண்டுதல்:** கர்த்தாவே வசனத்தை நானே படிக்க உதவிசெய்யும். நான் வசனத்தை ஒழுங்காகப் படித்தபின் பிற உபகரணங்களைப் படிப்பேன்.

1) **நாள் 1: சங்கீதம் 19:7–11**
*தேவனுடைய வசனத்திற்கு கொடுக்கப்பட்டுள்ள பலவிதமான பெயர்கள் என்ன? வசனத்தில் என்னென்ன குணங்கள் சொல்லப்பட்டுள்ளது? வசனம் என்ன வகையில் உங்கள் வாழ்க்கையைப் பாதித்துள்ளது?*

2) **நாள் 2: உபாகமம் 11:18–21**
*வாழ்க்கையில் எந்தெந்த பகுதிகளாக இருதயம் , கை , ஞாபககுறி, வீட்டு நிலைகால்கள், வாசல் ஆகியவை வசனங்களால் கூறப்பட்டுள்ளது? இப் பகுதியிலிருந்து எப்படி வசனத்தை நன்றாகக் கற்றுக்கொள்ளமுடியும்?*

3) **நாள் 3: 2.தீமோத்தேயு 2:14–19**
*வசனங்கள் 14, 16, 17, 18 வசனங்களில் என்னென்ன பிரச்சனைகள் கூறப்பட்டுள்ளது? வசனம் 15ல் அதன் தீர்வு என்ன? தேவனுடைய வசனத்தைக் கற்றுக்கொள்கிற மாணவன் என்ற முறையில் வசனத்தை ஏற்றுக்கொள்ளக் காரணமாய் இருக்கின்ற நான்கு காரணங்களைக் கூறுக.*

4) **நாள் 4: சங்கீதம் 119:9–16**
சங்கீதக்காரனால் வெளிக்காட்டப்பட்டுள்ள மனநிலையும், செயலும் என்ன? எப்படி ஒருவன் அவனுடைய இருதயத்திலே வசனத்தை மறைத்து வைக்கிறான்?

5) **நாள் 5: சங்கீதம் 1....**
இச் சங்கீதத்தில் பாக்கியவான் யார் என்பதை விளக்குக. அவன் ஏன் வெற்றியுள்ளவனாக இருக்கிறான்? அவன் எதைக் கண்டிப்பாகத் தவிர்க்கவேண்டும்?

6) **நாள் 6: யாக்கோபு 1:22–25**
எப்படி வசனம் கண்ணாடியைப்போல் இருக்கிறது? என்ன செயல் தேவைப்படுகிறது? கீழ்ப்படிதலுக்கும், ஆவிக்குரிய பிரகாரமாக தன்னைத்தானே வஞ்சித்துக் கொள்ளுதலுக்கும் உள்ள உறவு என்ன?

7) **நாள் 7: மறுபடி பார்த்தல்.**
உங்கள் வாழ்க்கையில் தேவனுடைய முக்கியத்துவம் என்ன என்று கற்றிருக்கிறீர்கள்? கற்றுக்கொண்டதன் விளைவாக உங்கள் மனநிலை மற்றும் செயல்களில் என்ன மாற்றம் ஏற்பட்டிருக்கிறது?

**பகுதி:** ______________________________

**தலைப்பு:** ______________________________

**சுருக்கம்:** ______________________________

**வேண்டுதல்:** ______________________________

**திகதி:** ____________

மூழ்கிக் கொண்டிருக்கிறவர்கள், மரித்துக் கொண்டிருக்கிறார்கள், ஆபத்திலிருப்பவர்கள் தேவனை நோக்கி கூப்பிட கஷ்டப்படுவதில்லை எப்படி இயற்கையாக சுவாசிக்கிறோமோ அதுபோல் தான் இதுவும். மனசாட்சியானது இலகுவாகும்போது ஜெபமானது ஒரு உற்சாகமற்றதாக இராமல் தேவன் ஒருவரே செய்ய முடியும் என்ற ஆளமான மன பாரத்தோடு ஓ... தேவனே, தயவு செய்து எனக்கு உதவும் என்பது ஜெபமாக இருக்கிறது. அவர்கள் எப்படி ஜெபம்பண்ணுவது என்று கற்றுத்தர யாரையும் அணுகவில்லை, ஆனால் அவர்கள் ஜெபித்தார்கள். கிறிஸ்தவர்கள் பொதுவாக, அவர்கள் ஆவிக்குரிய ஒழுங்குகளில் அவர்களின் ஜெபவாழ்க்கை பலவீனமானது என்று ஒத்துக்கொள்வார்கள். ஆவிக்குரிய செயலின் வெற்றி ஜெபத்தை சார்ந்துள்ளது என்பதையும் அவர்கள் ஒப்புக்கொள்வார்கள். அதேசமயம் அவர்கள் தோல்வி ஜெப வாழ்க்கையில் உள்ள பற்றாக்குறை என்பதையும் அறிக்கையிடுவார்கள். எல்லாரும் ஜெபித்தாலும், ஜெபமனிதர்கள் சிலபேர்தான் உள்ளனர்.

## கர்த்தரின் ஜெபப்பாடசாலை

சீஷர்கள் ஜெபத்தில் குறைவுள்ளவர்கள் என்று தங்களைக்கண்டு ஆண்டவரே யோவான் தன் சீஷருக்கு ஜெபம்பண்ண போதித்ததுபோல நீரும் எங்களுக்கு போதிக்க வேண்டும் என வேண்டினார்கள் (லூக்.11:1). கிறிஸ்து ஜெபம் பண்ணுவதை கவனித்த சீஷர்கள் இவ்வேண்டுகோளை விடுவிக்கின்றனர். அவர்கள், கிறிஸ்து ஜெபத்தில் நாள்தோறும் உறுதியாய் தரித்திருப்பதை உணர்ந்தார்கள். அவர் அதிகாலையில் இருட்டோடே எழுந்து ஜெபம்பண்ணப்போனார் (மாற்.1:35). சில சமயம் அவர் இராமுழுவதும் ஜெபம்பண்ணினார் (லூக்.6:12) அவர் சீஷர்களுடைய நலனுக்காகவும், பிறருடைய நலனுக்காகவும் ஜெபம்பண்ணினார் (யோ.17) ஜெபமானது கிறிஸ்துவின் வாழ்க்கையில் அவசரகால தேவையாக இருக்கவில்லை ஆனால் அது அவரின் வாழ்கை முறையாகவே இருந்தது. சோர்ந்து போகாமல் சீஷர்கள் எப்பொழுதும் ஜெபம்பண்ணவேண்டும் என்று கிறிஸ்து விரும்பினார் (லூக்.18:1). அவரின் ஜெபப்பாடசாலையிலே ஒவ்வொரு நாளும் சொல்லாலும், செயலாலும், பாடம் கற்றுக் கொடுக்கப்பட்டது. அவர் கூறினார்: கேளுங்கள் அப்பொழுது உங்களுக்குக் கொடுக்கப்படும், தேடுங்கள் அப்பொழுது கண்டடைவீர்கள். தட்டுங்கள் அப்பொழுது உங்களுக்கு திறக்கப்படும் (மத்.7:7) தொடர்ச்சியாக உறுதியாக வேண்டுகோளை மேற்கொள்ளவேண்டும் என்று வலியுறுத்தப்பட்டுள்ளது. கேளுங்கள், கேட்டுக்கொண்டே இருங்கள். தட்டுங்கள் தொடர்ந்து தட்டிக்கொண்டே இருங்கள் என்பதை இவ்வசனம் வலியுறுத்துகிறது. இக்கருத்தை வலியுறுத்துவதற்காக, பாதிராத்திரியிலே தன் சிநேகிதனின் வீட்டின் கதவை தொடர்ந்து தட்டிய மனிதனின் கதை கூறப்பட்டுள்ளது (லூக்.11:5-9).

தேவன் எப்பொழுதுமே விசுவாசிகள் தன்னை நோக்கி கூப்பிடவேண்டும் என்று அழைக்கிறார் (எரே.33:3) கர்த்தராகிய இயேசு இவ் அழைப்பை விசாலப்படுத்தியும், ஆழப்படுத்தியும் உள்ளார், எப்படியெனில் இதை அவரோடு தொடர்புபடுத்தியுள்ளார். நீங்கள் என்னிலும், என் வார்த்தைகள் உங்களிலும் நிலைத்திருந்தால், நீங்கள் கேட்டுக்கொள்வதெதுவோ அது உங்களுக்குச் செய்யப்படும் (யோ.15:7) நீங்கள் என் நாமத்தினாலே பிதாவினிடத்தில் கேட்டுக் கொள்வதெதுவோ அதை அவர் உங்களுக்குத் தருவார். கேளுங்கள், அப்பொழுது உங்கள் சந்தோஷம் நிறைவாயிருக்கும்படி பெற்றுக் கொள்வீர்கள் (யோ.16:23-24). இவ் அழைப்பு நம்பத்தகுந்தாக இல்லை, ஆனால் தேவன் பொய்யுரையாதவர் (தீத்து1:3) அவர் கூறியதை விசுவாசியாதவன், அவரை பொய்யராக்குகிறான் (1.யோ.5:10) தேவன் சத்தியபரர், எந்த மனிதனும் பொய்யன் (ரோ.3:4) ஆர்.எ.டோறி எழுதினார் ஜெபம் என்பது, பரலோக வங்கிக்கு செல்வதாகும். அவ்வங்கியில் உலகில் உள்ள எந்த வங்கியைக்காட்டிலும் அதிக மூலதனம் உள்ளது.

# தேவனோடு அளவளாவுதல்

ஜெபம் என்றால் என்ன? இங்கு பிரபலமான, ஆனால் சரியற்ற பல கருத்துக்களைப் பார்ப்போம். சிலர் ஜெபத்தை மனரீதியான ஒரு சாதாரண செயல் என காண்கின்றனர். சில மருத்துவ நிலையங்களில் ஜெபமானது மனம் மற்றும் சரீரத்தின் மீது விளைவுகளை ஏற்படுத்துகிறது என்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. ஜெபமானது உணர்ச்சிகளின் ஆதாரம் என்று இன்னும் சிலர் கருதுகின்றனர். சிலர் ஜெபத்தை மூடநம்பிக்கையாகக் கருதுகின்றனர். பரிசுத்த வேதத்தில் உள்ள தேவனைப் பற்றி சிறிது அறிவுள்ளவர்களுக்கு ஜெபமானது கண்கட்டு வித்தையைப்போல் உள்ளது. மந்திரவாதியாலோ, பூசாரியாலோ அல்லது போலியான பக்திமான்களாலோ ஜெபம் செய்தால் ஒரே மாதிரியான செயலை செய்யும் என நம்புகின்றனர். சிலருக்கு ஜெபம் மனப்பாடம் செய்து அதை திரும்ப திரும்ப கூறுவதாக இருக்கிறது. இங்கு கூறப்பட்டுள்ள எந்த கருத்துமே அறிவுபூர்வமாக உண்மையான தேவனோடு உரையாடுவதைக் குறிக்கவில்லை. இக் கருத்துக்குள், தேவன் கேட்கும் சக்தி படைத்தவர் இடைப்படக்கூடியவர், ஜெபத்தினால் செயற்படுபவர் என்பதை ஏற்றுக்கொள்ளாமல் மறுக்கக் கூடியதாயிருக்கிறது.

வேதவாக்கியங்களில் தேவன் வெளிப்படுத்தியிருக்கிறதின் அடிப்படையில் அவரோடு நேரடியாக அளவளாவுதலே ஜெபம். இது கர்த்தரிடத்தில் ஆத்துமாவை உயர்த்துவதாகவும் (சங்.25:1) கடினமான நிலையிலிருந்து முறையீடுதலாகவும் இருக்கிறது (யாத்.2:23 ; சங்..5:2 ; 18:6) கமரோன் தாம்சன் இவ்வாறு எழுதியிருக்கிறார் ஜெபம் என்பது நம்முடைய, மற்றும் பிறருடைய இயலாமையைக் கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவின் நாமத்தினாலே பிதாவினுடைய அன்பான கண்களுக்கு முன்பாககொண்டு வருதலாகும். அவர் அனைத்தையும் அறிந்தவராகவும், கரிசனையுள்ளவராகவும், பதிலளிக்கிறவருமாக இருக்கிறார். ஜெபமானது தேவனைப் பற்றிய ஆவியின் சுவாசமும் வாஞ்சையுமாயிருக்கிறது. ஜெபமானது தேவனுடைய களஞ்சியத்தை திறக்கிற சாவி என்று அழைக்கப்படுகிறது. நம்முடைய தேவைகளை தேவனுக்கு தெரியப்படுத்துவதல்ல ஜெபம். ஏனென்றால், நாம் வேண்டிக்கொள்வதற்கு முன்னமே அவைகளை அவர் அறிந்திருக்கிறார் (மத்.6:8 ; லூக்.12:30). தேவனுடைய நித்திய நோக்கத்தை மாற்றுவதல்ல ஜெபம், ஆனால் அவரின் நித்திய நோக்கத்தோடு ஒத்திருப்பதே ஜெபமாகும். நம்முடைய விசுவாசத்தின் மூலமாக அவர் செயற்படுகிறார். உண்மையில், ஜெபமானது மெய்யான விசுவாசத்தின் செயலாகும். தேவனை பற்றிக் கொள்வதற்கு ஜெபமானது ஒரு கருவியாக அனுமதிக்கப்பட்டுள்ளது (ஏசா.64:7) சில நேரங்களில் நாம் நினைக்கிறோம், ஜெபமானது கேட்கிறதாக மட்டும் இருக்கிறது என்று , ஆனால் அது இன்னும் பரந்தபகுதியை உடையதாகவும் இருக்கிறது. இங்கு ஜெபத்தின் முக்கியத்தன்மைகளைப் பார்ப்போம்.

## 1) புகழ்தல்

அவர் பிரகாரங்களில் புகழ்ச்சியோடு பிரவேசியுங்கள் (சங்.100:4) என்று நமக்கு கூறப்பட்டுள்ளது. தேவனுடைய சமூகத்திலே வர நல்ல வழி என்ன? கர்த்தரைத் துதியுங்கள் அல்லது இதற்கு இணையான எபிரெயசொல் அல்லேலூயா என்பது சங்கீதங்களில் அதிக இடங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளது. தேவன் தொழுதுகொள்ளுகிறவர்களை விரும்புகிறார் என இயேசு சமாரிய ஸ்திரிக்குப் போதித்தார் (யோ.4:23). தொழுதுகொள்ளுதல் என்பது தேவன் எப்படிப்பட்டவர் என்பதை பற்றியதாகும். நமக்கு அவர் என்ன செய்கிறார் என்பதைப் பற்றியதல்ல. இக்கருத்து இன்றைய ஏராளமான விசுவாசிகளுக்கு தெரியவில்லை. ஆராதனையில் தேவனுக்கு கொடுத்தல் மட்டுமே பங்குபெறும், அவரிடத்தில் பெற்றுக்கொள்ளுதல் அல்ல (சங்.96:8). என் ஆத்துமா கர்த்தரை மகிமைப்படுத்துகிறது என்று மரியாள் பாடினார் (லூக்.1:46). மகிமைப்படுத்தல் என்பது உயர்வாக கூறுதலாகும் (சங்.34:3). துதி பொருளுள்ளதாக அமைய தேவனுடைய பலவித நாமங்களைக் (பெயர்களை) கற்றுக் கொள்ளுங்கள்.

## 2) ஸ்தோத்தரித்தல்

தேவனுடைய சமூகத்தில் பிரவேசிக்கின்ற பொழுது துதியோடு, ஸ்தோத்திரமும் உடன் வருகிறது (சங்.100:4 ; 95:2) கர்த்தருடைய ஏராளமான ஆசீர்வாதங்களைப் பெற்றபிறகும் கூட, இரட்சிக்கப்படாத இவ்வுலகம் அவருக்கு நன்றியற்றதாகவே இருக்கிறது (ரோ.1:21). இயேசு ஒரே சமயத்தில் பத்து குஷ்டரோகிகளை சுகமாக்கினார், ஆனால் ஒருவன் மட்டுமே அவருக்கு நன்றி கூறினான். சுத்தமானவர்கள் பத்துபேர் அல்லவா? மற்ற ஒன்பது பேர் எங்கே? (லூக்.17:17) என இயேசு வினவினார், அவர் நமக்கு செய்த ஒவ்வொரு ஆசீர்வாதங்களையும் நினைக்கவேண்டும். அவைகளில் சரீரப்பிரகாரமான ஆசீர்வாதங்கள், அவரின் பிள்ளைகளோடுள்ள ஐக்கியம், ஆகியவை அடங்கும். கஷ்டங்கள் கூட இருக்கலாம், என்றாலும் தேவன் அக்கஷ்டங்களை நம்முடைய ஆசீர்வாதமாக்குகிறார் (ரோ.8:28). எல்லாவற்றிலேயும் ஸ்தோத்திரம் செய்யுங்கள் (1.தெச.5:18 ; எபே.5:20) ஸ்தோத்திரம் செலுத்துதல் ஆசீர்வாதங்களைப் பெற வழிவகுக்கிறது.

## 3) அறிக்கையிடல்

நம்முடைய தேவன் பரிசுத்த தேவன், எவையெல்லாம் நம்முடைய சிந்தைகளையோ அல்லது செயல்களையோ அசுத்தப்படுத்துகிறதோ அவைகள் ஐக்கியத்திற்கும் நம்முடைய ஜெபங்களுக்கும் தடையாக இருக்கிறது (சங்.66:18). இப்படிப்பட்ட பாவங்களை அறிக்கையிட்டு விட்டுவிட வேண்டும் (நீதி.28:13). நம்முடைய தோல்விகள், பாவசிந்தைகள், செயல்கள் ஆகியவை தேவனுக்கு முன்பாக உண்மையாயிருக்க வேண்டும். தேவனே, என்னை ஆராய்ந்து, என் இருதயத்தை அறிந்து கொள்ளும் என்று சங்கீதக்காரன் வேண்டுகிறான் (சங்.139:23). பரிசுத்தரோடு நடக்க வேண்டுமென்றால், நமக்கு சுத்த இருதயம் தேவையாயிருக்கிறது. தேவனுக்கருகாமையில் இருத்தல் பாவத்தை குறித்து அதிகமாய் அறிவை தருகிறது (ஏசா.6:5). உண்மையாகவே உங்களுடைய பாவங்களையும், தோல்விகளையும் அறிக்கையிடும் பொழுது, அவருடைய மன்னிப்பை ஏற்றுக்கொள்ளுங்கள் (1யோ.1:9).

## 4) பரிந்துபேசுதல்

பிறரைப்பற்றிய கரிசனையும், ஜெபம் காரியங்களை மாற்றும் என்கிற உறுதியும், நம்மை தேவனுக்கு நேராக ஜெபிக்க தூண்டுகிறது. பெயர்கள் அடங்கிய ஜெபமென பரிந்துபேசுதல் அழைக்கப்படுகிறது. மோசே தேவனோடு வல்லமையாக பரிந்து பேசியவன். தன்னுடைய சகோதரியாகிய மிரியாமையும், இஸ்ரவேலரையும் தேவனுடைய நியாயத்தீர்ப்பிலிருந்து தப்புவிப்பதற்கு அவரிடத்தில் வேண்டுதல் பண்ணினான் (எண்.12:1-13 ; யாத்.32:7-14). நம்முடைய கர்த்தராகிய இயேசு பிதாவினுடைய அருகிலிருந்து நமக்காக தினந்தோறும் பரிந்து பேசுகிறார் (எபி.7:25). புதிய ஏற்பாட்டு நிருபங்களில், சபைக்காகவும், தனிநபர்களுக்காகவும் செய்கின்ற விண்ணப்பங்கள் ஏராளமாக அடங்கியுள்ளது. ஒழுங்காக கர்த்தரிடத்தில் விண்ணப்பங்களை கொண்டு செல்ல, உறுதியாக பரிந்து பேசுகிறவர்கள், ஜெபக்குறிப்புக்களை வைத்திருப்பார்கள். நம்மை சுற்றியுள்ள இரட்சிக்கப்படாத அனேகருக்கும், நோயிலும், துன்பத்திலும், இருப்பவர்களுக்கும் நம்முடைய ஜெபம் தேவையாயிருக்கிறது. நம்முடைய ஜெபங்களில், கர்த்தருடைய பண்ணைகளில் ஊழியம் செய்ய ஊழியக்காரர்களை அனுப்பும்படிக்கு தேவனிடத்தில் வேண்டிக்கொள்வது மிக முக்கியமானதாக இருக்கிறது (மத்.9:37-38 ; லூக்.22:31-32).

## 5) விண்ணப்பம் செய்தல்

அன்றன்றுள்ள தேவைகளை கர்த்தருக்கு முன்பாக கொண்டுவரவேண்டும் (மத்.6:11). ஆனால் நாம் அவைகளைப் பற்றிய கவலையில் அகப்பட்டு விடக்கூடாது (மத்.6:23-34). ஆவிக்குரிய விஷயங்கள் பற்றி விண்ணப்பம் பண்ணுதல் அவசியமாகும், கர்த்தருடைய வசனத்தை அறிகிற அறிவிற்காகவும் (சங்.119:34), அநியாயத்திலிருந்தும் மனிதர் செய்யும் இடுக்கண்ணிலிருந்து விடுதலைக்காகவும் (சங்.119:133-134) விண்ணப்பம் செய்யலாம். தினந்தோறும் உள்ள கடமைகளுக்கும், முக்கிய தீர்மானங்களுக்கும் நமக்கு வழி நடத்தல் தேவையாயிருக்கிறது.

அடைக்கலான் குருவிகள் விழுவதையும், நம்முடைய தலையிலுள்ள மயிரெல்லாம் எண்ணியிருக்கிறவராகிய தேவனுக்கு ஜெபத்தில் ஏறெடுக்கப்படுகின்ற எந்த விண்ணப்பமும் சிறியதாக இருப்பதில்லை (மத்.10:29-31).

## ஜெபத்திற்கான நிபந்தனைகள்

ஜெபமானது ஜெபத்தினுடைய சட்டத்திற்குட்பட்டு இருக்கவேண்டும். இவைகள் வேதவாக்கியங்களில் தெளிவாக கூறப்பட்டுள்ளது. சில வேளைகளில் இவைகள் நாம் குழந்தை பருவத்தில் கற்றுக்கொண்ட, உணர்ந்து கொண்ட முறைகளுக்கு மாறாக இருக்கலாம். தேவனுடைய சத்தியத்தின்படி நாம் ஜெபிக்கின்றபொழுது, தேவனிடத்திலிருந்து நாம் நிச்சயமாக பதிலை எதிர்பார்க்கலாம். தேவனால் அளிக்கப்பட்ட விசேஷ சலுகை ஜெபம் என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்வது நல்லது, அது ஒரு உரிமை அல்ல. சிறுமைப்பட்டு, ஆவியில் நொறுங்குண்ட ஜெபத்தை தேவன் ஏற்றுக்கொள்கிறார் (ஏசா.66:2 ; சங்.51:17) மேட்டிமை, அகந்தையான எந்த ஜெபமும் கர்த்தருக்கு விருப்பமில்லாததாக இருக்கிறது (1சாமு.2:3 ; 15:23). ஜெபமானது எவ்வழியில் ஆசீர்வாதமான ஒரு சலுகை என்பதை இப்பொழுது பார்ப்போம்.

### 1) தேவனுடைய பிள்ளைகளின் சலுகை

விசுவாசிகள் இயேசு கிறிஸ்துவில் உள்ள விசுவாசத்தால் தேவனுடைய பிள்ளைகளாயிருக்கிறார்கள் (கலா.3:26) எல்லா தேவனுடைய பிள்ளைகளுக்குள்ளும் பரிசுத்த ஆவியானவர் தங்கியிருக்கிறார். எல்லா இரட்சிக்கப்படாத ஜனங்களும் கீழ்ப்படியாமையின் மற்றும் கோபாக்கினையின் பிள்ளைகளாக இருக்கின்றனர் (எபே.2:1-3). இயேசுவின் இரத்தத்தால் மட்டுமே நாம் தேவனுடைய சமூகத்தில் தைரியமாக பிரவேசிக்க முடியும் (எபி.10:19). இது எல்லா மனிதனுக்கும் உள்ள உரிமை அல்ல பிள்ளைகளின் அப்பத்தை எடுத்து, நாய்க்குட்டிக்குப் போடுகிறது நல்லதல்ல என்று இயேசு கூறினார் (மத்.15.26 ; மாற்.7:27). இயேசு கிறிஸ்துவின் நாமத்தினாலே ஜெபங்கள் இருக்கவேண்டும் (யோ.14:13-14 ; 15:16 ; 16:23-26). அவர் மூலமாகத்தான் தேவனிடத்தில் சேரமுடியும் (யோ.14:6). தேவன் அவருடைய குமாரனில் மகிமைப்படுகிறார். இயேசுவின் நாமத்தில் என்கிற சொல்லை ஜெபத்தின் இறுதியில் பயன்படுத்துவது நாம் எதன் அடிப்படையில் தேவனை அண்டுகிறோம் என்பதை காட்டுகிறது. இயேசுவின் நாமத்தில் ஜெபம் பண்ணுவது, கிறிஸ்துவின் ஆவி நாம் தேவனிடத்தில் ஏறெடுக்கும் ஜெபத்தை தம்முடைய கட்டுப்பாட்டிற்குள் வைத்துக்கொள்வதற்கான அழைப்பாகும். நாம் தைரியத்தோடே வருவோம் (எபே.3:12).

### 2) விசுவாசிப்பவர்களின் சலுகை

எல்லாவற்றையும் முயற்சித்து, அவைகள் எல்லாம் தோல்வியில் முடிந்தபின்பு, இறுதியாக ஜெபம்பண்ண வருகிற மனிதன் தேவனிடத்தில் அற்ப விசுவாசமுள்ளவனாயிருக்கிறான். ஜெபத்தைப்பற்றிய தேவனுடைய சத்தியமான வாக்குத்தத்தங்களை சந்தேகித்து உறுதியில்லாமல் ஜெபம்பண்ணுகிறவன் அவரை கனவீனம் பண்ணுகிறான். அவன் இருமனமுள்ள மனிதன் என்று அழைக்கப்படுகிறான். அப்படிப்பட்ட மனிதன்தான் கர்த்தரிடத்தில் எதையாகிலும் பெறலாமென்று நினையாதிருப்பானாக (யாக்.1:7). தன்னுடைய வல்லமையை உணர்ந்து கொள்ளாத விசுவாசமற்ற சீஷர்களைக் கர்த்தர் கடிந்து கொள்கிறார் (மத்.17:17 ; லூக்.9:41) சந்தேகம் தேவனுடைய வல்லமையான செய்கைகளை நிறுத்த காரணமாயிருக்கிறது (மத்.13:58). கடுகளவு விசுவாசத்தைச் சரியான இடத்தில், அதாவது தேவனிலும், அவருடைய வார்த்தையிலும் வைக்கின்றபொழுது, அது மலையைப் பெயர்க்கும் விசுவாசமாயிருக்கிறது (மத்.17:20). கர்த்தர் ஜனங்களிடத்தில் கேட்டார், நீங்கள் கேட்டுக்கொள்வதை என்னால் செய்ய முடியும் என்று விசுவாசிக்கிறீர்களா? அவர்கள் ஆம் என்று பதில் கூறிய பொழுது, உங்கள் விசுவாசத்தின்படியே ஆகக்கடவது என்றார், விசுவாசித்தவர்கள் பலனைக் கண்டார்கள் (மத்.9:28-30). பிள்ளை சுகமடைய வேண்டும் என்று கிறிஸ்துவினிடத்தில் கூறினர். விசுவாசிக்கிறவனுக்கு எல்லாம் கூடும்

என்றார். அத்தகப்பன் இவ்வாறு பதில் கூறினார் விசுவாசிக்கிறேன் ஆண்டவரே என் அவிசுவாசம் நீங்கும்படி உதவி செய்யும் (மாற்.9:23-24). அம் மனிதனிடத்தில் இயேசு பதில் கூறியபடியே பிள்ளையை விடுவித்தார். நூற்றுக்கு அதிபதி ஜெபத்தைப் பற்றி சிறிது அறிந்திருந்தான். ஆனால் அவனுடைய விசுவாசம் சரியான நபரிடத்தில் இருந்தது (லூக்.7:2-10). விசுவாசமில்லாமல் தேவனுக்குப் பிரியமாயிருப்பது கூடாத காரியம் (எபி.11:6). நீங்கள் பதிலை எதிர்பார்க்கிறீர்களா? எதிர்பார்க்கவில்லையென்றால் கேட்பதற்குப் பிரச்சனைப்படாதீர்கள். விசுவாசமுள்ள ஜெபத்தை நம்பி வாருங்கள் (யாக்.5:15).

### 3) விரும்புகிறவர்களின் சலுகை:

தங்களுடைய சரீரங்களைத் தேவனுக்கு ஒப்புக்கொடுத்தவர்களை அவருடைய நன்மையும், பரிபூரணமான சித்தத்தாலே ஆசீர்வதிக்கிறார் (ரோ.12:1-2). நாம் அவருடைய சித்தத்தை ஏற்கெனவே ஏற்றுக்கொள்ளும்பொழுது அதன்படி நாம் ஜெபம்பண்ணமுடியும். (1.யோ.5:14-15). வேதவசனத்திலே வெளிப்படையாகக் கூறப்பட்டிராத தேவனுடைய சித்தம்பற்றிய விசயங்களை நாம் எப்படி அறிந்துகொள்ளமுடியும்? வேதவாக்கியங்களில் தெளிவாக தேவனுடைய சித்தம் வெளிப்படுத்தப்பட்டுள்ளது. அதை நாம் உரிமை பாராட்டமுடியும். கொள்கையளவில் நமக்குப் பின்பற்ற முடியும். கட்டளை என்ற ரீதியில் அவற்றிற்கு நாம் கீழ்ப்படிய முடியும். எச்சரிப்பு என்ற வகையில் நாம் அவற்றிற்குச் செவிகொடுக்கமுடியும். நாம் தேவனுடைய சித்தத்தின்படி வேண்டிக்கொள்கிறபொழுது, சுயநலவாதிகளாகவும், சுயஇச்சைகளை நிறைவேற்ற வேண்டுதல் செய்கிறவர்களாகவும் இருக்கமாட்டோம் (யாக்.4:3). கர்த்தரை அறியாதவர்கள் பற்றி எப்படி விண்ணப்பம் செய்வது? இழந்துபோனவர்கள் என்ற வகையில் நாம் கிறிஸ்துவினிடத்தில் வேண்டுதல் செய்யமுடியும். ஏனென்றால் எல்லோரும் இரட்சிக்கப்படவேண்டும் என்று அவர் விரும்புகிறார். (2.பேது.3:9 ; 1.தீமோ.2:4). விசுவாசிகளுடைய ஜெபத்திற்கும், இரட்சிப்பை இழந்து போனவர்களுக்கும் இடையே நெருங்கிய தொடர்பு இருக்கிறது. அவர்கள் சார்பாக தேவனிடத்தில் வேண்டுதல் செய்யவேண்டும். நோயாளிகளைப் பற்றிய ஜெபம் என்ன? நாம் ஜெபித்தால் தேவன் அனைவரையும் சுகமாக்குவார் என்று நாம் நம்பமுடியுமா? சில தேவனுடைய அருமையான பிள்ளைகள் இப்படி ஆகும் என்று நம்புகிறார்கள். இருந்தாலும் நாம் பவுலினுடைய அனுபவத்தையும் (2.கொரி.12:8-9), துரோப்பீமுவின் அனுபவத்தையும் (2.தீமோ.4:20), எப்பாப்பிரோத்துவின் அனுபவத்தையும் (பிலி.2:25-30), தீமோத்தேயுவின் அனுபவத்தையும் (1.தீமோ.5:23) கருத்தில் கொள்ளவேண்டும். இவர்கள் தேவனோடு நடந்தபொழுது வியாதியுள்ளவர்களாக இருந்தார்கள். ஒவ்வொரு தேவனுடைய பிள்ளைகளில் உரிமையாக நோய்களைக் குணமாக்குதல் இருக்குமானால் ஒருவர்கூட ஒருபொழுதும் சுகவீனத்தினால் மரித்திருக்கமாட்டார்கள். கிறிஸ்து ஏராளமானவர்களைச் சுகமாக்கினார் அதேபோல் அப்போஸ்தலர்களும் செய்தார்கள். அவருடைய நாமத்தினாலே திரளான ஜனங்கள் சுகமாக்கப்படுகிறார்கள். விசுவாசமுள்ள ஜெபம் பிணியாளியை இன்றும் விடுவிக்கிறது (யாக்.5:15). கர்த்தருக்கு முன்பாக நம்முடைய மனதில் சொஸ்தமாகுதல் தேவனுடைய சித்தம் என்று உறுதியான நம்பிக்கை இருக்குமானால் நாம் அதன் அடிப்படையில் ஜெபம்பண்ணலாம். நாம் எங்கு வாழ்வது, வேலைசெய்வது, பிரயாணம் பண்ணுவது, தேவனுக்காக எங்கு உழைப்பது போன்ற சூழ்நிலை அடிப்படையான தீர்மானங்களுக்கான ஜெபங்களைப் பற்றியும் யாக்கோபு 4:13-15ல் கூறப்பட்டுள்ளது.

நாம் தேவனுடைய சித்தத்ததைச் செய்ய விரும்புகிறோமா (லூக்.22:42)? நாம் தேவபக்தியான ஆலோசனையை ஏற்றுக்கொள்வோமா (நீதி.11:14)? ஒரு செயலைப் பற்றி சமாதானம் ஏற்படும் வரையிலும் நாம் காத்திருக்க விரும்புகிறோம். தீர்மானங்கள் தேவனுடைய தீர்மானங்களின் அடிப்படையில் ஏற்பட நாம் விருப்பமுள்ளவர்களாக இருக்கிறோமா (மத்.6:33). அப்பொழுது அவர் நம்மை வழிநடத்துவார் (நீதி.3:5-6). நாம் தேவனுடைய சித்தத்தைச் செய்ய விருப்பத்தோடு வருவோமாக (யோ.7:17).

# ஜெபத்திற்குப் பதில்கள்

மேற்கூறப்பட்ட அனைத்தும் நிபந்தனைகளையும் நாம் சிந்தித்தால் தேவன் எப்பொழுதும் நம்முடைய ஜெபத்திற்குப் பதிலளிப்பாரா? இதன் பதில் ஆம் ஆகும். தேவனுடைய பதில் பல வழிகளில் வருகிறது என்பதை நாம் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும். லேமன் ஸ்டவுஸ் நான்கு விதமான பதில்களை கூறுகிறார். (1) நேரடியான பதில்கள் (2) காலந்தாழ்ந்த பதில்கள் (3) வித்தியாசமான பதில்கள் (4) மறுதலிக்கப்பட்ட பதில்கள். இதோடு சேர்ந்து தகர்க்கும் பதில்களையும் சேர்த்துக்கொள்ளலாம். இவ் வேண்டுதலை ஏறெடுக்காமல் விட்டுவிடுதல் நல்லது.

## 1) நேரடிப் பதில்கள்

சிறைச்சாலையில் பேதுரு இருந்தபொழுது சபை கூடி ஜெபித்ததும் அவன் விடுதலை ஆனான் (அப்.12:5-11). அல்லது எலியாவின் ஜெபமும் இப் பதிலைச் சார்ந்ததே. முதலில் வானம் மழை பெய்யாதவண்ணம் வேண்டியது, பின்னர் வானத்தைத் திறந்தது (யாக்.5:17-18). சங்கீதக்காரன் சந்தோஷப்படுகிறான் தேவன் அவனின் ஜெபத்திற்குப் பதில் கொடுத்ததற்கு (சங்.116:1-2).

## 2) காலந்த தாழ்ந்த பதில்கள்

காலம் தாழ்ந்த பதில்கள் கர்த்தராகிய இயேசுவின் வருகைக்காக விசுவாசியினால் செய்யப்படும் ஜெபத்தைக் கூறலாம் (வெளி 22:20). காலம் இதுவரையிலும் தகுதியாகவில்லை. மரியாளும், மார்த்தாளும் கர்த்தராகிய இயேசு விரைவில் வந்து தங்கள் சகோதரன் குணமடைய செய்ய வேண்டினர். ஆனால் அவர் லாசரு மரிக்குமட்டும் தாமதித்திருந்தார் (யோ.11:3-6,14-15). இக்கால தாமதம் மரித்தவரை உயிரோடு எழுப்புகின்ற பெரிய அற்புதத்தைச் செய்ய தருணத்தை கிறிஸ்துவுக்கு வழங்கியது. கர்த்தருக்குக் காத்திருப்பது எளிமையான விசயம் அல்ல. ஆனால் அதற்குப் பலன் உண்டு (சங்.69:3 ; 37:7, 9 , 34).

## 3) வித்தியாசமான பதில்கள்

வித்தியாசமான பதில்களில் தேவன் நம்முடைய வேண்டுதலை மாற்றி அவருக்கு நலமானதைத் தருவதாகும். பவுலினுடைய சரீரத்திலிருந்த முள்ளை நீக்குவதைவிடவும் கர்த்தர் அவனுக்கு அதைவிட நன்மையானதைக் கொண்டவராக இருந்தார் (2.கொரி.12:7-9). கெத்சமனேயில் கர்த்தராகிய இயேசுவின் ஜெபத்தைப் பார்க்கும்பொழுது என் பிதாவே இந்தப் பாத்திரம் என்னைவிட்டு நீங்கக்கூடுமானால் நீங்கும்படிசெய்யும், ஆகிலும் என் சித்தப்படியல்ல, உம்முடைய சித்தத்தின்படி ஆகக்கடவது (மத்.26:39) என்று ஜெபித்தார். பிதாவினுடைய பதில் இழந்துபோன மனிதர்கள் அவருடைய குமாரனின் இரத்தம் சிந்துதலினால் இரட்சிப்படைய வேண்டியதாயிருந்தது.

## 4) மறுதலிக்கப்பட்ட பதில்

தன் பலவீனத்திலே எலியா தான் சாகவேண்டுமென்று வேண்டிக்கொண்ட ஜெபம் (1.இராஜா.19:4-5) இவ் வகையைச் சார்ந்தது. இவ் வேண்டுகோளுக்குப் பதிலாக

பக்கம் 82

அவன் பெலப்படுத்தப்பட்டான். சீஷர்கள் சமாரியர்களின் கிராமத்தை வானத்திலிருந்து அக்கினியை வரவழைத்து அழிக்க வேண்டினார்கள் (லூக்.9:54). ஆனால் கர்த்தரோ அவர்களை இரட்சிக்க வந்தார், அழிக்க வரவில்லை.

## 5) தகர்க்கும் பதில்கள்

இஸ்ரவேல் ஜனங்கள் இராஜாவுக்காக வேண்டிக்கொண்டது (1.சாமு.8:5-18), அது தேவனையே தள்ளிவிடுவதாக இருந்தது. எசேக்கியா தன் மரணத்தைத் தள்ளிப்போட ஆவல் கொண்டது (2.இராஜா.20:1-6). அவன் நாட்களைக் கவலைக்குரியதாக

மாற்றியது (20:12-19). இப்படிப்பட்ட நம்முடைய வேண்டுதலைக் கேட்டு தேவன் பதில் தருவார். இருந்தாலும் ஆத்துமாவிலே இளைப்பைத் தருகிறார் (சங்.106:15).

## ஜெபத்தினால் மேலும் உள்ள ஆசீர்வாதங்கள்

### 1) ஆவிக்குரிய பெலன்

நாம் ஜெபிக்கின்ற பொழுது ஆவிக்குரிய பெலன் வருகிறது. நம்முடைய ஆத்துமாவிற்கு புதுபெலன் கிடைக்கிறது (ஏசா.40:31).

### 2) ஆவிக்குரிய பரிசுத்தம்

ஒருவன் கர்த்தருடைய அழைப்பை ஏற்று சோதனைக்குட்படாதபடிக்கு வழித்திருந்து ஜெபம் பண்ணுகிறவனானால் (மத்.26:41) ஆவிக்குரிய பரிசுத்தம் அவன் பங்காயிருக்கிறது.

### 3) ஆவிக்குரிய பலன்

நம்முடைய ஊழியத்தில் தைரியத்திற்காக ஜெபம் பண்ணும்போதும் (அப்.4:29-31). எதிர்ப்பவர்களுக்குத் தகுந்த பதில் கொடுக்க பரம ஞானத்தை நாடும்போதும் ஆவிக்குரிய பலன் ஏற்படுகிறது (அப்.6:10).

### 4) ஆவிக்குரிய ஐக்கியம்

தேவனோடு ஆவிக்குரிய ஐக்கியத்தோடு பண்ணப்படும் ஜெபமானது தேவன் காரியங்களை பார்ப்பதுபோல் நாமும் பார்க்க உதவுகிறது. அவருடைய அறிவிலேயும் வழியிலேயும் வளரவும் நடக்க உதவுகிறது (அப்.10:9-35).

### 5) ஆவிக்குரிய பிரகாசம்

உமது வேதத்திலுள்ள அதிசயங்களை நான் பார்க்கும்படிக்கு என் கண்களைத் திறந்தருளும் (சங்.119:18). நம்முடைய பாதம் நடக்கவேண்டிய வழியைக் காட்டும் (சங்.119:105) என்று நாம் கேட்கின்றபொழுது ஆவிக்குரிய பிரகாசம் ஏற்படுகிறது.

நாம் வந்து சேர்ந்திருப்பவரின் எல்லைற்ற ஆற்றலை ஞாபகத்தில் வைத்துக்கொள்ளுங்கள். அவர் எல்லா தேவைகளையும் தர வல்லமை உள்ளவர். என் தேவன் தம்முடைய ஐசுவரியத்தின்படி உங்கள் குறைவையெல்லாம் கிறிஸ்து இயேசுவுக்குள் மகிமையிலே நிறைவாக்குவார் (பிலி.4:19). மனுஷரால் கூடாதவைகள் தேவனால் கூடும் என்றார் (லூக்.18:27). அவர் நம்முடைய இருதயத்திற்கு சவாலான கேள்வியைக் கேட்கிறார். என்னால் செய்யக்கூடாத அதிசயமான காரியம் ஒன்றுண்டோ? (எரேமி.32:27 ; ஆதி.18:14). நாம் சந்தேகப்படாமல் விசுவாசித்தால் நாம் பதிலை அறிவோம்.

## பாடம் 10ந் கான கேள்விகள்

*1) சங்கீதம் 100:4ல் கூறப்பட்டுள்ள ஜெபத்தின் இரண்டு தன்மைகள் என்ன? அவ்விரண்டிற்கும் இடையே உள்ள வித்தியாசத்தை எப்படி வரைவீர்கள்? எது உங்களுக்குக் கடினமாய் உள்ளது? ஏன்?*

2) எவ்வித உபகாரத்திற்காய் சங்கீதம் 103ல் சங்கீதக்காரன் கர்த்தருக்கு ஸ்தோத்திரம் செலுத்துகிறான்? எப்படி சங்கீதக்காரன் கர்த்தரின் நாமத்தையும், குணத்தையும் துதிக்கிறான்?

3) தேவன் உங்களுக்குச் செய்தவைளைப் பற்றி ஒரு பட்டியலிடுக. அவர் செய்ததற்காக நன்றி கூறவும். தேவனுடைய குணங்களைப் பற்றி ஒரு பட்டியல் தயார் செய்யுங்கள். அவர் யார் என்பதை அறிந்து அவரைத் துதியுங்கள்.

| **நன்றி சொல்வதற்காக காரணங்கள்** | **துதிப்பதற்காக காரணங்கள்** |
|---|---|
| | |
| | |
| | |
| | |
| | |
| | |
| | |
| | |
| | |

4) சங்கீதம் 32:1–5ல் தாவீது எதைப் பற்றி ஜெபம்பண்ணுகிறான்? தேவனிடத்தில் அறிக்கை இடுவதற்கு முன்னும் அதன் பின்னும் ஒரு மனிதனின் நிலை என்ன என்று தாவீது கூறுகிறான்?

5) பிறருக்காக விண்ணப்பம் செய்வதில் சாமுவேல் கொண்டிருந்த முக்கியத்துவம் என்ன (1.சாமு.12:23)? நாம் யாருக்காக விண்ணப்பம் செய்யவேண்டும்?
எபேசி.6:18–20
1.தீமோ.2:1–4
லூக்.6:28
யாக்.5:16

பிறருக்காக ஒழுங்காக தவறாமல் விண்ணப்பம் பண்ணுவதற்கு உங்களால் என்ன செய்யமுடியும்? ஜெப அட்டவணையை (பிற்சேர்க்கை) ஒரு வாரம் பயன்படுத்தவும். பின்னால் நீங்கள் உங்களால் முடியும் வழியைக் கண்டுபிடிக்கலாம்.

6) எந்தெந்த தனிப்பட்ட தேவைகளுக்காக நாம் ஜெபம்பண்ணவேண்டும்?
சங்.37:5
மத்.26:41
எபி.4.16
யாக்.1.5
1.பேது.5:7

7) வெற்றிகரமான ஜெபத்திற்கான நிபந்தனைகளை அடையாளம் காண்க.
யோ.15:7
யோ.14:13
1.யோ.5:14–15
மத்.21:22

இயேசுவின் நாமத்தில் ஜெபம் பண்ணுவது என்பதின் பொருள் என்னவென்று உமது கருத்து என்ன?

8) வல்லமையான ஜெபத்திற்குத் தடையாக இருப்பவைகளை அடையாளம் காண்க.
நீதி.21:13
நீதி.28:9
எசேக்.14:3
மல்.1:8–9
மத்.6:14–15
யாக்.1:6–7
யாக்.4:2–3
1.பேது.3:7

9) ஜெபத்திற்கான பதில்களின் வகையைத் வேதவாக்கியங்களோடு பொருத்துக.

| | |
|---|---|
| – நேரடி | அ) யோ.11:3–6,14–15 |
| – காலந்தாழ்ந்த | ஆ) அப்.12:5–11 |
| – மறுதலிக்கப்பட்ட | இ) எண்.11:18–20 சங்.106:15 |
| – தகர்க்கும் | ஈ) 1.இராஜா.19:4–5 |

10) பிலிப்பியர் 4:6–7ஐ உங்கள் சொந்த நடையில் எழுதுக.

இப் பகுதியோடு எப்படி உங்கள் ஜெபஜீவியத்தை மதிப்பிடுவீர்கள்? என்னென்ன மாறுதல்கள் செய்ய தீர்மானிக்கிறீர்கள்?

## பாடம் 11: நாம் அவரின் சாட்சிகளாய் இருக்கிறோம்.

சராசரி நபர் தன்னுடைய ஆத்மாவின் நித்தியத்தை இழந்து ஆபத்தில் இருக்கிறாரா? கர்த்தராகிய இயேசு கூறினார்: ஜீவனுக்குப் போகிற வாசல் இடுக்கமும், வழி நெருக்கமுமாயிருக்கிறது. அதைக் கண்டுபிடிக்கிறவர்கள் சிலர் (மத்.7:14). கிறிஸ்துவை அறிந்தேன் என்ற எந்தவித அத்தாட்சியில்லாமல் இருக்கிற நண்பர்கள் அல்லது பக்கத்தில் வசிப்பவர்கள் நிலை என்ன? தேவனுடைய ஒரேபேறான குமாரனுடைய நாமத்தில் விசுவாசமுள்ளவனாயிராதபடியினால், அவன் ஆக்கினைத் தீர்ப்புக்குட்பட்டாயிற்று (யோ.3:18). இவ்வசனங்கள் பயங்கரமான வசனங்கள், அமைதியாகவோ, சாத்மீகமாகவோ இருக்க நம்மை அனுமதிக்காது. 95 வீதக் கிறிஸ்தவர்கள் தங்களின் கிறிஸ்தவ அழைப்பின் முக்கிய பகுதியாக காணப்படுகிற, சுவிசேஷத்தை பிறரோடு பகிர்ந்து கொள்வதில்லை. நாம் எப்படி இப்படிப்பட்ட பொதுவான கருத்துடன் ஒப்புரவாக முடிகிறது? 2000 ஆண்டுகளுக்கு முன்னால் கர்த்தராகிய இயேசு கூறினார் அறுப்பு மிகுதி, வேலையாட்களோ கொஞ்சம் (மத்.9:37). தருணத்திற்கோ, தேவைக்கோ எவ்வித பற்றாக்குறையும் இல்லை என்பதை குறித்துக் கொள்ளுங்கள் வேலையாட்களோ கொஞ்சம்.

கர்த்தராகிய இயேசுவுக்கு மனித ஆத்துமாக்கள் மீது கொண்டுள்ள அக்கறை மிகப் பெரிது, ஆதலால்தான் தன்னை புறக்கணித்து நகரத்தை பார்த்து கண்ணீர் விட்டார் (லூக்.19:41-42). ஒருவரும் கெட்டுப்போகாமல் எல்லாரும் மனம் திரும்ப வேண்டும் (2பேது.3:9) என்று விருப்பமுள்ளவராய் இருக்கிறார். எல்லா மனிதரும் இரட்சிக்கப்படவும், சத்தியத்தை அறிகிற அறிவை அடையவும், அவர் சித்தமுள்ளவராயிருக்கிறார் (1.தீமோ.2:4). இவர் தன்னுடைய கிராமம் கிராமமாகச் சென்று தேவனுடைய இராஜ்யத்தை குறித்து பிரசங்கித்து வந்தார். அவர் ஒரு பெரிய தனிநபர் ஊழியர். தனி நபராக ஏராளமான நபர்களை ஆதாயப்படுத்தினார், அவற்றைக்குறித்து சுவிசேஷமே சாட்சி பகரும் அளவுக்கு உள்ளது. அவர் தன்னை கவனிக்கிறவர்களை பார்த்தபோது, கிறிஸ்துவில்லாத பயங்கர நித்தியத்தோடு அவர்களைப் பார்த்தார். அவர்களிடம் தேவனுக்கு பயப்படுங்கள், அவருக்கே ஆத்துமாவை அழிக்க வல்லமை உண்டு என்று கூறினார் (மத்.10:28).

### சாட்சியாக இருக்க அழைப்பு

கர்த்தர் தன்னை பின்பற்றுகிறவர்களை அழைத்ததில் எவ்வித தவறும் இல்லை. என்பின்னே வாருங்கள், உங்களை மனுஷரைப் பிடிக்கிறவர்களாக்குவேன் (மத்.4:19). அவர்கள் ஆழத்திலே வலைகளை போடுவதில் அவர் விருப்பமுள்ளவராயிருந்தார், கடலிலே வாழ்கின்ற மீன்களை விடவும், மனிதரைப் பற்றி அக்கறை உள்ளவராக இருந்தார் (லூக்.5:4,10). ஆவிக்குரிய விசுவாசிகளாக முன்னேறி செல்ல அவர்களை அழைத்தார். இதோ வயல் நிலங்கள், உங்கள் கண்களை ஏறெடுத்து பாருங்கள், அறுக்கிறவன் கூலியை வாங்கி நித்திய ஜீவனுக்காகப் பலனைச் சேர்த்துக் கொள்கிறான் (யோ.4:35-35) மனித இருதயத்திலே அவர்கள் விதையை விதைக்க வேண்டியிருந்தது (மாற்.4:14) ஜெபத்தினாலே நீர் பாய்ச்ச வேண்டியிருந்தது, தேவனுடைய இராஜ்யத்திற்காய் ஆத்துமாக்களை அறுவடை செய்ய வேண்டியிருந்தது. சினேகம் அற்ற உலகிலே உள்ள நீதிமன்ற அறையிலே சாட்சிகளாயிருந்தார்கள் (அப்.1:8) அழிந்து போகிறவர்களுக்கு தேவ செய்தியை கொடுக்க தேவ ஆவியானவர் அவர்களுக்கு கொடுக்கப்பட்டார். அவர் அவர்களை தகுதிப்படுத்தினார், இவ்வாறாக ஆதி விசுவாசிகள் எங்கும் சென்று, வார்த்தையை பிரசங்கித்தார்கள் (அப்.8:4).

பலவீனமான மனிதனிடத்தில் தேவன் இப்படிப்பட்ட கடினமான ஒரு பணியை ஒப்படைத்திருப்பது ஆச்சரியமாக உள்ளது. லீறாய் ஈம்ஸ் எழுதுகிறார் தேவன், நாம் தான் முக்கியமாக சுவிசேஷத்தை பிறருக்கு சொல்லவேண்டும் என்று, அப்பணியை நமக்கு ஒதுக்கியிருக்கிறதற்கு பதிலாக, அவர் யோவான் 3:16 யை தினந்தோறும் வானத்திலே எழுதியிருக்க முடியும் அல்லது நட்சத்திரங்களில் கூட அவரால் எழுதியிருக்க முடியும். நற்செய்தி ஒரு பரிசுத்த ஒப்படைப்பு (1தெச.2:4). நமக்கு இது ஒரு வாழ்வா, சாவா என்ற பிரச்சனை (ரோ.9:3) கர்த்தரால் மீட்கப்பட்டவர்கள் அமைதியாயிருக்காமல் அவர்கள் அதை சொல்லவேண்டும் (சங்.107:2-3) லேகியோனாகிய பிசாசுகள் பிடித்தவன் கல்லறைகள் மத்தியில் கொடுரமான வாழ்க்கை வாழ்ந்து வந்தான். அவன் மீட்கப்பட்ட பொழுதோ, இயேசு அவனை ஒரு சாட்சியாக உடனே அனுப்புகின்றார் (மாற்.5:19). ஒழுக்கமற்ற ஒரு பெண்மணி இரட்சிக்கப்பட்ட பொழுது, இயேசுவின் சுவிசேஷத்தின் முக்கிய சாட்சியாக அந்நியதேசத்திலே மாறினாள் (யோ.4:28-29,39) இயேசுவால் சொஸ்தமான கண்தெரியாத மனிதன், இயேசுவை பற்றி அதிகம் தெரியாதவனாக இருந்த பொழுதிலும் நான் குருடனாயிருந்தேன் இப்பொழுது காண்கிறேன் இது ஒன்றுதான் எனக்குத் தெரியும், என்று கூற முடிந்தது. வேதத்தில் உள்ள எந்த வசனமும், கிறிஸ்துவை அறிக்கைபண்ணுதல் ஆவிக்குரிய வரங்களை போல, ஒரு குறிப்பிட்ட வகுப்பாருக்கு ஒதுக்கப்பட்டதாகவோ, அல்லது அதற்காக பயிற்சி பெற்ற விசுவாசிகளுக்கான பணி என்றோ கூறவில்லை. பேதுருவைப் போல நமக்கு பேச முடியாவிட்டால், அந்திரேயாவைப் போல் பிறரை இயேசுவிடத்தில் கொண்டு வரமுடியும் (யோ.1:40-42) நம்மை சுற்றி இருப்பவர்களை அண்ட நம்மை தவிர வேறு ஒருவராலும் முடியாது, பாவத்திலிருக்கிற ஒருவரை எச்சரிக்க வேண்டியது நம்முடைய பொறுப்பே தவிர, வேறு ஒருவருடையது அல்ல.

## <u>சாட்சியாக இருப்பதற்கு தடைகள்</u>

தேவன் அழைத்த முக்கியமான நோக்கத்தை நிறைவேற்றுவதற்கு, ஏராளமான சக்தி வாய்ந்த தடைகள் விசுவாசிகளுக்கு ஏற்படுகிறது. இதை நாம் கண்ஊடாகப் பார்க்கிறோம்.

### 1) பயம்

பிறருக்கு வெறுப்பு உண்டு பண்ணுகிறோம், பிரச்சனைகளைத் தூண்டி விடுகிறோம், நம்மை வெறியர்கள் என்று அழைப்பார்கள் என்று நாம் சாட்சியாக இருப்பதில் இருந்து பின் வாங்குகிறோம். சில வேளைகளில் தோற்றுவிடுவோமோ என்ற பயமும் நம் உள்ளத்தில் ஏற்படுகிறது. ஆனால் வேதம் கூறுகிறது, மனுஷருக்கு பயப்படும் பயம் கண்ணியை வருவிக்கும் (நீதி.29:25). பயம் தேவனுடைய ஆசீர்வாதத்தை தடுக்கிறது, அது மட்டுமல்ல பயப்படாதே எந்த வார்த்தையை அடிக்கடி நினைவு கூறுவதற்கு எதிராகவும் பயம் என்ற சொல் நிற்கிறது. நாம் என்ன செய்ய முடியும்? முழுதைரியத்திற்காக ஜெபம் பண்ண முடியும் (அப்.4:30). அந்த வகையில் பவுல் கூட பயத்தை அறிந்திருந்தார், எவ்வாறாகிலும் தேவன் அவருடைய தீர்மானத்தை ஆசீர்வதித்து அவனை ஒரு சாட்சியாக நிறுத்தினார் (1கொரி.2:3). நாம் திடம் கொண்டு பயம் இல்லாமல் இருக்கும்போது, பிற விசுவாசிகள் திடம் கொள்ளுவார்கள் (பிலி.1:14). பயம் இருந்தாலும் தைரியம் செயலாற்றுகிறது.

### 2) வல்லமையினுடைய பற்றாக்குறை

கிறிஸ்துவின் சுவிசேஷத்தை நம்முடைய வாழ்க்கை வெளிக்காட்டவில்லை என்றால் நாம் வெற்றி பெறமாட்டோம் (பிலி.1:27). ஆவியானவரின் வல்லமை இல்லாமல் கர்த்தரை பின்பற்றுகிறவர்கள் சாட்சியாக இருப்பதை அவர் விரும்பவில்லை

(லூக்.24:49). தேவ பக்தி உள்ள விசுவாசியின் சாட்சியாக இருப்பது ஆவியினாலும், வல்லமையாலும் வெளிப்படுவதாகும் (1கொரி.2:5).

### 3) பயிற்சியினுடைய பற்றாக்குறை

கர்த்தர் தன்னுடைய சீஷர்களுக்குப் பயிற்சி அளிக்க ஏராளமான நேரத்தை செலவழித்தார். நாம் தர்மசங்கடமான நிலையில் இருப்பதாகவும், சரியா, பொருத்தமான வேதவசனங்களை பயன்படுத்தத் தெரியாதவர்களாகவும் இருப்போமானால் நாம் தட்டுத்தடுமாறியவர்களாகவும், பணியை இடையில் விட்டுவிடுகிறவர்களாகவும் இருப்போம், ஆகவே நமக்கு தனிப்பட்ட முறையில் நற்சாட்சி தேவையானதாகவும், தகுதியாகவும் இருக்கிறது. இரட்சிப்பின் வழியை குறித்துத் தெளிவாக கூறுவதற்கு சுவிசேஷத்தில் உள்ள சில எளிமையான வசனங்களை மனதில் ஞாபகப்படுத்தி வைத்திருக்க வேண்டும். அடிக்கடி பயன்படுத்துகின்ற எளிமையான தொடர்ச்சி பின்வருகிறது:

1. தேவன் நமக்கு நித்தியஜீவனை அளிக்கிறார் (யோ.5:24).
2. எல்லாரும் பாவிகள் (ரோ.3:23).
3. பாவத்தின் சம்பளம் மரணம் (ரோ.6:23).
4. எல்லா மனிதரும் பாவ நிவிர்த்தி செய்யப்படும் பொருட்டு மனம் திரும்புங்கள் (அப்.3:19-20).
5. நம்முடைய பாவங்களை கிறிஸ்து சிலுவையின் மேல் சுமந்தார் (1பேது.2:24).
6. கிறிஸ்து மாம்சத்தில் வெளியான தேவனாக இருக்கிறார் (யோ.1:1,14).
7. இரட்சிப்பு கிருபையினாலே, கிரியையினால் அல்ல (எபே.2:8-9).
8. கிறிஸ்துவை ஏற்றுக் கொள்ளுதல் நித்தியஜீவனாகும் (1யோ.5:11-12).
9. நாம் அவரை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று அழைக்கப்படுகிறோம் (யோ.1:12).
10. இயேசுவை கர்த்தர் என்று அறிக்கை இடவேண்டும் (ரோ.10:9-10).
11. நமக்கு நித்தியஜீவன் உண்டு என்று நாம் அறிய முடியும் (1யோ.5:13).

### 4) செயல்படுதலில் பற்றாக்குறை

மற்றெல்லாப் பற்றாக்குறையை நீக்கினாலும், செயற்படுதலில் உள்ள பற்றாக்குறை தொடரலாம். புதிதாக கிறிஸ்துவுக்குள் வந்தவர்கள் தீவிரமாக முதல் சில நாட்கள் சாட்சியாக இருக்கிறார்கள். தேவையற்ற தாமதத்தைப் பற்றி பிரசங்கி 11:4ல் சுட்டிக்காட்டப்பட்டுள்ளது, காற்றை கவனிக்கிறவன் விதைக்கமாட்டான். மேகங்களை நோக்கிறவன் அறுக்கமாட்டான்.

# வசனத்தினுயை சாட்சி

கிறிஸ்துவைப் பற்றி பிறருக்கு சொல்லுதல் சாட்சி கூறுதலின் தேவையாய் இருக்கிறது, நாம் இதை எப்படி ஆரம்பிக்க முடியும் என்பதை பார்ப்போம்:

## 1) கிறிஸ்துவைப் பற்றி ஆவலுள்ளவராய் இருங்கள்

கிறிஸ்துவைப் பற்றி பிறருக்கு முன்பாக உற்சாகமுள்ளவராக இருக்கவும். அவர் வரலாற்றிலே மிகவும் பிரச்சனைக்குரிய ஒரு மனிதராக இருந்தபோதிலும் அவர் மிகவும் கவரக் கூடியவராகவும் இருக்கிறார். அவரே முக்கிய பிரச்சனை, சபைகளோ அல்லது வீழ்ந்து போகிற கிறிஸ்தவர்களோ அல்ல.

## 2) துவங்குகிறவர்களாக இருங்கள்

இயேசு தேடுகிறவராய் இருந்தார்: அவர் ஜனங்கள் அவரிடத்தில் வரவேண்டும் என்று காத்திருக்கவில்லை (லூக்.19:10) அவர் இழந்துபோன ஆத்துமாவை தேடி சென்றார். பிறரோடு அறிமுகம் என்னும் பாலத்தைக் கட்டுவதற்கும், சுதந்திரமாக அவரோடு பழகுவதற்கும் தேடி செல்கிறவராக கிறிஸ்து இருந்தார், அவர்களை குறித்து அக்கறை உள்ளவராகவும் இருந்தார்.

## 3) பொதுப்படையான அக்கறையை அமைத்துக்கொள்ளுங்கள்

நாம் நல்ல கவனிப்பாளராக இருக்க கற்றுக்கொள்ளவேண்டும். உலகத்தோடு நம்மை ஈடுபடுத்தாத அல்லது கறைப்படுத்தாத பொதுவான நிலையைக் கண்டு பிடிக்கமுடியாது. உலகிலே தொடர்ந்து முக்கியமான நிகழ்ச்சி நடந்து கொண்டு இருக்கின்றன, அவைகள் ஆவிக்குரிய சம்பாசனைகளைத் துவங்குவதற்கு வாய்ப்பளிக்க முடியும். அது மட்டுமல்ல, மக்களுடைய ஆவல்களும், தேவைகளும் வெளிப்படையாக காணப்படுபவைகளாக இருக்குமானால், அதன் மூலமாகக் கூட ஆவிக்குரிய விஷயங்களை பகிர்ந்து கொள்ள முடியும்.

## 4) தெய்வீக நியமனத்துக்காக ஜெபிக்கவும்

தேவன் ஆத்துமாவைத் தேடி சென்று நடத்த விருப்பமுள்ளவராக இருக்கிறார் (அப்.8:26-39) ஒவ்வொரு தனிநபரும் தேவனுக்கு முக்கியமானவர்களாக இருக்கிறார்கள். ஒரு மனிதரிடம் பேசுவதற்காகக் கூட அவர் ஊழியக்காரரை நீண்ட தூரம் வழி நடத்துவார் (யோ.4:3-7). கிறிஸ்துவுக்காக ஒரு ஆத்துமாவையாவது ஆதாயம் செய்ய ஜெபம் பண்ணுவோம்.

## 5) தேவனுடைய வசனத்தைப் பயன்படுத்துங்கள்.

வார்த்தை விதைகளாக இருக்கிறது. மனிதன் மறுபடி பிறப்பதற்கு அது ஒரு கருவியாக இருக்கிறது. (1பேது.1:23). நாம் அதை பிறருக்கு முன்பாக உயர்த்திப் பிடிக்க வேண்டும். (பிலி.2:14). தேவன் தன்னுடைய நோக்கத்தை அவருடைய வாயில் இருந்து புறப்பட்ட வசனம் நிறைவேற்றுவதைப் பாருங்கள். (ஏசா.55:10-11).

## 6) உங்களுடைய சுயசாட்சியை பகிர்ந்து கொள்ளுங்கள்

நீங்கள் உங்களுடைய இரட்சிப்பைக் குறித்து தெளிவுள்ளவர்களாக இருக்கவேண்டும். அவைகள் பிறருடைய வழியைத் தெளிவு படுத்துகிற ஆற்றல் உள்ளவைகளாகவும் இருக்க வேண்டும். முதலில் சாட்சியை எழுதுங்கள், திரும்ப திரும்பப் படியுங்கள், பிறகு பயன்படுத்துங்கள். அடுத்தபாடம் இதைப்பற்றிக் கூறி உங்களுக்கு உதவி செய்யும்.

### 7) நல்ல கேள்விகளை பயன்படுத்துங்கள்

இதுவே கர்த்தராகிய இயேசு பின்பற்றின முறையாகும். ஆவிக்குரியவைகளைப் பற்றி நீங்கள் அக்கறை உள்ளவர்களாக இருக்கிறீர்களா என்று கேளுங்கள். கருத்து அறிய விடப்படும் கேள்வித்தாளை பயன்படுத்துகிறவர்கள் இப்படிப்பட்ட கேள்விகளை பயன்படுத்தலாம். நாங்கள் இன்றைய வாழ்க்கையில் இயேசு கிறிஸ்து எப்படி தொடர்புடையவராக இருக்கிறார் என்று மக்களிடம் பேச வந்துள்ளோம். நீங்கள் சில நிமிடங்கள் இதற்காக ஒதுக்குவீர்களா? உலகத்தில் இன்றைக்கு என்ன நடைபெறுகிறது, அது எங்கே ஆரம்பித்து என்ற கேள்வி மூலம் அவர்களின் மனநிலையை ஆராய்ந்து பாருங்கள். தற்காலத்தில் ஏராளமான புத்தகங்கள் மரணத்திற்கு பின் வாழ்வு உண்டா? என்ற கேள்வி பிரபலமானதாக உள்ளது. இதன் மூலம் கூட ஆவிக்குரிய சம்பாசனையை துவங்கலாம்.

## ஜீவியத்தினுடைய சாட்சி

நம்முடைய சாட்சி நம்முடைய சொல்லோடு நின்று விடுவதில்லை, ஆனால் அவை நாம் நடத்துகிற வாழ்க்கையோடு கூட தொடர்புடையதாக இருக்கிறது மனிஷர் உங்கள் நற்கிரியைகளைக் கண்டு, பரலோகத்தில் இருக்கிற உங்கள் பிதாவை மகிமைப்படுத்தும்படி, உங்கள் வெளிச்சம் அவர்கள் முன்பாக பிரகாசிக்கக்கடவது (மத்.5:16). கிறிஸ்தவத்தை எதிர்த்துச் சொல்லப்படுகிற பொதுவான குற்றச்சாட்டு சபையிலே ஏராளமான மாயக்காரர்கள் இருக்கிறார்கள் என்பதாகும். கிறிஸ்தவனாக மாறாதிருப்பதற்கு இது ஒரு சாக்காக இருந்தாலும், ஒரு மாயைக்காரன் சபையிலே இருப்பது அதுவே மிக அதிகமான ஒன்று என்பதை நாம் ஒத்துக்கொள்ள முடியும். நம்முடைய கர்த்தர் பக்தி வேஷம் தரித்த மாயைக்காரர்களைக் கண்டனம் செய்தார் (மத்.23:13-39). பிறர் நம்மை தீமையான எதையும் சொல்ல வெட்கப்படும்படி நாம் நல்ல ஜீவியம் நடத்த வேண்டும் (தீத்து2:1,8, 1பேது.3:16).

எல்லா விசுவாசிகளும் சாட்சியாக இருக்க அழைக்கப்பட்டிருந்தாலும், தேவன் பயன்படுத்தும்படியான எல்லாரும் தங்களை அவருக்கு கிடைப்பவர்களாக ஆயத்தப்படுத்திக் கொள்ளவேண்டும். ஜீவியத்தில் இச்சிறப்பான குணங்கள் வெளிப்படையாகத் தெரியவேண்டும்.

### 1) தேவன் போஷிக்கிற ஜீவியம்

உண்மையான திராட்சைக்கொடி கனிகொடுக்கும்படி செடியைச் சார்ந்து நிற்கும், அதுபோல திராட்சைச்செடியாகிய கிறிஸ்துவைக் கொடியாகிய நாம் சார்ந்து நின்றால் கனி கொடுக்கும்படி நம்மை போஷிப்பார். கிறிஸ்து கூறினார், என்னை அல்லாமல் உங்களால் ஒன்றும் செய்யக்கூடாது (யோ.15:5). தினந்தோறும் பயனுள்ள தியான வாழ்க்கையை இப்போஷித்தலின் ஆதாரமாக இருக்கிறது. கிறிஸ்துவின் வசனம் சகல ஞானத்தோடு நம்மிடம் பரிபூரணமாய் வாசமாய் இருக்கவேண்டும் (கொலோ.3:16).

### 2) தேவனுடைய கட்டுப்பாட்டிற்குள் இருக்கும் ஜீவியம்

குயவனுடைய கையில் களிமண் அவன் விரும்புவது போல செய்ய தன்னை ஒப்புக் கொடுப்பது போல, கீழ்ப்படிதலே முதன்மையான தரமாக இருக்கிறது (எரே.18:6). கிறிஸ்துவின் ஆவியின் கட்டுப்பாட்டிலே, நாம் கர்த்தரைப் பற்றி பேச தெய்வீக நியமனத்தோடு நடத்தப்படுவோம்.

### 3) பிறருக்காக பொங்கிவழியும் ஜீவியம்

நம்முடைய வாழ்க்கையில் நதியைப் போல ஆவி பொங்கி பொங்கி வழியும்போது, பிறர் தொடப்படுகிறார்கள், களைப்பை ஆற்றிக் கொள்கிறார்கள் (யோ.7:38). கிறிஸ்துவினுடைய வாழ்க்கை பொங்கி வழிதலே. சக்தி வாய்ந்த சாட்சி பகிர்தலாகும்.

வசனங்களையும், நம்முடைய அன்றாடத் திட்டங்களை பிறருக்கு எடுத்துச் சொல்வதை விடவும், நம்முடைய வாழ்க்கையில் காணப்படுகின்ற அன்பின் செயலே பிறரை கவரும். நாம் தனியாக பிறரிடம் இருந்து பிரிந்திருக்காமல் பிறர் நம்மை எப்பொழுதும் தங்கு தடையின்றி அணுகுவதற்கு நம் வாழ்க்கையை அமைத்துக் கொள்ளவேண்டும் (லூக்.15:1-2). கிறிஸ்து ஜனங்களின் பிரச்சனைகளையும், நோய்களையும், கவலைகளையும் அறிந்திருந்தார். அவர் தேவனுடைய வார்த்தையாகிய வசனத்தை விதைக்கும் பொழுது பசித்தவர்களுக்கு ஆகாரத்தையும், பிணியாளர்களுக்கு சுகத்தையும், ஆறுதலையும் அருளினார் (மத்.13:37).

ஏராளமானவர்களுக்கு கிறிஸ்துவைப் பற்றிய உண்மைகள் தெரியும் ஆனால் இவைகள் இரட்சிப்புக்கு தூரமாய் இருக்கிறது. கிறிஸ்துவின் மீது நம்பிக்கை கொள்கிற பொறுப்பு அவசியமாய் இருக்கிறது, இரட்சிக்கப்படாதவர்கள் இப்பொறுப்பை உணரார்கள். அதைத்தான் நாம் பேசவேண்டியதாயிருக்கிறது. கிறிஸ்துவே வாழ்க்கையில் வழி என்பதை நாம் பகிர்ந்து கொள்ள விருப்புகிறோம். நம்முடைய வாழ்க்கையில் அவர் முக்கிய பங்கு வகிக்கும் பொழுது நாம் நன்றாக இதைச் செய்ய முடியும். உண்மையில், கிறிஸ்துவே நம்முடைய ஜீவன் (கொலோ.3:4).

## முடிவுரை

நம்முடைய விசுவாசத்தில் பகிர்ந்து கொள்வதின் முக்கிய நோக்கம், கிறிஸ்துவில் அன்பாக இருக்க வேண்டும் (2கொரி.5:14). அவர் நமக்காக மரித்தார், கட்டளையைத் தந்தார் இதுவே நம்மை செயல்பட செய்வதாக இருக்கவேண்டும். நம்முடைய அடுத்த மிகப் பெரிய நோக்கம் பிறரைப் பற்றிய அன்பான கரிசனையாகும். இவை இரண்டுமே மத்தேயு 22:37-39ல் இருந்து காணப்படுகிறது.

## பாடம் 11 ற் கான கேள்விகள்

1) மாற்கு 5:2–20தை படிக்கவும். சற்று முன்பாக தன்னால் சொஸ்தமாக்கப்பட்ட மனிதரிடத்தில் யேசு என்ன கூறினார் (19வது வசனம்)?

இயேசுவின் வேண்டுதலின் நோக்கம் என்ன?

எப்படி அம்மனிதன் இயேசுவின் வேண்டுதலுக்கு கீழ்ப்படிந்தான், அதனால் விளைவு என்ன (20ம் வசனம்)?

இதிலிருந்து உங்களுடைய வாழ்க்கையில் நீங்கள் என்ன கடைப்பிடிக்க முடியும்?

2.கொரிந்தியர் 5:18,20 வசனத்தின் முற்பகுதியை சொந்த நடையில் எழுதுக!

உங்களுடைய கடமை என்ன?

எப்படி அதை நிறைவேற்ற நோக்கமாய் இருக்கின்றீர்கள்?

3). சுவிசேஷகர்களே சாட்சியாக இருக்கவேண்டும் என்ற கூற்றுக்கு எப்படி நீங்கள் பதில் கூறுவீர்கள்?

4) அவிசுவாசியின் நித்திய முடிவைப் பற்றி பின் வருகின்ற வசனங்கள் கூறுவதென்ன?
மத்.7:13
மத்,13:41–47

உங்கள் வாழ்க்கையில், இழந்துபோனவர்களுக்கு சாட்சி பகர்தலை எப்படி (எசே.33:1–9) ன் படி பொறுப்பெடுத்துள்ளீர்கள்?

5. சில வேளைகளில் நிராகரித்து விடுவார்களோ என்று பயந்து நண்பர்களுக்கு கிறிஸ்துவைப் பற்றி சாட்சி கூறுவதில்லை. நாம் நம்முடைய நண்பர்களுக்கு சாட்சி கூற வேண்டியதாய் இருக்கிறதா? (எசே.33:1–9)?

6. நம்முடைய அன்றாட வாழ்க்கையின் அடிப்படையில் சாட்சி பகர்தல் ஊழியத்தில் மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்தது. தெசலோனிக்கேயர் தங்கள் வாழ்க்கையை கொண்டு சாட்சி பகர்ந்ததற்கு என்ன ஆதாரம் இருக்கிறது (1. தெச.1:5–9)?

மத்தேயு 5.16 உங்கள் வாழ்க்கையில் பக்கத்தில் உள்ளவர்களோடும், பாடசாலை மற்றும் வேலை செய்கிற இடங்களிலும் எவ்வாறு கைக்கொள்ள முடியும் கூறுக?

7) சில விசுவாசிகள் கூறுகிறார்கள் நம்முடைய வாழ்க்கை ஒரு சாட்சியாக இருப்பதால், சுவிசேஷத்தைப் பற்றி ஒன்றும் கூறத்தேவையில்லை என்று. ரோமர் 10:14–17 யை அடிப்படையாகக் கொண்டு இதற்கு எப்படி பதில் கூறுவீர்கள்?

8. வாழ்க்கை சாட்சியையும், வார்த்தை சாட்சியையும் கூட்டாக சேர்க்க முடியும், எப்படியெனில் கிறிஸ்து எப்படி நம்முடைய சொந்த வாழ்க்கையை மாற்றினார் என்று பிறருக்கு எளிமையாகச் சொல்லும் பொழுது யோவான் 9:25ல் கண்தெரியாத மனிதரிடத்தில் இயேசுவைப் பற்றி கேட்டபொழுது என்ன கூறினார்?

எப்படி கிணற்றண்டையில் சந்திக்கப்பட்ட ஸ்திரீ அவளுடைய சாட்சியைப் பகிர்ந்தாள்? (யோ.4:28–29)?

அதன் விளைவு என்ன (வசனம் 39)?

9. புதிய கிறிஸ்தவர்களுக்கு தனி நபர் சாட்சி ஒரு உன்னதமாக ஒரு கருவி மட்டும் அல்ல, ஆனால் அனுபவம் உள்ளவர்களால் வல்லமையாக பயன்படுத்தப்படுபவைகளாகவும் இருக்கிறது. அப்போஸ்தலர் 26:1–29தை படிக்கவும். எப்படி பவுல் தன்னுடைய சாட்சியைப் பயன்படுத்துகிறார்?
சுவிசேஷத்தை கேட்கும்படியாக பவுல் தன்னுடைய சாட்சியின் துவக்கத்திலே என்ன செய்கிறார் (வசனங்கள் 2,3)?

கிறிஸ்துவைச் சந்திப்பதற்கு முன்னால் தன்னுடைய வாழ்க்கையைக் குறித்து சொல்லும் பொழுது (வசனங்கள் 4,5,9–11) ஏன் பவுல் நன்மையான மற்றும் தீமையான காரியங்களை கூறுகிறார்?

எப்படி பவுல் கிறிஸ்தவன் ஆனான் என்பதின் விளக்கத்தை எவ்வாறு வல்லமையாக பயன்படுத்துகிறார் (வசனங்கள் 12–15)? கிறிஸ்துவை சந்தித்தபின்பு அவரின் வாழ்க்கை எதைப்போல் ஆனது (வசனங்கள் 9–22)?

எப்படி பவுல் தன்னுடைய சாட்சியில் சுவிசேஷத்தை சேர்த்துள்ளார் (வசனம் 23)? இது ஏன் முக்கியமாக இருக்கிறது?

*10.* விண்ணப்பம் பண்ணி, வருகிற வாரத்திற்குள் நீங்கள் சாட்சி பகரப்போகிறவரின் பெயரை எழுதுக_______________________________________________

இவருக்காக ஒரு நல்ல செயல் செய்க, பின்வரும் பகுதியில் நீங்கள் எப்படி சாட்சி பகிர்ந்தீர்கள் அவரின் மறு உத்தரவு எப்படி இருந்தது என்பதை எழுதவும்.

கழிந்தவாரம் நாம் செய்த நல்ல செயல்: ________________________________________

_______________________________________________________________.

அதற்குரிய பதில்: _______________________________________________________.

## பாடம் 12: அனுபவ சாட்சி

நீதிமன்ற அறையிலே வழக்கமாகப் பயன்படுத்தப்படுகின்ற சொற்கள்தான் சாட்சி, சாட்சி சொல்லல், அத்தாட்சி போன்றவைகள். கிறிஸ்துவுக்குள் விசுவாசிகளாக இருப்பவர்கள் இந்த உலகமாகிய நீதிமன்ற அறையிலே சாட்சியாகவும், சாட்சி பகர்கிறவர்களாகவும் அல்லது இயேசு கிறிஸ்துவில் உள்ள விசுவாசத்தில் அவரை கர்த்தர் என்றும், இரட்சகர் என்றும் அறிக்கை இடுகின்றவர்களாக இருக்கின்றனர். பவுல் தன்னுடைய இளம் சீஷனாகிய தீமோத்தேயுவுக்கு இவ்வாறு கட்டளை இடுகின்றார், விசுவாசத்தின் நல்ல போராட்டத்தைப் போராடு, நித்திய ஜீவனைப் பற்றிக்கொள், அதற்காகவே நீ அழைக்கப்பட்டாய், அநேக சாட்சிகளுக்கு முன்பாக நல்ல அறிக்கை பண்ணினவனுமாயிருக்கிறாய், எல்லாவற்றையும் உயிரோடிருக்கச் செய்கிற தேவனுடைய சந்நிதானத்திலேயும், பொந்தியு பிலாத்துவின் முன்னின்று நல்ல அறிக்கை பண்ணின கிறிஸ்து இயேசுவினுடைய சந்நிதானத்திலேயும் உனக்கு கட்டளையிடுகிறேன் (1தீமோ.6:12,14). பிறருக்கு முன்பாக கிறிஸ்துவை அறிக்கை பண்ணுதல் மிக பெரிய சிறப்புரிமையாகும், தேவன் பிறரை தனக்குள்ளாககொண்டுவர இவ்வறிக்கை பயன்படுத்த முடியும். சில வேளைகளில் இவ்வறிக்கை பாடுகளுக்கும், மரணத்திற்கும் கூட அழைத்து செல்வதாக இருக்கும். சாட்சி, சாட்சிபகர்தல் என்ற சொற்கள் இரத்தசாட்சி என்று வேத புஸ்தகத்திலே வருகின்ற ஆங்கில சொல்லோடு தொடர்புடையது. வேதத்தில் இதே பொருளில் விசுவாசி தன்னுடைய விசுவாசத்தை மரணத்திலும் கூட சாட்சியாக பகர்ந்ததை குறிப்பிடுவதாக உள்ளது (வெளி.2:13). கர்த்தர் தன்னை பின்பற்றுகிறவர்களை அழைத்தபொழுது தெளிவாகவே அவரோடு அவர்கள் கொண்டுள்ள உறவையும் கூறி உள்ளார். மனுஷர் முன்பாக என்னை அறிக்கை பண்ணுகிறவன் எவனோ, அவனை மனுஷகுமாரனும் தேவதூதர் முன்பாக அறிக்கை பண்ணுவார் (லூக்.12:8,மத்.10:32). நாம் பிறருக்கு முன்பாக வாய் திறந்து பேசுவது கூட இரட்சிப்போடு தொடர்புடையது. என்னவென்றால், கர்த்தராகிய இயேசுவை நீ உன் வாயினாலே அறிக்கையிட்டு, தேவன் அவரை மரித்தோரிலிருந்து எழுப்பினாரென்று உன் இருதயத்திலே விசுவாசித்தால் இரட்சிக்கப்படுவாய் (ரோ.10:9). கர்த்தராகிய இயேசுவில் கொண்டுள்ள விசுவாசம் இரகசியமாக இருக்கக் கூடாது.

### உள்ளடக்கம்

நல்ல சாட்சியில் இரண்டு தன்மைகள் அடங்கியுள்ளது ஒன்று, நிகழ்ச்சியில் உண்மையிருக்க வேண்டும். தர்சு பட்டணத்து சவுலின் மனமாற்றத்தின்போது அனனியா கூறினார் நீ கண்டவைகளையும், கேட்டவைகளையும் குறித்துச் சகல மனுஷனுக்கு முன்பாக அவருக்குச் சாட்சியாயிருப்பாய் (அப்.22:15). நல்ல சாட்சி என்பது கண்டவைகளையும் அல்லது அறிந்தவைகளையும் கொண்டதாகும், கற்பனையால் ஊகித்த ஒன்றோ அல்லது ஏதோ உணர்ச்சியால் உணரப்பட்ட ஒன்றல்ல. எப்படி கிறிஸ்துவைச் சந்தித்தான், எப்படி அவனுடைய வாழ்க்கை மாற்றப்பட்டிருக்கிறது, எந்த அதிகாரத்தின் கீழ் தேவனுடைய பிள்ளையாக தன்னை பிரகடனப்படுத்தினான் என்பவைகள் இயேசு கிறிஸ்துவில் நல்ல சாட்சி பகிர்ந்து கொள்வான். இரண்டாவதாக சத்தயத்தைப் பற்றிய கேள்விகளுக்கு பதிலளித்து ஒரு சாட்சி சத்தியப்பிரமாணம் செய்து கொள்கிறான். உங்களில் இருக்கிற நம்பிக்கையை குறித்து உங்களிடத்தில் விசாரித்து கேட்கிற யாவருக்கும் உத்தரவு சொல்ல எப்பொழுதும் ஆயத்தமாயிருங்கள் (1பேது.3:15) என்று விசுவாசிகள் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். அப்போஸ்தலனாகிய யோவான் தன்னுடைய சுவிசேஷத்தில் தான் மெய் என்று அறிந்தவைகளை சாட்சியாக தருகிறார் (யோ.21:24). பவுல் எழுதுகிறார், உண்மையாகவே அவர் மரணத்தில் இருந்து உயிர்த்தெழுந்த கிறிஸ்துவைக் குறித்து சாட்சி சொல்லுவதாக, அவ்வாறு இல்லை என்றால், அவர் தேவனுடைய பார்வைக்கு முன்பாக பொய் சாட்சி சொல்லுகிறவனாக காணப்படுவான் என்கிறார் (1கொரி.15:15).

ஒரு தேவனுடைய பிள்ளையின் சாட்சி அவன் கிறிஸ்துவினிடத்தில் வர வேண்டியது தேவையாயிருக்கிறது, விசேஷமாக பாவத்தின் பிரச்சனையில் இருந்து விடுபடவேண்டியதாயிருக்கிறது என்பதோடு துவங்குகிறது. விசுவாசித்தவர்கள் அனேகர் வந்து தங்கள் செய்கைகளை வெளிப்படுத்தி அறிக்கையிட்டார்கள் (அப்.19:18). இவையெல்லாம் தேவனுடைய பார்வையிலே தீமையாக இருந்தது. குற்ற உணர்வினால் பிடிக்கப்பட்டிருந்த ஆயிரக்கணக்கானவர்களையும், வாழ்க்கையின் வெறுமையினாலும், சமாதானமற்ற நிலையிலும், மரணத்தைப் பற்றியும், தனிமையைப் பற்றி பயந்திருந்தவர்களுக்கும் கர்த்தராகிய இயேசு விடுதலையை கொடுத்தார். சந்தோஷமும், நல்நோக்கமும் இவைகளுக்கு பதிலாக கிடைத்தது. பாவிகளை இரட்சிப்பதே மேலான நோக்கமாகக் கொண்டு கிறிஸ்து இயேசு உலகத்திற்கு வந்தார் (1தீமோ.1:15). அவர்களை வரப்போகிற கோபாக்கினையிலிருந்தும் விடுவிக்கிறார் (1தெச.1:10). ஆகையால் விசுவாசிகள் இரட்சிப்புக்கு ஏதுவான சுவிசேஷத்தைக் கேட்ட அனுபவத்தைப் பற்றியும் அதை விசுவாசித்தது பற்றியும் (எபே.1:13) சாட்சி கூற வேண்டும். அவர்கள் அவருடைய கிருபையை ஐஸ்வரியத்தின்படி இவருடைய இரத்தத்தின்படியே பாவமன்னிப்பாகிய மீட்பு இவருக்குள் நமக்கு உண்டாயிருக்கிறது (எபே.1:7).

ஒரு நல்ல சாட்சியில் கிறிஸ்துவே மையமாக இருக்கிறார் (அப்.5:31-32) எனவேதான் இயேசு கிறிஸ்துவை பற்றிய சாட்சி என்று சரியாக அழைக்கப்படுகிறது (வெளி.1:2,9). முதல் நூற்றாண்டு விசுவாசிகள், கிறிஸ்து மரணத்திலிருந்து உயிர்த்தெழுந்தார் என்கிற உண்மைக்கு முக்கியத்துவம் கொடுத்து அதை வலியுறுத்தினர் (அப்.2:32 ; 4:33 ; 13:30-31). தீர்கதரிசனம் நிறைவேறுதலும் கண்ணால் கண்டவர்களின் சாட்சியும் அவர்களால் சுட்டிக் காட்டப்பட்டது. நம்முடைய வாழ்க்கையை எப்படி கிறிஸ்து மாற்றினார் என்பதை கூறுவது மிக அவசியமாகும் (1தெச.1:9, ; 1.கொரி.6:9-11). பவுல் ஒரு காலத்தில் தூசிக்கிறவனும் துன்பப்படுத்துகிறவனுமாய் இருந்தான் (1தீமோ.1:13) பின்னர் அவன் கிறிஸ்துவின் முன்னணி ஊழியக்காரன் ஆனான். ஒரு நல்ல சாட்சி, கேட்கிறவர்களின் மனதிலே தேவனிடத்தில் திரும்புவதையும் நம்முடைய கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை விசுவாசிப்பது குறித்து சவாலை ஏற்படுத்தக்கூடியதாக இருக்கும் (அப்.20:21). ஆவிக்குரிய எதிர்புகள் அனைத்தும் ஆட்டுக்குட்டியின் இரத்தத்தினாலும், தங்கள் சாட்சியின் வசனத்தினாலும் விசுவாசிகளால் ஜெயிக்கப்படுகிறது (வெளி.12:11).

## பொதுவான குறிப்புகள்

### 1) வேத வாக்கியங்களில் காணப்படுகிறபடி

அப்போஸ்தலர் 26:1-29ல் கூறப்பட்டுள்ள பவுலின் சாட்சி நமக்கு வேதவாக்கின்படி எடுத்துக்காட்டான சாட்சியாக இருக்கிறது. இச்சாட்சியிலே பவுலின் வாழ்க்கை, அவன் கிறிஸ்துவை ஏற்றுக்கொள்வதற்கு முன்பும், ஏற்றுக் கொண்ட பின்பும் உள்ள நிலை விளக்கப்பட்டுள்ளது. இராஜாவாகிய அகிரிப்பாவின் முன்பாக நிற்கும் பொழுது இம்முறையை பின்பற்றுவதை நினைவில் குறித்துக் கொள்ளவும்.

அ) கிறிஸ்துவை ஏற்றுக்கொள்வதற்கு முன்பாக (26:4-11) பவுல் தன்னுடைய பக்தியின் அடிப்படையில், கிறிஸ்துவை எதிர்த்ததையும் கூறுகிறார்.

ஆ) எப்படி இயேசுவை ஏற்றுக்கொண்டார் (26:12-18) இயேசு கிறிஸ்துவை தமஸ்கு சாலையிலே சந்தித்தது, எப்படி இரட்சகர் அவரின் பாவத்திற்கு நிந்திக்கப்பட்டார், தன்னால் துன்புறுத்தப்பட்டவர்களுக்கு ஊழியம் செய்ய எப்படி அழைக்கப்பட்டார் என்பதை கூறுகிறார்.

இ) கிறிஸ்துவை ஏற்றுக்கொண்ட பின்னர் (26:19-23) தன்னுடைய வாழ்க்கையில் ஏற்பட்ட மாற்றம் எப்படி தன்னைக் கொலை செய்ய தேடினவர்கள் மத்தியிலும் ஒரு போதகரானார் என்பதை விளக்குகிறார்.

### 2) உங்களுடைய சாட்சியில் பிரதிபலிக்க வேண்டியவை

நீங்கள் உங்கள் அனுபவ சாட்சியை பகிர்ந்து கொள்ளும் பொழுது மனதிலே சில விஷயங்களை வைத்துக்கொள்ளுங்கள்:

அ) கிறிஸ்து ஏற்றுக்கொள்ளப்படுவதற்கு முன்னால் எவைகள் உங்கள் முந்தைய வாழ்க்கையை மாற்றம் தேவை என்று வலியுறுத்தியது? அவைகள் எவை எல்லாம் பிறருடைய தேவைகளோடு பொதுவானதாக இருந்தது?

ஆ) எப்படி கிறிஸ்து ஏற்றுக்கொள்ளப்பட்டார். பிறர் உங்களுடைய மாற்றம் ஒரு வெறுமையான மாற்றம் என்று உணராமல், உண்மையிலே ஜீவிக்கிற தேவனோடு ஒரு சந்திப்பு நிகழ்ந்திருக்கிறது என்பதில் மிக தெளிவாக இருக்கவும். எப்படி எப்பொழுது, எங்கே இது நடந்தது?

இ) கிறிஸ்துவை ஏற்றுக்கொண்ட பின்பு, வாழ்க்கையில் என்ன தெளிவான மாற்றம் ஏற்பட்டது? விசுவாசியானதால் என்ன நன்மைகள் இருக்கிறது? பிறருடைய இருதய இயக்கத்தில் எது உங்களைத் தொட்டது?

## <u>திட்டமான உள்ளடக்கம் அடங்கிய சாட்சியை தயாரிக்க வழிகாட்டி</u>

பின்வருகின்ற வழிமுறைகளை உங்கள் சாட்சிகளில் கடைப்பிடிக்க வேண்டும்:

1. கர்த்தராகிய இயேசு கிறிஸ்துவை மையமாக வைத்துக்கொள்ளுங்கள். கிறிஸ்து என்ன செய்திருக்கிறார் என்று கூறவும்.

2. தேவனுடைய வார்த்தையைப்பயன்படுத்துங்கள் (எபி.4:12 ; எபே.6:17). உன் மனசாட்சியைத் தேவன் தொட பயன்படுத்திய வசனங்களைக் கூறவும். இப்படிக் கூறுவது அதிகாரத்தையும், திட நம்பிக்கையையும் கொண்டு வருகிறது (மாற்.1:22).

3. தன்னைச் சுற்றியே இருக்கவேண்டும் (நான், என்னுடைய என்ற சொற்களைப் பயன்படுத்தவேண்டும்). சாட்சி கூறுதல் உரையாடல் போன்றிருக்கவேண்டும். உபதேசிப்பது போன்றோ, இயற்கைக்கு முரணாகவோ இருக்கக் கூடாது.

4. கிறிஸ்தவத்திற்குரிய சொற்களான மறுபடி பிறத்தல், மனம் திரும்புதல், இரட்சிப்பு போன்ற சொற்களுக்கு சரியான விளக்கம் கொடுத்து கேட்கிறவர்கள் புரிந்து கொள்ளும் படியாக பேசவேண்டும்.

5. உங்கள் சாட்சியில் எப்பகுதியில் ஜனங்கள் தங்களை ஒன்றுபடுத்த முடியும் என்ற பகுதியை கருத்தாய் அறிந்திருக்கவும். தெளிவாக புரியக் கூடிய வார்த்தையை பயன்படுத்தவும்.

6. உண்மையான மையக் கருத்தை விட்டு விலகாமல் உங்கள் சாட்சி இருக்கவேண்டும்.

7. உங்கள் வார்த்தைகள் கிருபை பொருந்தினதாக இருக்கவும் (லூக்.4:22). பிற குழுக்களை கண்டனம் பண்ணுவதாக இருக்கக் கூடாது. பணிவோடு பேச வேண்டும்.

## எவ்வாறு சாட்சி தயாரிக்க ஆயத்தப்பட வேண்டும்

1. கிறிஸ்துவில் எப்படி நீங்கள் புதிய வாழ்க்கையை கண்டு கொண்டீர்கள் என்பதை தெளிவு படுத்த ஞானத்திற்காக தேவனை நோக்கி விண்ணப்பம் பண்ணவும்.

2. கிறிஸ்துவை ஏற்றுக்கொள்வதற்கு முன் உள்ள வாழ்க்கை, எப்படி கிறிஸ்துவை ஏற்றுக்கொண்டீர்கள், அவரை ஏற்றுக் கொண்ட பின்னால் உள்ள வாழ்க்கை ஆகிய தலைப்புகள் அடங்கிய மூன்று காகிதங்களை எடுத்து தனித்தனியாய் இம்மூன்றையும் பற்றி எழுதிக்கொள்ளவும்.

3. எழுதப்பட்டுள்ள சாட்சி பொதுவான எடுத்துக்காட்டு மற்றும் ஏழு வழிகாட்டிகளோடு ஒத்துள்ளதா என்று மதிப்பீடு செய்யுங்கள்.

4. குறிப்புகளை வைத்துக்கொண்டே சாட்சி கூற கற்றுக்கொள்ளுங்கள். மூன்று அல்லது நான்கு நிமிடங்களில் உங்கள் சாட்சியைக்கூற 3 X 5 அளவுள்ள அட்டைகளில் நிரப்பி எடுத்து வைத்துக் கொள்ளுங்கள்.

5. குறிப்புகளை வைத்துக் கொள்ளாமல் உங்கள் சாட்சியை மூன்று நான்கு நிமிடங்களில் கூற கற்றுக்கொள்ளுங்கள்.

## வகுப்பறைப் பயிற்சி

இப்பாடத்திற்குரிய பயிற்சி முழுவதும் அனுபவ சாட்சியை பகிர்ந்து கொள்வதாகவே இருக்கும். நாம் பல குழுக்களாகப் பிரிந்து ஒவ்வொருவரும் அவருடைய சாட்சியை வரிசையாக கூற வேண்டும். 3 X 5 அளவுள்ள அட்டைகளில் எழுதப்பட்டுள்ள குறிப்புக்களைப் பயன்படுத்துவதின் மூலம் உங்கள் சாட்சியை ஞாபகத்திற்குக் கொண்டு வரலாம். சிலர் தங்கள் சாட்சியை வாசிக்க விரும்பலாம், அப்படி செய்யும் பொழுது 3 X 5 அட்டைகளை பயன்படுத்தவும். நாம் குழு அங்கத்தினரிடம் சாட்சியை எப்படி சரியாகக் கூறுவது, சுருக்கிக் கொள்வது அல்லது விரிவாக்கிக் கொள்வது போன்ற கருத்துக்களை கேட்டுக் கொள்வது நல்லது.

# பாடம் 12 ந் கான கேள்விகள்

வழிகாட்டிகளையும் எப்படி தாயரிப்பது, சாட்சி என்பதை சரியாகக் கற்று சாட்சி தயாரிக்கவும். உங்கள் சாட்சியை கீழ் கொடுக்கப்பட்டுள்ள மூன்று கேள்விகளுக்கு விடையாக எழுதவும்.

1. இயேசு கிறிஸ்துவை உங்கள் வாழ்க்கையில் கர்த்தரும், இரட்சகருமாக ஏற்றுக் கொள்வதற்கு முன்பாக உங்கள் வாழ்க்கை நிலை என்ன?

2. எப்படி, எப்பொழுது நீங்கள் இயேசு கிறிஸ்துவை கர்த்தரும், இரட்சகருமாக ஏற்றுக் கொண்டீர்கள்? எந்தெந்த சூழ்நிலைகளில்? விசுவாசத்தால் எந்த வேதப் பகுதியை உரிமை கொண்டாடினீர்கள்? எளிமையாக புரியக் கூடிய வகையில் தேவனுடைய வழியை பிறருக்கு காட்டுங்கள். கிறிஸ்துவை மையமாகக் கொள்வதில் நிச்சயமாக இருங்கள்.

3. இயேசு கிறிஸ்துவை கர்த்தர், இரட்சகருமாக ஏற்றுக்கொண்ட பின்னால் நடைமுறை வாழ்க்கையில் என்னென்ன மாற்றங்கள் ஏற்பட்டுள்ளது. தீர்மானங்கள் பற்றியோ, அல்லது வாழ்க்கையில் எடுத்துள்ள முடிவைப் பற்றியோ சொல்ல வேண்டிய அவசியமில்லை.

## பாடம்13: கர்த்தருடைய இராப்போஜனம்

கர்த்தராகிய இயேசுவின் மரணத்திற்கு முன்பாக அவர் காட்டிக்கொடுக்கப்பட்ட இரவிலேதான் கர்த்தருடைய இராப்போஜனம் நடைபெற்றது. இயேசு கிறிஸ்து தன்னுடைய சீஷர்களுடன் சேர்ந்து இவ் இறுதி இரவு போஜனம் அல்லது இரவு சாப்பாடு என்று அழைக்கப்படும் இவ்விருந்தைச் செய்ததால் இது மனதில் ஆழமாக பதியும் காட்சியாக இருக்கிறது. இக்காட்சியானது சித்திரமாக வரையப்பட்டு கிறிஸ்தவ கலையினில் ஒன்றாக தோன்றிய பொழுது உலகிலுள்ள ஏராளமான மக்கள் இக்காட்சியை உடனடியாக அடையாளம் கண்டு கொள்கின்றனர். துவக்கக்கால விசுவாசிகள் இக் காட்சியை தங்கள் மனதில் பதித்து, ஞாபகத்தில் வைத்துக்கொள்ள ரோம பாதாள அறைகளில் உள்ள சுவர்களில் வரைந்து வைத்தனர்.

கர்த்தராகிய இயேசு யூதர்கள் பஸ்கா பண்டிகையின் இரவிலே முற்றிலும் புதிதான இம் முறையை அறிமுகப்படுத்தினார். அவர் அப்பத்தை எடுத்து ஆசீர்வதித்து, பிட்டு அவருடைய சீஷர்களிடத்தில் கொடுத்து, வாங்கி புசியுங்கள் இது என்னுடைய சரீரமாயிருக்கிறது என்றார். பின்பு, பாத்திரத்தையும் எடுத்து, ஸ்தோத்திரம் பண்ணி, அவர்களுக்கு கொடுத்து, நீங்கள் எல்லாரும் இதிலே பானம் பண்ணுங்கள், இது பாவமன்னிப்புண்டாகும்படி அநேகருக்காகச் சிந்தப்படுகிற புது உடன் படிக்கைக்குரிய என்னுடைய இரத்தமாயிருக்கிறது (மத்.26:25-28) மாற்கு மற்றும் லூக்கா சுவிசேஷத்திலும் இதுபற்றி கூறப்பட்டுள்ளது (மாற்.14:22-25 ; லூக்.22:14-20).

### <u>போஜனத்திற்கான பெயர்கள்</u>

இராப்போஜனத்தை ஏற்பாடு செய்ததும், அதில் கனம் பொருந்திய விருந்தினராகவும் கர்த்தராகிய இயேசு இருப்பதால் இது கர்த்தருடைய இராப்போஜனம் என்றழைக்கப்படுகிறது (1.கொரி.11:21). சாதரண இராப்போஜனம் மட்டும் அல்ல, இதில் கர்த்தர் தன்னுடையவர்களுக்காக உண்டுபண்ணிவைத்துள்ளவைகள் இதில் அடங்கி உள்ளது. ஆகவே இது கர்த்தருடைய போஜனபந்தி (1.கொரி.10:21). இவ்விருந்து ஐக்கியம் (1.கொரி.10:16) என்று அழைக்கப்படுகிறது, ஏனென்றால் நாம் இவ்விருந்தில் பங்கு பெறுகின்ற பொழுது கிறிஸ்துவோடு ஐக்கியம் கொள்கிறவர்களாக இருக்கிறோம். அப்பம் பிட்குதல் (அப்போஸ்தலர் 2.:42 ; 20:7) என்று அழைக்கப்படுகிறது. ஏனென்றால் இது சாதாரண, எளிமையாக உணவு உட்கொள்ளுதலை குறிக்கிறதாக இருக்கிறது கர்த்தர் இதை நினைவுகூரும்படி கட்டளையிட்டதால், ஏராளமானோர் இது கர்த்தரை நினைவு கூருதல் என்று கூறுகின்றனர். கர்த்தராகிய இயேசு அப்பத்திற்கும், பாத்திரத்திற்கும், ஸ்தோத்திரம் பண்ணியதால் சிலர் யுகாரிஸ்ட் என்று அர்த்தமுள்ள ஸ்தோத்திரம் செலுத்துதல் என்றும் கூறுகின்றனர் (மத்.26:26) ஆனால் அவ்வாறு வேதவாக்கியத்தில் அழைக்கப்படவில்லை.

சில சபைகள் சாக்கிரமந்து என்று இப்போஜனத்தை அழைக்கின்றனர். ரோம போர் சேவகன் இராணுவத்தில் சேர்க்கின்ற பொழுது எடுக்கின்ற விசுவாச பிரமாணத்தைக் குறிக்கும் சொல்லே இது ஆகும். ஆனால் பிற்காலத்தில் இச் சொல்லின் பொருள் இக்கருத்திலிருந்து விலகி சென்றுள்ளது. சில சபைகளில் இச் சாக்கிரமந்து தேவனுடைய கிருபையை அருளுகின்ற சடங்காக கருதுகின்றனர், மேலும் இதன் அதி உன்னததன்மை பங்கு பெறுகின்றவர்களுக்கு நலம் விளைவிப்பதாகவும் கருதுகின்றனர். சிலர் பாவமன்னிப்புக்கு சம்மந்தமுள்ளது என்று விசுவாசிக்கின்றனர். சாக்கிரமந்து என்ற பதம் வேதத்தில் காணப்படவில்லை. சாக்கிரமந்து கருத்துகளுக்கும், இவ்விருந்தை ஆவிக்குரிய உண்மையை வெளிப்படுத்துகின்ற சின்னங்களின் ஞாபகார்த்தம் என்று கருதப்படுகின்றவர்களுக்கும் வேறுபாடுகள் காணப்படுகிறது. இதை மனதில் திரும்ப கொண்டு வருதல் நல்லது, யூதர்களின் மிருகப் பலிகள் ஒரு போதும் பாவத்தை நிவிர்த்தி செய்வதில்லை,

ஆனால் அவைகள் சிலுவையில் கர்த்தராகிய இயேசு சிந்திய இரத்தத்திற்கு எதிர்பார்ப்புகளாக இருந்தன. அவருடைய இரத்தம் மட்டுமே பாவத்தை நீக்கும் (எபி.9:12-14).

## இராப்போஜனத்திற்கான வரலாற்று பின்னணி

கர்த்தருடைய இராப்போஜனமானது யூதர்கள் கொண்டாடுகின்ற பஸ்கா பண்டிகையின் நாளின் இரவில் கர்த்தராகிய இயேசுவால் ஏற்படுத்தப்பட்டது. அதற்கு 1500 ஆண்டுகளுக்கு முன்பாக தேவனுடைய கரம் இஸ்ரவேலரை எகிப்தின் அடிமைத்தனத்தில் இருந்து விடுவித்து தேவனுடைய கட்டளையின்படி எகிப்து முழுவதும் வரப்போகிற நியாயத்தீர்பிலிருந்து இஸ்ரவேலர் காக்கப்பட, பழுதற்ற ஆட்டுக்குட்டி அடிக்கப்பட்டு அதன் இரத்தம் வீட்டுவாசல், நிலைக் கால்களில் தெளிக்கப்படவேண்டும். இது இஸ்ரவேலரை மகா பெரிதான நியாயத்தீர்ப்பில் இருந்து பாதுகாக்கும். (யாத்.12) தொடர்ந்து கடைபிடித்து, தவறாமல் செய்ய வேண்டி இப்பண்டிகையானது ஆழமான முக்கியத்துவம் கொண்டதாக இருந்தது. இது வருகிற காலத்தில் நடைபெறப்போகிற மகாபெரிய பலியை சுட்டிக்காட்டுவதாக இருந்தது, இப்பலி உலகத்தின் பாவத்தை சுமந்து தீர்த்து தேவனுடைய நியாயத்தீர்ப்பில் இருந்து உண்மையாகவே பாதுகாக்கும். தேவன் தன்னுடைய ஆட்டுக்குட்டியை நீண்ட நாட்களுக்கு முன்பாகவே ஆயத்தப்படுத்தி இருந்தார் (ஆதி.22:.8 ; ஏசா.53:7). யோவான்ஸ்நானகனால் இயேசு கிறிஸ்து உலகத்தின் பாவத்தை சுமந்து தீர்க்கிற தேவ ஆட்டுக்குட்டியாக சுட்டிக்காட்டப்பட்டார் (யோ.1:29). கிறிஸ்துவின் மகிமையான பெயர்களில் ஒன்று ஆட்டுக்குட்டியானவர் என்பதாகும் (வெளி.5:6,12). அவர் பஸ்கா விருந்தின் நிறைவேறுதலாய் இருந்தார். நம்முடைய பஸ்காவாகிய கிறிஸ்து நமக்காக பலியிடப்பட்டார் (1கொரி.5:7). பழைய ஏற்பாட்டில் காணப்படும் இவைகள் வரப்போகிற பெரிய நிறைவேறுதலுக்கு நிழலாக இருந்தது (கொலோ.2:16-17 ; எபி.10:1).

எல்லாப் பக்தியுள்ள யூதரும் பஸ்காவை உண்மையாக அனுசரிப்பார்கள் (மத்.26:17). இது மீட்பின் ஞாபகார்த்தமாக இருந்தது. இந்த புனித மீட்பை ஞாபகப்படுத்தும்பொழுது, இயேசு அப்பத்தையும், இரசத்தையும் ஞாபகச்சின்னமாகக் கடைப்பிடிக்க ஏற்படுத்தினார். அதன் பிறகு விசுவாசிகள் இரட்சிப்புக்காகக் கொடுக்கப்பட்ட அவரின் சரீரத்தையும், சிந்தப்பட்ட அவரின் இரத்தத்தையும் ஞாபகப்படுத்தவேண்டியதாக இருக்கிறது. யூதர்களுக்கு எவ்வாறு பஸ்கா இருந்ததோ, அதேபோல் இராப்போஜனம் கிறிஸ்தவர்களுக்காக ஏற்படுத்தப்பட்டது. இது தேவனுடைய பார்வையில் இருந்து பஸ்காவை மாற்றியது. இஸ்ரவேலருக்கு ஏராளமான சடங்குகள் இருந்தது. ஆனால் கிறிஸ்தவ சபைக்கு சேர்ந்து கடைப்பிடிக்க இது ஒன்றே கொடுக்கப்பட்டது.

கர்த்தராகிய இயேசு விசுவாசிகள் கடைப்பிடிக்கும்படியாய் கொடுத்த இராப்போஜனத்தின் முக்கியத்துவம் பற்றி அப்போஸ்தலனாகிய பவுலுக்கு நேரடியாகக் கூறினார். இயேசு சொன்னார்: என்னை நினைவுகூரும்படி இதைச் செய்யுங்கள் (1.கொரி.11:23-25). கர்த்தருடைய இராப்போஜனம் அவர்கள் ஆராதனையின் ஒழுங்கான ஒரு பகுதியாக இருந்தது (அப்.2:42,46). ஆதிச் சபைகள் வாரத்திற்கு ஒருமுறை இதைக் கடைப்பிடித்தார்கள் (அப்.20:7). உயிர்த்தெழுந்த நாளிலே இது அனுசரிக்கப்பட்டிருந்தது. ஆதிச் சபையின் பிதாக்கள் அல்லது தலைவர்கள் என்று அழைக்கப்பட்டவர்கள் இராப்போஜனம் எல்லாக் கர்த்தருடைய நாளிலும் அல்லது ஞாயிறுதோறும் அனுசரிக்கப்பட்டதாகக் குறித்துள்ளனர்.

## இராப்போஜனத்தை அனுசரித்தல்

### 1) யார் பங்கு பெறலாம்?

நிச்சயமாகவே பஸ்கா யூதர்களுக்கு மட்டுமே என்றால் (யாத்.12:43), கர்த்தருடைய இராப்போஜனம் கிறிஸ்தவர்களுக்கு மட்டுமே. கர்த்தர் (தன்னுடையவர்களுக்காக) முதல் முதலாக இவ்விருந்தை ஏற்படுத்தினார். அவர் உயிர்த்தெழுந்த பின்னர் அவருடைய சீஷர்கள் அவரை நினைவுகூரும்படியாக அப்பம்பிட்டார்கள். மேலும் இராப்போஜனம் ஆயத்தப்பட்ட கிறிஸ்தவர்களுடையது. சில விசுவாசிகள் தன்னுடைய ஆவிக்குரிய நிலையைக் குறித்து அக்கறையின்றி இதில் பங்கு பெறுகின்றனர். அவர்கள் தேவனுடைய நியாயத்தீர்ப்பினால் எச்சரிக்கப்படுகின்றனர் (1.கொரி.11:18-31). மிகத் தீமையான காரியங்களில் ஈடுபடுகிறவர்கள் இப் பந்தியில் பங்கு பெறுதலில் இருந்து புறம்பாக்கப்படவேண்டும் (1.கொரி.5:12-13). அது மட்டும் அல்ல சுவிசேஷத்தையோ, கிறிஸ்துவின் ஆள்த்தத்துவத்தையோ குறைவாக மதிப்பிடுகிற போதனைகளை உடையவர்களும் இதில் பங்கு பெற தகுதியற்றவர்கள் (2.யோ.9,10 ; கலா.5:12-13).

சுருக்கமாகவும் இறுதியாகவும் கூறுவதென்றால் கிறிஸ்துவைக் கர்த்தர் என்றும் இரட்சகர் என்றும் அறிக்கை செய்து, விசுவாசத்திலே தொடர்ந்து நிலையாக நடக்கிறவர்கள் இப் போஜன பந்திக்கு வர தகுதி உடையவர்களாக இருக்கிறார்கள்.

## 2) என்ன விதமான ஒழுங்குமுறையைக் கடைப்பிடிக்கவேண்டும்?

கர்த்தரே நமக்கு முதன்மையான வழிகாட்டியாக இருந்து, அவரால் ஏற்படுத்தப்பட்ட பந்தியை ஆசரிப்பதற்கு மாதிரியை வைத்திருக்கிறார். இது ஒரு ஆடம்பர சடங்கல்ல, அனால் எளிமையான தன்மையைக் கொண்டதாக உள்ளது. கர்த்தர் குறிப்பிட்ட நிலையான எந்த முறையையோ, சட்டத்தையோ கூறி இருக்கவில்லை. கர்த்தர் மட்டுமே விருந்தை முன்னின்று நடத்தினார். பந்தியில் பரிமாறுவதற்கு பயன்படுத்தப்பட்ட இரு சாதாரணபொருட்கள் அப்பமும், பாத்திரமும் ஆகும். விசேஷமான அப்பமாக இருக்கவில்லை. இருந்தாலும் புளிப்பில்லாத அப்பம் அப்பொழுது பயன்படுத்தப்பட்டது. நாம் இப் பந்தியில் பங்கு பெறுகின்றபொழுது பரிசுத்தமாக இருக்கப்படவேண்டும் என்று வலியுறுத்தப்பட்டிருக்கிறது. நம்மில் உள்ள புளித்தமாவைக் களைந்துவிட வேண்டும் (1.கொரி.5:6-8). அப்பம் எவ்வகையைச் சார்ந்ததானாலும் பிரச்சனை அல்ல. பாத்திரம் திராட்சைப்பழ இரசத்தைக் கொண்டதாக இருந்தது (மாற்.14:25 ; மத்.26:29). திராட்சை இரசம் எவ்வளவாய் புளிப்பிக்கப்பட்டது அல்லது எவ்வளவு தண்ணீர் சேர்க்கப்பட்டது என்பது பற்றி முடிவில்லாத விவாதம் நடைபெறுகிறது. வேதம் இவற்றைப் பற்றி தெளிவாகக் கூறவில்லை. அப்பமும் பாத்திரமும் கர்த்தராகிய இயேசுவின் சரீரத்தையும் இரத்தத்தையும் மாதிரியாகக் காட்டுகிறது. நாம் கர்த்தரால் ஆட்கொள்ளப்பட்டவர்களாய் இருக்கவேண்டுமேயொழிய அடையாளமாய் வைக்கப்பட்டுள்ள பொருளின் தன்மையால் அல்ல. ஒவ்வொரு சீஷரும் கொஞ்சம் அப்பத்தையும், பாத்திரத்தையும் பகிர்ந்துகொண்டனர். 1.கொரிந்தியர் 11:32-34ல் கூறப்பட்டுள்ளவைகள் 1.கொரிந்தியர் 11ம் அதிகாரத்தில் விசுவாசிகள் அப்பம்பிட்கவென கூடுகின்றபொழுது கடைப்பிடிக்கின்ற மாதிரியின் தொடர்ச்சியாக இருப்பதாகக் காணப்படுகிறது. அநேக சகோதரர்களும் பங்கு பெற்றதாகச் சுட்டிக்காட்டப்படுகிறது. கிரமமாகவும், ஒழுங்காகவும் இருக்கவேண்டியது குறித்து வலியுறுத்தப்படுகிறது. இத்தோடு ஒரு ஐக்கிய விருந்தும் அடிக்கடி சேர்க்கப்பட்டது.

## 3) நாம் எப்படிக் கர்த்தரின் சரீரத்தை நிதானித்து அறிவது? (1.கொரி.11:29)

கர்த்தராகிய இயேசு நம்முடைய பாவத்தைப் போக்குவதற்காக தன்னையே சிலுவையில் ஜீவபலியாக ஒப்புக்கொடுத்த அந்த மேலான செயலை நினைவுபடுத்துகின்ற பொருள்களின் முக்கியத்துவத்தை நாம் தெரிந்திருக்கவேண்டும் (எபி.9:28). நாம் நம்மை நாமே சோதித்தறிந்திருக்கவேண்டும் (1.கொரி.11:28-32). சிலர் தவறுதலாக இவ் இராப்போஜனத்தை இயேசு அவரின் சரீரத்தைப் புசிக்கவும், இரத்தத்தைப் பானம் பண்ணவும் கூறியதோடு ஒப்பிடுகின்றனர் (யோ.6:53). இவ் வசனம் இராப்போஜனத்தோடு தொடர்புடையது, கிறிஸ்து செய்துமுடித்த இரட்சிப்பின் பணியை விசுவாசிகள் ஆவிக்குரிய பிரகாரமாக ஏற்றுக்கொள்ளுதலைக் குறிப்பதாகும். இது என்னுடைய சரீரம் என்ற வாக்கியம் நானே வாசல் என்ற அவருடைய

வார்த்தையைப் போன்றதாக உள்ளது. இரண்டுமே அர்த்தம் விசேஷமான மொழியால்க் கூறப்பட்டுள்ளது. இப்படிப் பல வாக்கியங்கள் உள்ளது. தவறான போதனைகள் அற்புதகரமான அப்பத்திலும், இரசத்திலும் மாற்றம் ஏற்படும் என்ற கருத்துக்களை ஆராய்ந்து பார்ப்போம்.

### அ) அப்பமும் இரசமும் முறையே இயேசுவின் சரீரமாகவும் இரத்தமாகவும் மாறுதல்:

இக் கருத்தை ஆங்கிலத்தில் டிரான்ஸ்சப்டான்சியேன் (Transubstantiation) என்று கூறுவர். இக் கருத்தின்படி அப்பமும் இரசமும் கிறிஸ்துவின் உண்மையான சரீரமாகவும், இரத்தமாகவும் மாற்றமடைகிறது. இவ்வாறு இவைகள் மாற்றம் அடைவதால் பங்கு பெறுகிறவர்கள் உண்மையாகவே கிறிஸ்துவின் சரீரத்தையும், இரத்தத்தையும் புசிக்கின்றனர். இக் கருத்து ஒவ்வொரு முறையும் பந்தி அனுசரிக்கின்ற பொழுது கல்வாரியின் பாவத்திற்காக செலுத்தப்பட்ட பலி திரும்பவும் திரும்பவுமாக பலியிடப்படுகின்றது என்பதைக் குறிக்கிறது. எபிரெயர் 10:10-18ல் இக் கருத்தை மறுக்கிறது. எப்படியெனில் அநேக தரம் செலுத்தப்படுகின்ற பலி இல்லாமல் பாவத்திற்காக ஒரே தரம் செலுத்தக்கூடிய பலியே உண்டு. அந்தப் பலி முடிவடைந்ததும் பரிபூரணமானதுமாக இருக்கிறது.

### ஆ) கான்சப்டான்சியேசன்: (Consubtantiation)

இக் கருத்தின் பொருள் என்னவென்றால் அப்பமும், இரசமும் மாற்றம் அடையாது. ஆனால் விளக்கம் கூறக்கொள்ளாத நிலையில் கிறிஸ்துவின் சரீரம் திடரூபமாக இருக்கிறது. அது பங்கு பெறுபவர்களுக்குக் கொடுக்கப்படுகிறது. இக் கருத்துக்கு கர்த்தருடைய வார்த்தையில் ஆதாரம் இல்லை.

### இ) இப்பானேஷன்: (Impanation)

இக் கருத்தின்படி பந்தியில் பங்கு பெற்று அவற்றை உட்கொள்ளும்போது பங்கு பெறுவோர் கிறிஸ்துவை ஏற்றுக்கொள்கின்றனர். ஏன் என்றால் கிறிஸ்துவே எலும்பிலும், ஊனிலும் புகுந்து அவருடைய ஜீவனை நமக்குள் பரவச் செய்கிறார். இதற்குக்கூட கர்த்தருடைய வார்த்தையில் ஆதாரம் இல்லை. இக் கருத்தை வலியுறுத்துவது கால்வின் அவார்.

## 4) அப்பம் பிட்பதால் நாம் எதை நிறைவேற்றுகிறோம்?

நாம் இப் பந்தியைக் கடைப்பிடிப்பதால் கர்த்தருடைய வேண்டுகோளுக்கு இணக்கம் தெரிவித்து, அதன்படி செய்கிறோம். மேலும் அவர் மீது அன்புள்ளவர்களாக இருக்கிறோம் என்பதைக் காட்டுகிறது. அப்போஸ்தலரின் நடைமுறைகளுக்கு ஒத்ததாகவும் இது இருக்கும். மொத்தத்தில் விசுவாசிகள் என்ற அளவில் கிறிஸ்து கூறிய முறையின்படி நாம் அவரை நினைவுகூருகிறோம். நம்முடைய வழியின்படி அல்ல. சுவிசேஷத்தின் மூலமாக கிறிஸ்து ஜீவனையும், அழிவில்லாமையையும் வெளிப்படையாக்கினார். அதில் நாம் பங்குள்ளவர்கள் ஆனோம் என்கிற விதத்தில் சந்தோஷப்படுகிறோம். நாம் தனி நபராக பந்தியில் பங்கு பெறுகின்ற பொழுது விசுவாச சமூகத்தில் பங்கு உள்ளவர்களாக இருக்கிறோம். ஒரே அப்பத்தில் பங்கு பெறுவதால் நம்முடைய ஒற்றுமை விளங்கப்பண்ணப்படுகிறது (1.கொரி.10:16). பாத்திரம் ஐக்கியத்தைக் குறிக்கிறது அல்லது பொதுவான பகிர்வைக் குறித்துச் சொல்கிறது (1.கொரி.10:17). அவர் நம்முடன் இருந்து எல்லாவற்றையும் செய்து நிறைவேற்றியதுபோல, நாமும் அவருடன் ஒன்றாய் இருக்கிறோம். அவர் பாவத்திற்கு நேராகவும், நீதிக்கு நேராகவும் கொண்டுள்ள மனநிலையை நாம் பகிர்ந்து கொள்ளுகிறோம். நாம் அப்பத்தைப் புசிக்கும்போதும் பாத்திரத்தில் பருகும்போதும் கர்த்தரின் மரணத்தைப் பிரகடனப்படுத்துகிறோம் (1.கொரி.11:26). இவ்விருந்து இரட்சிப்பின் செய்தியாக இருக்கிறது. இதை எதுவரையிலும் கடைப்பிடிக்கவேண்டும் என்றால் அவர் வரும்வரையிலும் ஒவ்வொரு தடவை நினைவுகூரும்போதும் அது கிறிஸ்துவின் வருகைக்கும் முந்தினதாக இருப்பதற்குச் சாத்தியக்கூறுகள் இருக்கிறது.

# இராப்போஜனத்திற்கு ஆயத்தமாகுதல்

பழைய ஏற்பாட்டில் பஸ்காவுக்கு ஆயத்தமாகுதல் ஏராளமான விஷயங்களை உள்ளடக்கியது. கவனமின்மையால் யாரும் பங்குபெறமுடியாது. நாம் ஆயத்தமற்ற நிலையில் இருக்கக்கூடாது.

## 1) சோதித்தறிதல்:

சுய பரிசோதனையோடு உண்மையான கர்த்தரின இராப்போஜனம் ஆரம்பமாகிறது (1.கொரி.11:28-32). பங்கு பெறுவோர் விடுபட்டுவிடாமல் இருக்க ஆயத்தமாக வேண்டும். ஒருவர் முதலில் அவர் கர்த்தரோடு கொண்டுள்ள உறவைச் சோதித்துப் பார்த்து, தெரிந்து ஏதாவது பாவம் செய்திருந்தால் மன்னிப்புக் கோரவேண்டும். அதன்பின்பு பிறரோடுள்ள உறவைச் சோதித்தறிய வேண்டும் (விசேஷமாகக் கிறிஸ்தவர்களோடு).விருந்தில் பங்கு பெறுவதற்கு முன்னால் பிற விசுவாசிகளோடு உள்ள பிரச்சனையைத் தீர்க்க முயற்சி எடுக்கவேண்டும் (மத்.5:23-24). தேவனுடைய நியாயத்தீர்ப்பு வராமல் இருக்க வேதவாக்கியம், சுயபரிசோதனை நிராகரிக்கப்படுவதைப் பற்றி எச்சரிக்கிறது. கொரிந்து சபையில் அபாத்திரமாக பந்தியில் பங்கு பெற்றதால் அநேகர் வியாதியுள்ளவர்களாகவும், அநேகர் நித்திரை அடைந்தும் இருக்கிறார்கள் (1.கொரி.11:30).

## 2) தியானித்தல்:

விருந்தைப் பொழுதுபோக்கவோ, கர்த்தரை நேரடியாகச் சம்பந்தப்படுத்தாத முறையிலோ நாம் செய்தால் நம்முடைய ஆயத்தம் தோல்விகரமாக இருக்கும். கர்த்தருடைய வார்த்தையை வாசித்தல், ஆவிக்குரிய பாடல்கள் பாடுதல், விசுவாசிகளோடு அல்லது குடும்பத்தாரோடு கர்த்தராகிய இயேசுவைக் குறித்துப் பகிர்ந்துகொள்தல் ஆகிய வழிகளில் கர்த்தரை நினைவு கூருவதற்கு ஆயத்தமாகலாம். நிச்சயமாகவே நேரத்திற்கு முன்பாக ஆயத்தம் ஆக்கப்பட்டதால்த்தான் நாம் கர்த்தருக்குரியதைக் கொண்டுவர முடியும். தாவீது கூறுகிறார் நான் இலவசமாய் வாங்கி, என் தேவனாகிய கர்த்தருக்கு சர்வாங்க தகன பலியைச் செலுத்தாமல் (2.. சாமு.24:24) நாம் முன்கூட்டியே நம்மை நாமே ஆயத்தமாக்கினால் கர்த்தரின் இராப்போஜனம் உயிரற்ற ஒரே மாதிரியான தன்மையில் இருந்து விடுபடக்கூடியதாக அமையும்.

# முடிவுரை

ஆராதனை விசுவாசியின் முதன்மையான பொறுப்பும், தனி உரிமையும் ஆகும் (யோ.4:23 ; லூக்.10:41-42). நாம் ஆசாரியர்கள் என்பதினால் ஆவிக்குரிய பலிகளைச் செலுத்துகிறோம் (1.பேது.2:5). கர்த்தர் கூறியவண்ணம் ஒழுங்காக அவரை நினைவு கூறவேண்டும் என்பது பொழுது போக்கு அம்சங்கள், குடும்ப சம்பந்தமான அனைத்து கடமைகளையும் விட முதன்மையான இடத்தில் இருக்கவேண்டும். விசுவாசியினுடைய ஆசாரியத்துவ படிப்பின் முக்கிய பகுதியாக நம்முடைய உதடுகளின் கனியாகிய ஸ்தோத்திர பலியைச் செலுத்தச் சந்தர்ப்பம் பெற்றிருக்கிறோம் (எபி.13:15). நமக்குரியவைகளை தேவனுக்குக் காணிக்கையாகக் கொடுப்பதும், ஆராதனையின் செயலாக உள்ளது (பிலி.4:17-18). இறுதியாக நம்முடைய சரீரங்களைப் பிரியமுள்ள ஜீவபலியாகக் கொடுக்கவேண்டும் (ரோ.12:1-2). இயேசு சொன்னார் என்னை நினைவுகூருங்கள்.

# பாடம் 13 ந் கான கேள்விகள்

1) முதல் முதலாக பஸ்கா அனுசரித்ததை ஆராய்ந்தது பாருங்கள் (யாத்.12:1–14)! அனுசரித்ததின் நோக்கம் என்ன (வசனங்கள் 1–14)?

பஸ்கா அனுசரிப்பதில் ஆட்டுக்குட்டியின் பங்கு என்ன?

2) எப்படிக் கிறிஸ்து கடைசிப் பஸ்காவை பயன்படுத்தி (லூக்.22:7–18) கர்த்தருடைய இராப்போஜனத்தை அறிமுகப்படுத்தினார் (லூக்.22:19–20)?

கர்த்தராகிய இயேசு அப்பத்திற்கும், பாத்திரத்திற்கும் என்ன புதிய முக்கியத்துவம் சேர்த்தார்?

3) மேற்கூறப்பட்டுள்ளவைகளில், ஏசாயா 53:7 ; யோவான் 1:29 ; வெளி.5.8–9 பார்க்கும் பொழுது தம்முடைய பஸ்காவாகிய கிறிஸ்து (1கொரி.5:7) என்கிற வாக்கியத்தின் பொருள் என்ன?

4) அப்போஸ்தலனாகிய பவுல் 1கொரிந்தியர் 11:23–26ல் கர்த்தருடைய இராப்போஜனத்தைக் குறித்து மேலும் விளக்கங்களையும், நோக்கத்தையும், அதன் பொருளையும் கூறுகின்றார். எங்கிருந்து இதை கற்றுக்கொண்டார்?

இராப்போஜனத்தில் பங்கு பெறுவதால் நாம் என்ன பிரகடனப்படுத்துகிறோம்? விளக்குக.

எவ்வளவு காலம் இவ்வாறாக கர்த்தரை நினைவு கூறவேண்டும்?

5) பவுல் 1.கொரிந்தியர் 10:16–17ல் அப்பத்தையும், பாத்திரத்தையும் குறித்து கூறுவது என்ன?

6) எப்படி ஆதி சபை கர்த்தருடைய கட்டளையை கீழ்ப்படிந்து அவரை நினைவு கூர்ந்தார்கள் (அப்.2:42,20:7)?

7) கர்த்தரை ஆராதிப்பதில் எவ்விதமாக வித்தியாசமான வழிகளில் நம்முடைய பலிகளை செலுத்தலாம் (எபி:13:15 ; பிலி.4:17–18 ; ரோ.12:1–2)?

8) கிறிஸ்தவன் என்ற முறையில் கர்த்தருடைய இராப்போஜனத்தில் பங்கு பெறுவதற்கு முன்னால் அவனின் பொறுப்பு என்ன (1கொரி.11:27–32)?

பாவத்தோடு இராப்போஜனத்தில் பங்கு பெறுவதின் தீவிரத்தன்மையைக் குறித்து 1கொரிந்தியர் 5ம் அதிகாரத்தில் என்ன கூறப்படுகிறது?

9. கர்த்தருடைய இராப்போஜனத்தில் பங்கு பெறுவதற்கு முன்னால் சாதாரணமாக செய்ய வேண்டிய ஆவிக்குரிய ஆயத்தம் என்ன? வரும் நாட்களில் ஆராதனை மிகவும் பொருள் உள்ளதாய் இருக்க நீங்கள் என்ன செய்வீர்கள்?

10. சபையின் ஒட்டுமொத்த அனுபவத்தின் (அப்.2:42) உங்களுக்கு அப்பம் பிட்குதலில் என்ன பொறுப்பு உள்ளது?

**மனந்திரும்பி**
**கனிகொடுங்கள்**

Tamil Christian Assembly
Gollierplatz 12
80339 München

München, März 1998

